# செந்தமிழ் வாசகம்

## நான்காம் புத்தகம்

திருத்திய பதிப்பு

ஆசிரியர்
**வி. தி. ஸ்ரீநிவாசன்**
முன்னாள் தமிழ்ப் பேராசிரியர்
இராசா கல்லூரி, புதுக்கோட்டை.

பதிப்பாளர்
**ஸ்ரீநிவாஸ் அண்டு கோ.**
புதுக்கோட்டை

 1951 [விலை 8 அணா

# முன்னுரை

'செந்தமிழ் வாசகம்' என்னும் இப் புத்தக வரிசை அரசியலார் வெளியிட்டுள்ள பாடத் திட்டத்தை யொட்டி எழுதப் பட்டிருக்கிறது.

மாணவர்கள் வாழ்க்கையில் கண்டு பழகிய பொருள்கள் பற்றிய பாடங்களும் உற்சாகமும் நீதியும் புகட்டக் கூடிய கதைகளும் இப் புத்தக வரிசையில் எழுதப் பட்டுள்ளன. பாடங்கள் அனைத்தும் படிப் படியாக அறியக் கூடிய முறையில் அமைக்கப் பட்டிருக்கின்றன. பாடங்களை யொட்டி கேள்விகள் பயிற்சிகள் முதலியன இடம் பெற்றிருப்பது மாணவர் அறிவுத் திறமையை வளர்க்கச் சாதனமாகும். அவசியமான இடங்களில் இலக்கணப் பயிற்சிக்குச் சுலபமான முறையில் இடமளித்திருப்பது மாணவர்கள் தமிழ் மொழியைப் பிழை நீக்கிக் கற்றுக் கொள்ள பயன் படும்.

ஆதலால் இப் புத்தக வரிசை மாணவருக்கு மொழி அறிவை நல்ல முறையில் அளிக்கும் என்று நம்புகிறேன்.

ஆசிரியர்

# பதிப்பாளர் குறிப்பு

'சென்னைச் செய்தி' பதிப்புக்களில் வெளி ந்துள்ள படங்களில் சிலவற்றை இப் புத்தகத்தில் பயோகித்துக் கொள்ள அனுமதி கொடுத்த சென்னைச் செய்தி' வெளியிடும் அதிகாரிகளுக்கு ங்கள் நன்றி உரியதாகும்.

பதிப்பாளர்.

# பொருளடக்கம்

# செந்தமிழ் வாசகம்

## 1. தமிழகம்

| | | |
|---|---|---|
| எல்லை | பிரிவு | சங்கம் |
| கழகம் | பணி | புகழ் |
| பெருமை | வளம் | கால்வாய் |
| பாசனம் | அறநெறி | வாணிபம் |
| பகுதி | ஓங்க | நிலவ |

நமது தாய் மொழி தமிழ் ஆகும். அது வழங்கும் பகுதிக்குத் தமிழகம் என்று பெயர். இது பாரத நாட்டில் தென்பகுதியில் உள்ளது. நம் தமிழ் நாடு வட வேங்கடம், தென் குமரி என்ற இரு எல்லைகளுக்குள் அடங்கியது. கிழக்கே கடலும் மேற்கே மலைத் தொடரும் தமிழ் நாட்டின் மற்ற இரு எல்லைகளாகும்.

முற்காலத்தில் சேரர், சோழர், பாண்டியர் என்ற மன்னர்கள் தமிழகத்தின் பல பிரிவுகளிலிருந்து ஆண்டு வந்தார்கள். சேரன் செங்குட்டுவன், மனுச் சோழன், பொற்கைப் பாண்டியன் இவர்கள் முறையே அம் மன்னர்களில் சிறந்து விளங்கியவராவர். தமிழ் மன்னர்கள் பல புலவர்களை ஆதரித்துத் தமிழ் மொழியை வளர்த்தார்கள். நாட்டில் பல தமிழ்ச் சங்கங்களும் இருந்தன. முன்னாளில் வாழ்ந்த திருவள்ளுவர், கம்பர்

புகழேந்தி, நக்கீரர், இளங்கோ போன்ற தமிழ்ப் புலவர்களும் அவர்கள் இயற்றிய தமிழ் நூல்களும் நம் தமிழ் நாட்டிற்குப் பெருமை அளிக்கும்.




தமிழகம்

இன்றும் தமிழ் மொழி வளர்க்கும் பல கழகங்கள் தமிழகத்தில் உண்டு. தமிழ்ப் பணி பூண்ட பாரதியார், தேசிக விநாயகம் பிள்ளை, இராமலிங்கம் பிள்ளை முதலியோரை இன்று நாம் அறிவோம்.

தமிழகத்தில் பல இடங்களில் புகழ் பெற்ற மலைகளையும் மலைக் கோயில்களையும் காணலாம். பொதியம், கொடைக்கானல், பழனி இம் மலை யிடங்கள் தமிழ் நாட்டிற்குப் பெருமை அளிப் பவையாகும். அகத்திய முனிவர் பொதிய மலையில் வாழ்ந்ததாகக் கூறப்படுகிறது. பழனி மலைக் கோயில் நம்மவர் பலர் வணங்கும் ஆண்டவன் கோயில் ஆகும். கொடைக்கானல் மலை எவரும் கோடை காலத்தில் சுகமாக வசிக்கத் தக்க இடமாகும்.

தமிழ் நாட்டில் பல ஆறுகள் ஓடி நிலத்தை வளப்படுத்துகின்றன. அவற்றுள் பாலாறு, தென் பெண்ணை, காவேரி, வைகை, தாமிர வருணி முக்கியமானவை. முன்னாளில் மன்னர்கள் ஆறு களிலிருந்து கால்வாய்கள் வெட்டிப் பாசன வசதியை அளித்தார்கள். இந்நாளிலும் அரசாங் கத்தார் பல அணைக்கட்டுகளையும் நீர்த் தேக்கங் களையும் கட்டி உணவுப் பெருக்கத்திற்கு வழி தேடுகிறார்கள்.

நெடுங்காலமாக நம் தமிழகத்தில் கோயில்கள் கட்டியும் சத்திரங்கள் அமைத்தும் அறநெறி வளர்க்கப்பட்டு வந்தது. கலை, கல்வி, தருமம் ஒரு வழி பற்றி நடந்து வந்தது. இந்நாளில் பல கலாசாலைகளும் தொழிற் முறை பள்ளிக்கூடங்களும் மருத்துவ சாலைகளும் அமைக்கப்பட்டு வேறு முறையாகவும் அறநெறி வளர்ந்து வருகிறது.

பண்டை நூல்களிலிருந்து தமிழகத்தில் ள் நாட்டிலும் கடல் கடந்தும் நடந்து வந்த கைத்தொழில், வாணிபம் இவற்றைப் பற்றி விரமாக அறியலாம். இன்று நாட்டில் பல கைத் தாழில்களும் ஆலைத் தொழில்களும் பன்மடங்கு பருகியுள்ளன. நம் பொருள்கள் பிற நாடுகளிலும் விலையாகின்றன. தொழிலும் வாணிபமும் இருந்தால் நாட்டினர் நன்மை அடையலாம் ன்பதை நாம் நன்கு அறிய வேண்டும்.

இன்று நம் தமிழகம் பாரத நாட்டின் ஒரு குதியாக இருக்கிறது. தமிழ் மக்களிடம் கலை ங்க வேண்டும். கல்வி பரவ வேண்டும். தொழில் ளர வேண்டும். செல்வம் பெருக வேண்டும். ற்றுமை நிலவ வேண்டும். நாம் பிற நாட்டினர் ஏன் தலை நிமிர்ந்து நடக்கவேண்டும். இத்தகைய வாழ்வை நாம் அடைய முயலுவோமாக.

## கேள்விகள்

1. தமிழகம் எந்த எல்லைகளுக்குள் இருக்கிறது?
2. முன்னாளில் அரசு செய்த அரசர் யாவர்?
3. புகழ் பெற்ற சில மலைகளைக் கூறுக.
4. இக்காலப் புலவர் சிலர் பெயரைக் கூறுக.

## பயிற்சி

I. முன் + காலம் = முற்காலம் என்று சேரும்.
பின் + காலம் என்பது எவ்விதம் சேரும்?

தமிழகம் என்பது தமிழ் + அகம் என்
பிரியும். தாயகம் என்பது எவ்விதம் பிரியும்

II. பொற்கைப் பாண்டியன், மனுச் சோழ
என்ற பெயர்களை வைத்துத் தனித்தனி வாக்
யம் எழுதுக.

III. திருவள்ளுவர் ஒரு பெரும் புலவர்
இப்படியே வேறு இரண்டு புலவர்களைப்பற்
ஒவ்வொரு வாக்கியம் எழுதுக.

IV. கோயில்கள் கலை வளர இடமாகும்.
கோயில்களில் கலை வளர்ந்தது.
இரு வாக்கியங்களும் ஒரே பொருள் தரும்.

1. கலாசாலைகள் கல்வி வளர இடமாகும்.
2. தமிழகத்தில் புகழ் வளர்ந்தது.

பொருள் மாறாது மாற்றி எழுது.

## 2. நம் சுதந்திர வாழ்வு

| | | |
|---|---|---|
| சுதந்திரம் | விருப்பம் | செல்வம் |
| சுரங்கம் | அன்னியர் | ஆட்சி |
| தொண்டர் | தலைவர் | விமானம் |
| பிழைப்பு | உழைப்பு | வறுமை |
| மதம் | குலம் | இனம் |

நாம் இன்று சுதந்திரம் பெற்ற மக்கள். நம்
நாடு சுதந்திரம் பெற்ற நாடு. இந்த நிலையால்
நமக்கு விளையும் நன்மைகள் பல உண்டு.

நாம் நமக்கு விருப்பமான தொழில்கள் செய்யலாம். அத் தொழில்களால் நம் நாட்டின் செல்வத்தை வளர்க்கலாம். உணவுப் பொருள் நமக்கு வேண்டுமளவு நாமே பயிரிடலாம். நம் நாட்டு மலைகளும் காடுகளும் ஆறுகளும் குளங்களும் நம் நன்மைக்காகவே கொள்ளலாம்.

நம் நாட்டிலுள்ள தங்கம், இரும்பு, நிலக்கரி முதலிய சுரங்கச் செல்வம் முழுவதும் இனி நமக்கே உரியவை. ஆகவே அச் சுரங்கங்களால் நாம் செல்வம் வளர்க்க முயன்று நன்மை பெறலாம். நம் நாட்டுக் கடற்கரை இனி நமக்கே உரியது. கரையோரமாக நடக்கும் கப்பல் போக்கு வரவு இனி நம்மிடமே இருக்க வழி செய்யலாம்.

நம் நாட்டுக் கைத்தொழில்களை இனி நம் நன்மைக்குத் தக்கபடி அமைத்துக் கொள்ளலாம். நமக்கு வேண்டிய சிறு பொருள்கள் முதல் பெரும் பொருள்கள் வரை நாமே செய்யலாம். மோட்டார், புகை வண்டி, ஆகாய விமானம் முதலியன நாமே செய்யத் தெரிந்து கொண்டு நன்மை அடையலாம்.

நம் கல்வியை இனி நமக்கு வேண்டியபடி அமைத்துக் கொள்ளலாம். அன்னியர் ஆட்சி நடந்தபோது அவர்கள் நன்மைக்கு வேண்டிய முறையிலே கல்வி அறிவை நமக்குக் கொடுத்தார்கள். நம்மை அவர்கள் இட்ட வேலைகளைச்

செய்யும் ஆட்கள் ஆக்க நினைத்தார்கள். இன
நாமே தொண்டர்களாயும் தலைவர்களாயும் நின்ற
நம் நாட்டின் எதிர் காலத்தைப் புதிய முறையிலே
அமைக்கத் தக்க அறிவு தரும் கல்வியைக் கற்
வேண்டும்.



நம் நாட்டு மக்களுக்கு உணவும் உடையுப்
குறைவு இல்லாமல் இருக்க வேண்டும். அனை
வருக்கும் பிழைப்பிற்கு வழி இருக்க வேண்டும்
உழைப்பே செல்வம் என்று அறிந்து பல
தொழில்களை நடத்த வழி அறிய வேண்டும்.

சுதந்திர நாட்டில் கிராமங்கள் சீர் அடை
வேண்டும். கிராம மக்களின் வறுமை ஒழி
வேண்டும். அவர்களிடையே கல்வியும் கை

தொழிலும் வளர வேண்டும். சுதந்திரக் கொடியின் கீழ் அவர்கள் இன்ப வாழ்வு நடத்த வேண்டும்.

சுதந்திரக் கொடியின் கீழ் பெண்களுக்கும் சுதந்திரம் வேண்டும். கலையிலும் கல்வியிலும் தொழிலிலும் அவர்கள் ஆண்களுடன் சம நிலையை அடைய வசதி அளிக்க வேண்டும். நாட்டுப் பணியிலும் அவர்கள் ஆண்களோடு ஒத்துழைத்து நன்மை பெறவேண்டும்.




சுதந்திர வாழ்வில் மத வெறி இடம் பெறாது. சாதி வேற்றுமை நிலை பெறாது. எல்லோரும் ஒரு குலம்; எல்லோரும் ஒரு இனம் என்ற மனப் பான்மையே இடம் பெறும்.

நம் சுதந்திர வாழ்வு

சுதந்திரம் பெற்ற நாட்டில் வாழும் நாம் மே கூறியவற்றை நன்கு உணர்ந்து நடந்து கொள் வோமாக. உலக நாடுகளின் முன் உயர் நிலை அடைவோமாக.

## கேள்விகள்

1. தொழில் வகையில் சுதந்திர நாடு என்ன செய்யலாம் ?
2. கல்வி வகையில் சுதந்திர நாடு என்ன செய்யும் ?
3. நாட்டுச் செல்வம் வளர என்ன செய்யலாம் ?
4. உலக நாடுகளின் முன் உயர் நிலை அடைய வழி என்ன ?

## பயிற்சி

I. கற்றவர் × கல்லாதவர். எதிர் மொழி.

எதிர் மொழி கூறுக.

| | | | |
|---|---|---|---|
| நல்லவர் | × | செல்வர் | × |
| வேண்டியவர் | × | கிழவர் | × |

———

# 3. கிராமப் பஞ்சாயத்தார்

| | | |
|---|---|---|
| பஞ்சாயத்து | தேர்தல் | ஒழுங்கு |
| தக்கவர் | ஊழியம் | வாக்கு |
| பரிசீலனை | அமர்த்தி | காவல் |
| வைத்தியம் | அலுவல் | மகிழும் |
| விரும்பு | அமுல் | திட்டம் |

(தகப்பனும் மகனும் பேசிக் கொள்ளுகிறார்கள்.)

**மகன்:** அப்பா, நேற்று மாலை தோட்டத்திற்கு வர வில்லையே. எங்கே போயிருந்தீர்கள்?

**தகப்பன்:** கண்ணு, நான் பஞ்சாயத்துத் தேர்தல் முடிவு என்ன ஆயிற்று என்று பார்க்கச் சென்றிருந்தேன்.

**ம:** பஞ்சாயத்து என்பது என்ன? அங்கே தேர்தல் நடப்பது என்றால் என்ன? அது எவ்விதம் நடக்கும்? அதன் முடிவைப்பற்றி நீங்கள் ஏன் கவனிக்க வேண்டும்?

**த:** கண்ணு, நாம் கிராமத்தில் வாழ்கிறோம். நமது கிராமத்தின் தெருக்கள் ஒழுங்காக இருக்க வேண்டாமா? குப்பை கூளங்களை அப்புறப் படுத்த வேண்டாமா? இரா வேளை களில் வீதிகளில் வழி தெரிய விளக்குக்கள் போட வேண்டாமா?

ம : இந்த நன்மைகள் வேண்டாம் என்று யார்தான் சொல்வார்கள்? இவை எல்லாம் பஞ்சா யத்தின் வேலைகளோ?

த : ஆமாம். இந்த பொது நல அலுவல்களை நமக்காகச் செய்யவே நாம் சில மனிதர்களைத் தேர்ந்தெடுக்கிறோம். நம் ஊரின் நன்மை களை கவனிக்கத் தக்கவர் யார் என்பதை நாம் அறிவோம் அல்லவா?

ம : நம் ஊராரை நாம் தேர்ந்தெடுக்கிறோம் இதற்கு ஒரு தேர்தல் வேண்டுமா? இன்னா பஞ்சாயத்தாராக இருக்க வேண்டும் என்று சொன்னால் போதாதா?

த : குழந்தாய், நம் ஊரிலே பலரும் நல்லவர்தான் ஆனாலும் அவர்கள் எல்லோரையும் இந்த வேலைக்கு அனுப்ப முடியுமா? சபைக்கு ஒன்பது பேர்கள் இருந்தால் போதும். நம் ஊரில் உள்ள நல்லவர்களில் இவர்களைத் தெரிந்தெடுக்கவே இந்தத் தேர்தல் நடக்கிறது.

ம : அது எப்படி நடக்கும்?

த : பதினைந்து பேர்கள் பொது நன்மைக்காக ஊழியம் செய்ய முன் வந்தார்கள். நமக்கு ஒன்பது பேர்கள் தான் வேண்டும். நமது வாக்கை அவர்களில் ஒன்பது பேர்களுக்குக் கொடுத்து அவர்களை இந்த வேலைக்கு அமர்த்துகிறோம்.

ம : அப்பா, வாக்கு என்றால் என்ன ?

த : உழைக்க விரும்பித் தேர்தலுக்கு முன் வந்த அவர்கள் பெயர்களை ஒரு காகிதத்தில் எழுதி இருக்கும். அவர்களில் எவரை நாம் தேர்ந்தெடுக்க நினைக்கிறோமோ அவர் பெயருக்கு நேரே இந்த × அடையாளம் போட வேண்டும். கிராமம் பல தொகுதிகளாகப் பிரிக்கப்பட்டு, ஒவ்வொரு தொகுதியிலிருந்தும் பிரதிநிதிகள் தேர்ந்தெடுக்கப் படுவார்கள். தேர்தலில் நிற்பவர்களுக்குத் தனித்தனி அடையாளங்களும் இருக்கலாம். தேர்தல் பெட்டிகளில் அவரவருக்குரிய அடையாளம் தனித்தனியே காணப்படும். தேர்தல் சீட்டை நாம் விரும்பும் மனிதருக்கு அவருக்குள்ள அடையாள முள்ள பெட்டியில் போடலாம். இந்த வாக்குச் சீட்டை எவரும் பார்க்காமல் பெட்டியிலே போடவேண்டும். இன்று காலை முதல் மாலை வரை நம் ஊரார் பலரும் வாக்குப் போட்டார்கள். மாலையில் ஆறு மணிக்குப் பிறகு பெட்டியைத் திறந்து சீட்டுக்களைப் பரிசீலனை செய்தோம். அதிகமாக வாக்குகள் பெற்ற ஒன்பது பேர்களைத் தெரிந்து எடுத்து விட்டோம்.

ம : இந்தப் பஞ்சாயத்தார் செய்ய வேண்டிய வேலைகள் என்ன ?

த : நம் ஊரில் உள்ள தெருக்கள் சுத்தமாய் இருக்கும்படி, தக்க வேலை ஆட்களை அமர்த்தி

குப்பைகளை அகற்ற வேண்டும். இராக் காலங்களில் தெரு விளக்குகளைப் போடவேண்டும். குடி நீர்க் குளத்திற்குத் தக்கபடி காவல் போட வேண்டும். மனிதர் குளிக்கும் குளத்தில் ஆடு மாடுகளைக் குளிப்பாட்ட விடாமல் காவல் போடவேண்டும். நம் ஊரில் உள்ள உன்னைப் போன்ற குழந்தைகள் படிக்கும் பள்ளிக்கூடத்தை ஒழுங்காக நடத்த வேண்டும். ஊரில் வைத்திய உதவிகள் நமக்கு வேண்டுமளவு கிடைக்க வழிகள் செய்ய வேண்டும். இன்னும் பல நன்மையான வேலைகளையும் கவனிக்க வேண்டும்.

**ம :** அப்பா, இவ்வளவு காரியங்கள் செய்யப் பணம் வேண்டாமா ?

**த :** நாம் கொடுக்கும் வீட்டு வரி, தொழில் வரி முதலிய வரிப் பணங்களைத் திரட்டியே கிராமப் பஞ்சாயத்தார் இக் காரியங்களை நம் நன்மைக்காகச் செய்கிறார்கள்.

**ம :** அப்பா, நம் ஊரைப் பார்த்து மற்றவர் மகிழும்படி இவர்கள் வேலை செய்வார்களா ?

**த :** அவர்கள் அப்படியே தான் விரும்புவார்கள். அவர்களில் ஒருவர் தலைவராக இருப்பார். கிராமப் பஞ்சாயத்தார் அடிக்கடி கூட்டங்கள் போட்டு நமக்கு வேண்டிய நன்மைகளைப் பேசி முடிவு செய்து அமுல் நடத்துவார்கள். தாமும்

அவர்கள் இடும் திட்டங்களுக்குக் கட்டுப்பட்டு ஒத்துழைக்க வேண்டும்.

ம : அப்பா, நீங்கள் ஏன் அதில் இடம் பெற வில்லை? நான் ஏன் தேர்தலுக்கு நிற்கக் கூடாது?




த : எனக்கு வயதாகி விட்டது. இனி என்னால் அம்மாதிரி வேலைகளில் உழைக்க முடியாது. நீ ஒரு காலத்தில் அவ்விதம் வரலாம். அதற்கு நீ ஊராருக்கு நல்லவனாகக் காண வேண்டும். அதற்கான நல்ல வழிகளை நீ கையாண்டு வாழ்ந்தால், வயது வந்த காலத்தில் நீயும் தேர்தலில் நின்று வெற்றி பெற்றுப் பொது நலத்திற்கு உழைக்கலாம்.

## கேள்விகள்

1. கிராமப் பஞ்சாயத்தார் வேலை என்ன ?
2. தேர்தல் எதற்காக நடக்கும் ?
3. எப்படித் தேர்தல் நடக்கும் ?
4. கிராமப் பஞ்சாயத்தார் பணம் எவ்விதம் திரட்டுவார்கள் ?

## பயிற்சி

I. வாக்கியத்தைப் படித்துப் பார்த்து, அதில் பிழை இருந்தால் திருத்துக.

1. நான் வந்தாய்.
2. நீ வந்தேன்.
3. அவன் வந்தது.
4. அது வந்தான்.

II. ஏற்ற சொல் ஒன்று வைத்து முடிக்க.

1. இரவில் வழி தெரிய———வேண்டும்.
2. தெருக்களில்———கிடக்கக் கூடாது.
3. குளம் உடைக்காமல்———போடவேண்டும்.
4. நல்லவர்களுக்கு நாம்———கொடுக்கிறோம்.
5. நல்லவர்கள்———வருகிறார்கள்.

# 4. காக்கையின் தந்திரம்

| | | |
|---|---|---|
| இரை | கதறி | உறங்கும் |
| பாழாக்கி | அழிக்க | துணிந்து |
| பகைவன் | புற்று | நசித்து |
| கூக்குரல் | இழிவு | நஞ்சு |
| பறவை | ஒழிப்பது | தோழன் |

ஒரு ஊரை அடுத்த பரந்த வெளியிலே ஆலமரம் ஒன்று வளர்ந்திருந்தது. அம் மரத்தில் காக்கைகள் கூடு கட்டி வாழ்ந்தன. காக்கைகள் காலையில் விடியு முன்பு விழித்து எழுந்து கூடுகளை விட்டு இரைதேடப் புறப்படும். வெளியே போகும் போது குஞ்சுகளைக் கூடுகளில் நன்றாக மறைத்து வைத்து விட்டுப் பறக்கும். மாலையிலே அவை அம் மரத்திற்குத் திரும்பி வரும். முட்டைகளும் குஞ்சு களும் விட்டுப் போனபடியே இருந்தால் மனம் மகிழ்ந்து உறங்கும்.

ஒரு நாள் மாலை வேளையில் காக்கைகள் ஆலமரத்திற்குத் திரும்பி வந்தபொழுது ஒரு பெரிய பாம்பு மேலே இருந்து கீழே இறங்கி ஒரு புற்றுக்குள் மறைவதைப் பார்த்தன. ஒவ்வொரு காக்கையும் தன்னுடைய கூட்டண்டை பறந்து வந்தது. "ஐயோ! என் குஞ்சுகளைக் காணோமே! ஐயோ! என் முட்டைகள் எல்லாம் பாழாகி விட்டனவே! ஐயோ! என் கூடு கலைந்து இருக் கிறதே," என்று ஒவ்வொரு காக்கையும் கத்திக் கதறியது.

அக் காக்கைகளுக்கு ஒரு தலைவன் உண்டு அது ஒரு பெரிய கிழக் காக்கை. அந்த ஆலமரப் சிறு மரமாக இருந்தபோது அங்கே வந்து கூடு கட்டி, அதில் வாழ்ந்து வருகிறது. அது மற்ற காக்கைகளைப் பார்த்து • "தோழர்களே, தோழ களே, அழுவதால் பயன் இல்லை. நாள் எல்லா அழுதாலும் நம் குஞ்சுகள் மீளப் போவதில்லை இங்கே நமக்கு ஒரு பெரும் பகைவன் இருக் கிறான். அவனே நம் இனத்தையே அழிக்கத் துணிந்திருக்கிறான். ஆகையால் நாம் இந்த மரத்தை விட்டுப் போக வேண்டிய நிலைமைக்கு வந்து விட்டோம்," என்று கூறியது.

மற்ற காக்கைகள் "இது என்ன கொடுமை! நம் வீடுகளை விட்டு நாம் ஓடுவதாவது? இங்கே எத்தனை காலமாக நாம் கூடுகள் கட்டி வாழ்கிறோம்! நாம் அறிய இங்கு கறையான்கள் வைத்த புற்றிலே சில நாட்களுக்கு முன்பு இப் பாம்பு நுழைந்திருக் கிறது. புற்றிலிருந்த கறையான்களைத் தின்றது போதாமல் நம் குஞ்சுகளையும் முட்டைகளையும் கொன்று தின்னப் பார்க்கிறது. இதைத் தடுக்கா விட்டால் நம் குலம் அழிந்து விடும். நாம் நூறு பேருக்கு மேல் இருக்கிறோம். அதை எதிர்த்துப் போராட வேண்டும்," என்று கூக்குரல் இட்டன.

கிழக் காக்கை இதைக் கேட்டது. சற்றே தலையை அசைத்தது. "ஆம், நீங்கள் சொல்வது சரிதான். ஒரு பகைவன் வந்தான் என்று

இடத்தை விட்டு ஓடுவது நம் இனத்திற்கே இழிவு தான். ஆனால் நாம் பாம்பை எதிர்த்துப் போராடும் போது அது சீறி நம்மைக் கடிக்கும். அப் பாம்பு கொடிய நஞ்சு உடையது. நாமும் சிலர் இறக்க நேரிடும். அதற்கு நம்மில் யார் தயாராக இருக்கிறார்கள்? அதை நினைத்தே நாம் வேறு இடம் போய் வாழலாம் என்றேன்,'' என்று கூறியது.



ஒரு பெண் காக்கை "ஐயா தலைவரே! முட்டை, குஞ்சு இவற்றின் அருமை உமக்குத் தெரியாது. நீர் கூறியபடி நாம் இவ்விடத்தை விட்டுப் போவதாக இருந்தாலும் இப் பாம்பு உள்ள வரை இங்கு எப் பறவையும் கூடு கட்டுவது நன்மை இல்லை. இப் பாம்பு நாம் போகும் இடத்திற்கும் வந்து பின்னும் என் நம் முட்டை

களையும் குஞ்சுகளையும் அழிக்கக் கூடாது? ஆகவே இப் பாம்பை எவ்வகையிலும் ஒழிப்பதே நம் கடமையாகக் கொள்ள வேண்டும். எனக்குத் தோழனாக ஒரு மயில் உண்டு. அதன் உதவிகொண்டு இப் பாம்பைக் கொல்வோம். நாம் எவரும் இறக்க வேண்டாம்,'' என்றது. பெண் காக்கையின் புத்தியை மற்ற காக்கைகள் மெச்சின.

பெண் காகம் வேகமாகப் பறந்துபோய் ஒரு மயிலை அழைத்து வந்தது. காக்கைகளின் துன்பத்தை மயில் அறிந்து கொண்டது. அது புற்றில் இருந்த பாம்பைக் கூவி அழைத்தது. பாம்பு படத்தை எடுத்துக் கொண்டு சீறி வந்தது. மயில் பாம்போடு போராடி அதன் படத்தைக் கிழித்துக் கொன்றது. காக்கைகள் மயிலை வாழ்த்தி அனுப்பின. அந்த மரத்தில் அது முதல் அவை தங்கள் இனம் பெருகி இன்பமாக வாழ்ந்தன.

### கேள்விகள்

1. காக்கைகளுக்கு வந்த ஆபத்து என்ன?
2. கிழக் காக்கை என்ன வழி கூறியது?
3. பெண் காக்கை கூறிய வழி என்ன?
4. காக்கைகள் நன்மை பெற்றது எவ்விதம்?

### பயிற்சி

I. காக்கை, குஞ்சு, பாம்பு, மயில் என்ற சொற்களை வைத்து தனித் தனி வாக்கியம் எழுதுக.

II. பாம்பு நாம் போகும் இடத்திற்கும் வரலாம். ஆதலால் இடம்விட்டு போவதால் நன்மை ஒன்றுமில்லை.
இந்த இரு வாக்கியங்களையும் ஒன்றாகச் சேர்த்து எழுது.



# 5. நாட்டுக் கப்பல்

| | | |
|---|---|---|
| ஈட்டுவோம் | நலியும் | திரைகள் |
| நண்ணுவோம் | சிறக்கவே | நிறைக. |

1. நாட்டுக் கப்பல் ஓட்டுவோம்
நமக்கு நன்மை நாடுவோம்
நாட்டுச் செல்வம் ஈட்டுவோம்
நலியும் வறுமை ஓட்டுவோம்.

2. தெற்குக் கடலிற் செல்லுவோம்
திரைகள் தம்மை வெல்லுவோம்
கற்கும் முறைகள் சொல்லுவோம்
கப்பல் ஓட்டி வெல்லுவோம்.

3. மேற்குக் கடலும் ஓடுவோம்
விழித்துக் குதித்துப் பாடுவோம்
காற்றும் நடுங்கச் சாடுவோம்
கடவுள் துணையை நாடுவோம்.

4. செல்வம் வளர எண்ணுவோம்
திரை கொள் கடலை நண்ணுவோம்
மெல்ல உணவை உண்ணுவோம்
வேண்டும் பொருள்கள் பண்ணுவோம்.

5. பாய்கள் எங்கும் பறக்கவே
பழைய கப்பல் சிறக்கவே
வாய்கள் உப்பு நிறைக்கவே
வருவோம் வறுமை குறைக்கவே.

6. நீரின் ஆவி நிறையவே
நிமிரும் அலைகள் மறையவே
ஊரில் வறுமை குறையவே
ஓடும் கப்பல் நிறைகவே.

### கேள்விகள்

1. நாட்டுக் கப்பல் ஓடுவதால் நமக்கு நன்மை என்ன?

2. பழைய கப்பல் எப்படி ஓடும்?

### பயிற்சி

எழுவாய் என்பது வாக்கியத்தின் முதலில் இருக்கவேண்டும். (நாம்) நாட்டுக்கப்பல் ஓட்டுவோம். நாம்-எழுவாய். அவன் வந்தான். நீ வருகிறாய். கப்பல் ஓடுகிறது. எழுவாய் எது?

## 6. கரிகாலன்

| | | |
|---|---|---|
| போர்க்களம் | பகைவர் | சிறை |
| புலம்பி | அல்லல் | கலகம் |
| துணிந்து | துதிக்கை | பருவம் |
| வழக்கு | உணர்ந்து | உலவி |
| நரைத்து | அமர்ந்து | நுட்பம் |

திருமாவளவன் என்ற இளஞ் சிங்கம் சோழ நாட்டின் அரசன் ஆனான். அவனுடைய தந்தை போர்க் களத்தில் இறந்தார். தாயும் தந்தையோடு உயிர் விட்டாள். அவனுக்குத் துணையாக மாமன் ஒருவர் இருந்தார். அவரும் வாள், வேல் பிடித்துப் போர் செய்ய அறியாத புலவர்.

பகைவர் பலர் நாட்டை வளைத்தார்கள். பெரும் படைகள் திரண்டு வந்தன. துணை இல்லாத இளம் பிள்ளை சிறைக்குள் போகும்படி நேர்ந்தது. நாட்டைப் பிடித்த பகைவர் தலைவன் அரசன் ஆனான். சோழநாட்டு மக்கள் மனம் பொறுக்காமல் எதிர்க்க நினைத்தார்கள்.

புதிய அரசன் சிறைக்குத் தீ வைத்தான். சிறைச்சாலை எரிந்தது. குடிகள் சிறைக்கு அருகில் கூடினார்கள். "ஐயோ! நம் அரச குமாரன் இறந் தானே," என்று புலம்பினார்கள். இருளில் சிறைச் சாலைக்குள் அகப்பட்டிருந்த திருமா வளவன் நெருப்பு விழும் வழியிலே தாவினான். அவன் கால்கள் கரிந்து போயின. கரி காலன் ஆகி சிறைக்கு வெளியே வந்தான்.

கூட்டத்தில் திருமா வளவனை எவரும் அறிய வில்லை. உறையூரிலிருந்து இரவோடு இரவாக ஓடி நடந்து கரூர் அடைந்தான். அவன் மாமன் அங்கே இருந்தார். அவர் கரி காலனாக வந்த மருமகனைக் கண்டு மார்போடு தழுவிக் கொண்டார். அரசு ஆளப் பிறந்த இளஞ் சிங்கம் இப்படி அல்லல்பட நேர்ந்ததே என்று மனம் வருந்தி கண்ணீர் விட்டார்.

கரூரிலே கரிகாலன் சில நாட்கள் மறைந்திருந் தான். ஆனால் உறையூரிலே உள்ள குடிகள் புதிய அரசனை எதிர்த்துக் கலகம் செய்தார்கள். அரண்மனைக்குள் மிகவும் கோபத்தோடு நுழைந்தார் கள். அரசனாக வந்த புதியவன் தலை தப்பினால் போதும் என்று ஓடி விட்டான். சோழ நாட்டில் அரசன் இல்லை என்ற செய்தி பிறந்தது.

குடிகள் பட்டத்து யானையை வெளியே கொண்டு வந்தார்கள். அந்த யானையின் கையிலே

ஒரு மாலையைக் கொடுத்தார்கள். யானை அந்த மாலையை யார் கழுத்திலே போடுமோ அவனையே அரசனுக்குவோம் என்று துணிந்தார்கள். யானை மாலையோடு புறப்பட்டது. வழி தெரிந்து போவது போலக் கருவூருக்கே வந்தது.

கரூரிலே தெருவில் விளையாடிய பிள்ளைகளின் நடுவே கரிகாலனும் நின்று கொண்டிருந்தான். அங்கு வந்த யானை அவன் கழுத்திலே மாலையைப் போட்டது. துதிக்கையால் எளிதாக அவனைத் தூக்கித் தன் மேல் வைத்துக் கொண்டது. வீட்டிற்குள் இருந்த மாமன் வெளியே வந்தார். அவரும் ஓடி வந்து யானை மேல் ஏறினார். யானை உறையூருக்குத் திரும்பி வந்தது.

சோழ நாட்டுக் குடிகள் கடவுள் செயலால் யானை அழைத்து வந்த அரசன் தங்கள் மன்னனின் மகனே என்பதை அறிந்து பெரு மகிழ்ச்சி அடைந்தார்கள். அவனுக்கு நல்ல நாளிலே முடிசூட்டு விழா நடந்தது. பன்னிரண்டு வயது ஆகாத பருவத்தில் கரிகாலன் ஒரு பெரிய நாட்டின் அரசன் ஆனான்.

நாட்டு மக்கள் அதுமுதல் அமைதியாக வாழ்ந்தார்கள். சோழ நாடு காவேரி வெள்ளத்தால் செழித்து, வேண்டிய வாழ்வுகளை மக்களுக்கு அளித்தது. அரசனிடம் வழக்கு உரைக்க வேண்டும் என்று பெரியவர்கள் வருவதும் வழக்கமாயிற்று.

ஒருநாள் இரு கிழவர்கள் தமது வழக்கு ஒன்றை உரைத்து நியாயம் பெற வேண்டி உறையூருக்கு வந்தார்கள். அரண்மனைக்கு வந்து அரசனைக் கண்டார்கள். அரசன் இளம் பிள்ளையாக இருப்பதைக் கண்டு ஒன்றும் சொல்லாமல் திரும்பினார்கள். கரி காலன் உண்மையை உணர்ந்து கொண்டார். அவர்களை அழைத்து "பெரியவர்களே! உங்கள் வழக்கைக் கேட்க வேண்டிய அரசர் அரண்மனைத் தோட்டத்தில் உலாவிக்கொண்டிருக்கிறார். இதோ வந்து விடுவார். சற்றே பொறுங்கள்," என்று கூறிவிட்டு உள்ளே நடந்தார்.

நரைத்துப் பழுத்த அரசர் வந்து இடத்தில் அமர்ந்தார். கிழவர்களுடைய வழக்குகளைக் கேட்டார். இருவர் மனமும் மகிழ்ந்து உருகும்படி அழகாக அவ் வழக்கின் நுட்பங்களை விளக்கி எள்ளுக்காய் பிளந்ததுபோல நியாயமான தீர்ப்பு உரைத்தார். கிழவர்கள் வணங்கிப் புறப்பட்டார்கள். அரசர் அவர்களைக் கூப்பிட்டு தாம் தாங்கியிருந்த பொய்த் தாடி, நரை மயிர் முதலியன களைந்து உண்மை உருவத்தைக் காட்டினார். கரி காலனே அவ்விதம் வேடம் புனைந்து வந்ததை அவர்கள் அறிந்து அளவு கடந்த மகிழ்ச்சி கொண்டார்கள். நரை முடி தரித்த இளம் மன்னன் என்ற புகழ்ப் பெயரையும் கரிகாலன் அன்று முதல் அடைந்தார்.

### கேள்விகள்

1. திருமா வளவன் சிறைப் பட்டது ஏன்?

2. அவன் கரி காலன் ஆனது எப்படி ?
3. கரி காலன் முடி சூடியது எவ்விதம்?
4. வழக்கைத் தீர்க்க கரி காலன் கிழவன் ஆனது எப்படி? ஏன்?

### பயிற்சி

I. வழக்கு, வழக்கம்.

II. விளக்கு, விளக்கம்.

இச் சொற்கள் வேறு வேறு பொருள் உள்ளவை-தனித்தனி வாக்கியத்தில் வைத்து அவற்றின் பொருள்களை விளக்குக.

III. கரி காலன் என்ற இளஞ் சிங்கம் அரசன் ஆனான். இளஞ் சிங்கம் ஒன்று காட்டிலே திரிந்தது. இளஞ் சிங்கம் என்ற சொல்லுக்கு இங்கு பொருள் கூறுக.

## 7. காந்தி மகான்

| | | |
|---|---|---|
| உத்தமர் | பாராட்டு | வேறுபாடு |
| திவான் | முயற்சி | அடக்கம் |
| வெள்ளையர் | இழைத்த | கொடுமை |
| போராட்டம் | சிறுமை | முற்பட்டு |
| இயக்கம் | அடைக்குமுறை | குழப்பம் |

உலகம் புகழும் உத்தமர் காந்தி மகான். அவர் நம் நாட்டில் பிறந்து வாழ்ந்தவர் என்பது நமக்கு ஒரு பெருமையாகும். அவர் எல்லா மக்களையும் உடன் பிறந்தவர் போல நினைத்த பெரியோர்

ஆவர். இந்து, முஸ்லீம், கிறிஸ்தவர், சீக்கியர் என்ற மத வேற்றுமையை சிறிதும் பாராட்டாதவர். இது உயர்ந்த குலம், அது தாழ்ந்த குலம் என்ற எண்ணமும் அவர் மனத்தில் எழுந்தது இல்லை இவர் நம் நாட்டவர்; அவர் அயல் நாட்டவர் என்ற வேறுபாடும் அவருக்குக் கிடையாது.

"நூற்றிருபது வயது வரை நான் வாழ்வேன். அவ்வளவு காலமும் உலக நன்மைக்கே உழைப்பேன்," என்று காந்தி மகான் கூறி வந்தார். ஆனால் அவர் எண்ணம் நிறைவேறாமல் இறந்தார். அவர் நம் நாட்டிற்காக உழைத்ததை நாமும் நம் வழிவரும் மக்களும் ஒருநாளும் மறக்க முடியாது. முன்னூறு ஆண்டுகளாக அன்னியர் ஆட்சியில் நாம் அடங்கி, அதனை எதிர்ப்பதற்கு எவ்வகை வன்மையும் இல்லாமல் இருந்தோம். இன்று நம்மை சுதந்திர வாழ்வில் வைத்த பெருமை அவருக்கே உரியது. அவரைப் பற்றி நாம் விவரமாக அறிவோம்.

நம் நாட்டில் சௌராஷ்டிரம் என்று வழங்கும் பகுதியிலுள்ள ராஜகோட் என்ற நகரில் நம் பெரியார் பிறந்தார். இவர் தந்தை போர்பந்தர் என்ற சிறிய நாட்டில் திவானாக இருந்தார் இளமையில் மோகன்தாஸ் கரம்சந்து காந்தி என்று அழைக்கப்பட்ட நமது காந்தி மகான் அந்த ஊரிலே இருந்த ஆரம்பப் பள்ளியில் படித்தார். பிறகு அடுத்துள்ள நகரத்திற்குச் சென்று ஆங்கிலக் கல்வி கற்றார். பிறகு சட்டப் படிப்பிற்காக இங்கி

லாந்து சென்றார். படிப்பு முடிந்து இந்தியாவிற்கு திரும்பி வருமுன் அவருடைய தந்தை இறந்தார். பிறகு அண்ணனை உற்ற துணையாகக் கொண்டு வாழ்வில் இறங்கினார்.



மோகன்தாஸ் காந்தி பம்பாய் நகரில் நியாய வாதியாக தொழில் நடத்த முயன்றார். அம் முயற்சியில் நல்ல பலன் கிடைக்கவில்லை. தம் ஊருக்கு வந்து அடக்கமாகத் தொழில் நடத்தி வந்தார். அப்பொழுது ஆப்பிரிக்காவில் ஒரு பெரிய வியாபாரி தமது வழக்கு ஒன்றை நடத்தும்படி காந்தியை அங்கு அழைத்தார். மோகன்தாஸ் இளம் பருவத்திலே மனைவி மக்களோடு ஆப்பிரிக்கா சென்று, வழக்கு நடத்தி வென்று நற்பெயர்

அடைந்தார். ஆப்பிரிக்காவில் உள்ள வெள்ளையர்கள், கருப்பு மனிதர் என்ற காரணத்தால் இந்தியர்களுக்கு இழைத்து வந்த கொடுமைகளைக் கண்டு காந்தி மனம் புண்ணுற்றார். ஆகவே அதற்கு எதிர்ப்பு நடத்த நினைத்தார். அங்கு சத்தியாக்கிரகம் என்ற புதிய போராட்டம் நடத்தி வெற்றியும் பெற்றார். ஆப்பிரிக்காவிலுள்ள இந்தியர்களின் நன் மதிப்பையும் பெற்றார். சில ஆண்டுகளுக்குப் பிறகு இந்தியாவிற்குத் திரும்பி வந்தார்.

அப்பொழுது நம் நாட்டில் ஆங்கில ஆட்சி வேர் ஊன்றி இருப்பதையும் அதனால் நமக்கு உள்ள சிறுமைகளையும் மோகன் காந்தி அறிந்து அவர்களை எதிர்க்க நினைத்தார். நாம் சுதந்திரப் பெறும் பொருட்டு உழைக்கப் முற்பட்டார். காங்கிரஸ் என்ற தேசீய இயக்கக் கூட்டத்திலே சேர்ந்து ஒத்துழையாமை இயக்கம், வரி கொடாமை இயக்கம் முதலிய போராட்டங்களை நடத்தினார். வெள்ளையர் அரசாங்கம் அடக்கு முறையை உபயோகித்தது; காந்தியை சிறை செய்தது. பின்னும் பல பெரியோர்கள் சிறைச் சாலைக்குள் சென்று வருந்த நேரிட்டது. தாஸ், நேரு, பட்டேல், ராஜாஜி முதலியோர் குடும்பம் குடும்பமாக காந்தி மகான் வழிபற்றி நடந்து சிறைச்சாலையில் நெடுங்காலம் வாழ நேர்ந்தது பொது நன்மைக்காகப் பாடுபட்டு பல இன்னல்களை அடைந்த காந்தி மகான் நாளடைவில் பொது மக்களின் மதிப்பைப் பெரிதும் பெற்றார்.

நம் நாட்டின் அரசியலை நாமே நடத்துவது தான் நம் மக்களுக்கு நன்மை என்று நினைத்து, அதற்குத் தகுந்த வழிகளை காந்தி மகான் கையாள நினைத்தார். அரசாங்கச் சட்டத்தை மீறி தனி மனிதன் உரிமையைத் தேட, உப்புக் காய்ச்ச ஆரம்பித்தார். இந்த இயக்கம் நாடெங்கும் பரவி பது. அரசாங்கம் காந்தியையும் இயக்கத்தில் ஈடுபட்ட பலரையும் வருத்தியது.

நாட்டில் நம்மவருக்குப் பற்று அதிகமாகும் முறையில், அடுத்த படியாக காந்தி மகான் "வெள்ளையனே எங்கள் நாட்டை விட்டு வெளியே போ" என்ற குரலைக் கிளப்பினர். நாடு முழுவதும் இக்குரல் ஒலித்தது. இனி ஆட்சி நடத்த முடியாது என்ற நிலைமையை ஆங்கிலேயர் உணர்ந்தனர்.

இங்கிலாந்தின் முதன் மந்திரி நம்மிடமே நம் நாட்டின் ஆட்சி முறையை விட்டு விடுவதாக முன் வந்தார். இந்தியாவை விட்டு அவர்கள் போகும் போது பெரும்பான்மையாக முகம்மதியர் வாழும் பகுதிகளை பாகிஸ்தான் என்ற பெயருடன் பிரித்து மீதமுள்ள பெரும் பகுதியை இந்தியா என்ற பெயருடன் சுதந்திரமாக ஆளும் உரிமையை நமக்கு அளித்தார். அதனால் நம் நாட்டில் ஒரு பெருங் குழப்பம் உண்டாயிற்று. வங்காளத்திலும் பஞ்சாபிலும் மக்கள் பலர் இறந்தனர். அங்கு செல்வர் பலர் ஏழைகள் ஆயினர்.

வங்காளத்தில் நடந்த குழப்பத்தை மாற்றவே மிகவும் முதுமைப் பருவத்தில் நம் காந்தி மகான் நவகாளிப் பகுதியில் ஊர் ஊராக நடந்து சென்று மக்களுக்கு ஆறுதல் அளித்தார். தெய்வத்தை நம்பியே வாழ்க்கை நடத்திய இப் புண்ணியர் சென்றவிடம் எங்கும் குழப்பம் அடங்கி அமைதி நிலவியது.

கடவுள் வணக்கத்திற்காக காந்தி மகான் நடத்திய கூட்டங்களில் தெய்வம் ஒன்றே என்ற உண்மையை விளக்கினர். நாடு சுதந்திரம் பெற்ற பிறகு டில்லியிலே ஒரு பெரிய பிரார்த்தனைக் கூட்டத்தில் காந்தி மகான் பேச வந்தார். அப்பொழுது கூட்டத்திலிருந்த ஒருவன் வஞ்சனை செய்து துப்பாக்கியால் உலக உத்தமரைச் சுட்டுக் கொன்ருன். நாடு முழுவதும் அவர் மறைவால் துக்கத்தில் ஆழ்ந்தது. அவர் உடம்பு மறைந்தும் அவர் செய்த உதவி என்றும் மறையாது. அவர் புகழும் மறையாது. தேசத்தின் தந்தை என்றே மகாத்மா காந்தியை இன்று நாம் மதிக்கிரேம்.

## கேள்விகள்

1. காந்தி மகான் எங்கே பிறந்தார்?
2. சுதந்திரம் வரும் பொருட்டு அவர் என்ன செய்தார்?
3. குழப்பங்களை அடக்க அவர் என்ன செய்தார்?

### பயிற்சி

I. மகான், மகாத்மா, பெரியோர், புண்ணியர் என்ற சொற்கள் வரும்படி காந்தி மகானைப் பற்றி தனித் தனி வாக்கியம் எழுதுக.

II. ஒத்துழையாமை, வரி கொடாமை என்ற சொற்களை முதலில் வைத்து தனித்தனி வாக்கியம் எழுதுக.

# 8. உயிரைக் காத்த உத்தமன்

| | | |
|---|---|---|
| உடைப்பு | திகில் | செயல் |
| தளர்ந்து | நிலையம் | விளம்பரம் |
| தண்டவாளம் | தொழுதார் | தேசவிழா |
| அபாயம் | வெகுமதி | உத்தமன் |
| ஆபத்து | அறிவிப்பு | மெச்சி |

மழையூர் ஒரு கிராமம். அவ்வூரின் பெரிய கண்மாயை அடுத்து புகைவண்டிப் பாதை இருக்கிறது. மழையூரிலிருந்து இரண்டு மைல்களுக்கு அப்பால் தான் இரு பக்கங்களிலுள்ள புகை வண்டி நிலையங்கள் இருக்கின்றன.

கோபாலன் ஒரு இடைச் சிறுவன். தினந்தோறும் ஆடுகளைக் கண்மாய்க் கரையிலும் புகை வண்டிப் பாதைச் சரிவுகளிலும் ஓட்டிச்சென்று மேய்ப்பான். மாலை ஆறு மணிக்கு புகை வண்டி சென்ற பிறகு வீடு திரும்புவான்.

கோபாலன் ஒரு நாள் வழக்கம்போல் மாலை நேரத்தில் வீடு திரும்பினன். அன்று திடீரென்ற காட்டில் பெரு மழைபெய்து கண்மாயில் நீர் அதிகம் பெருகி விட்டது. சற்று தூரத்தில் தண்ணீர் மோதி அடித்துக் கொண்டு ஓடும் சத்தம் கேட்டது. கோபாலன் அந்தத் திசையை நோக்கி நடந்தான். கண்மாய்க் கரை தாழ்வாக உள்ள இடத்தில் தண்ணீர் வழிந்து உடைப்பு ஏற்பட்டிருப்பதைக் கண்டான். தண்ணீர் ஓடும் திசை வழியாக நடந்து ஒரு பாலத்தை அடைந்தான். பாலத்திற்கு இரு பக்கங்களிலும் கூட தண்ணீர் வழிந்து ஓடுவதைக் கண்டான். மண் பிடிப்புத் தளர்ந்து தண்டவாளங்கள் தனியாக இருப்பதைப் பார்த்தான். அந்த நிலைமையில் வண்டி தண்டவாளங்களின் மேல் ஓடினல் கவிழ்ந்து விடும் என்று அறிந்தான். 'புகை வண்டி கவிழ்ந்தால் எத்தனை உயிர்களுக்கு ஆபத்து! எவ்வளவு பொருள் சேதம் ஏற்படும்!' இவற்றை நினைத்துத் திகிலடைந்தான்.

மாலை ஆறு மணி நெருங்கி விட்டது. இன்னும் சிறிது நேரத்தில் புகை வண்டி அதன் வழியாகப் போவது வழக்கம். அதற்குள் பக்கத்திலுள்ள வண்டி நிலையத்திற்கு வேகமாக நடந்து சென்று அபாயத்தைத் தெரிவிக்க நேரமில்லை. கோபாலனுக்கு ஒரு யோசனை தோன்றிற்று. தன்னுடைய தலையில் கட்டியுள்ள சிவப்புத் துணியை எடுத்தான். ஆடு மேய்ப்பவனுகையால் அவனிடம்

ஒரு கழி இருந்தது. அவன் தன் துணியை அக் கழியில் கட்டினன். அப் பாதையின் பக்கத்தில் நின்று கொண்டு கழியைத் தூக்கிப் பிடித்தான். காற்றில் துணி பறக்கும்போது சிவப்புத் துணி ஒரு அபாய அறிவிப்பைப் போல் காணப்பட்டது. அப்பொழுது ஒருவாறு அவனுக்கு மன அமைதி ஏற்பட்டது.



சிறிது நேரம் கழித்ததும் தூரத்தில் வண்டிச் சத்தம் கேட்டது. புகை வண்டி வெகு வேகத்தில் வந்து கொண்டிருக்கும்போது அதை ஓட்டுபவர் எதிரே ஒரு அபாய அடையாளத்தைக் கண்டார். வேகத்தைக் குறைத்து அடையாளத்திற்கு அருகில் வந்ததும் அவர் வண்டியை நிறுத்தினர். விவரம் அறிந்தபோது வண்டியிலுள்ளோர் அனைவரும் அடைந்த மகிழ்ச்சிக்கு அளவே இல்லை.

அவர்கள் சிறுவனை வாழ்த்தினார்கள். கடவுளைத் தொழுதார்கள். வண்டிப் பாது காப்பாளர் கோபால னுக்கு ஒரு ரூபாய் வெகுமதி கொடுத்தார். ஆனால் அவன் அதைப் பெற்றுக் கொள்ளவில்லை. வண்டி பின் வழியாகச் சென்று புறப்பட்ட நிலையத்தை அடைந்தது. அந்த அபாயம் பிற நிலையங்களுக்கும் அறிவிக்கப்பட்டது. சிறுவன் மிகவும் களைத்துப் போய் வீடு திரும்பினான். வெகு நேரம் வரை அவன் வராததால் பெற்றோர்கள் கவலையுடன் இருந்தார்கள். சிறுவன் நடந்த விவரங்களை அவர் களுக்குத் தெரிவித்தபோது எல்லோரும் அவனை வாழ்த்தினார்கள்.

சில நாட்கள் கழித்து தேச விழா கொண் டாடும் நாள் வந்தது. மழையூர் மணியக்காரர் சிறுவன் வீட்டுக்கு வந்தார். தான் கொண்டு வந்த கடிதத்தை வீட்டிலுள்ளோருக்குப் படித்துச் சொன்னார்.

“அரசாங்கத்தார் சிறுவன் செயலை மெச்சி ஆயிரம் ரூபாய்கள் பணமும் நன்செய் சாகுபடிக்குத் தகுதியான சில நிலங்களும் அவன் குடும்பத் தாருக்கு இனாமாக கொடுத்திருக்கிறார்கள்,” என் பது கடிதத்தின் சுருக்கமாகும். ஏழைக் குடும்பம் பணக்காரக் குடும்பம் ஆகிவிட்டது.

தேச விழாக் கொண்டாட்டத்திற்கு சிறுவனும் அவன் பெற்றோர்களும் அழைக்கப் பட்டார்கள்.

அன்று பொதுக் கூட்டத்தில் கலெக்டர் மேற்கண்ட செய்தியை விளம்பரப் படுத்தினர். கூட்டத்தில் உள்ளவர்கள் சிறுவனை 'உயிரைக் காத்த உத்தமன்" என்று வாழ்த்தினார்கள்.

## கேள்விகள்

1. கோபாலன் ஒரு நாள் என்ன அபாயத்தைக் கண்டான்?
2. அபாயத்தைத் தடுக்க அவன் என்ன யோசனை செய்தான்?
3. கோபாலன் தன் செயலால் அடைந்த பெருமை என்ன?

## பயிற்சி

I. கோபாலன் ஆடுகளை மேய்ப்பான்.

இவ் வாக்கியத்தில் மேய்ப்பான் என்பது ஒரு தொழிலைக் காட்டுகிறது. அதுவே இவ் வாக்கியத்தின் பயனிலை. பயனிலையைக் கொண்டு எதை அல்லது யாரை என்ற கேள்வியைக் கேட்டால், அதற்குக் கிடைக்கும் பொருளே செயப்படுபொருள் ஆகும். இவ் வாக்கியத்தில் ஆடுகளை செயப்படுபொருள் ஆகும். கோபாலன் எழுவாய் ஆகும்.

II. பின் வருபனவற்றில் எழுவாய், பயனிலை, செயப்படு பொருள் காட்டு.

1. சிறுவன் வெகுமதியைப் பெற்றான்.
2. வண்டியிலுள்ளோர் சிறுவனை வாழ்த்தினார்கள்.

# 9. இசைக் கலை

| | | |
|---|---|---|
| இசை | அசுணம் | இயற்கை |
| கலை | பறை | செயற்கை |
| யாழ் | தாலாட்டு | நுட்பம் |
| வீணை | வசப்படுத்த | இயங்கும் |
| கருவி | வல்லவன் | முழக்கம் |

இசைக்கலை நம் மனத்திற்கு இன்பம் தரும் கலைகளில் சிறந்ததாகும். இசையில் உள்ள இன்பம் இளங் குழந்தைகளும் அறியும். சில பிராணிகளும் கூட இசை கேட்டு இன்பம் அடையும்.

காதுகள் கொண்டு கேட்கும் தன்மை பெற்ற பல பிராணிகளும் இசை கேட்டு மயங்குவது உண்டு. இசையில் இரண்டு மூன்று வகை உண்டு. குயில், வானம்பாடி முதலிய பறவைகள் பாடுவது இயற்கை இசை. பூவில் தேன் எடுக்கும்போது வண்டுகள் பாடுவதும் தும்பிகள் கூடுகட்டும்போது பாடுவதும் மற்றொருவகை இயற்கை இசையாகும். மூங்கில் புதரிலே வண்டு துளைத்த துளை வழியே காற்று வேகமாக நுழைந்து வரும்போது ஒரு வகை இசை ஏற்படுவதை அறியலாம். மனிதன் பல நாள் பழகித் தெளிந்து வாயாலே பாடுவதும் குழல், யாழ், வீணை முதலிய கருவிகளோடு இசைப்பதும் வேறு வேறு வகையான செயற்கை இசைகளாம்.

இசைக் கருவிகள் நான்கு வகை உண்டு. துளை உள்ள குழல், நாதசுரம் போன்றவை ஒரு வகையாம். தோலால் அமைந்த மிருதங்கம், மத்தளம் போன்றவை மற்றொரு வகையாகும். நரம்புகளால்



அமைந்த வீணை, யாழ் முதலியவை வேறொரு வகையாகும். வெண்கலத்தால் அமைந்த தாள வகைகள் இன்னொரு வகையாகும். மனிதன்

தொண்டையும் ஒரு கருவியாகச் சொல்வது உண்டு. இக் கருவிகள் ஒன்றுக்கு ஒன்று உதவியாக இசைந்து வரும் பாட்டில் உள்ள இன்பம் மிகச் சிறந்ததாகும். பாடகர்களும் இசைக் கருவிகளோடு இசைந்து பாடுவதைக் காணலாம்.

பழங் காலத்தில் காட்டில் அசுணம் என்ற விலங்கு ஒன்று இருந்ததாகக் கூறுகிறார்கள். இந்த விலங்கு எளிதில் மனிதன் கையில் பிடிபடாது. பிடிக்க வந்தாலும் பாய்ந்து கொல்லும் துணிவும் உள்ளது. இதைப் பிடிக்க ஒரே வழி உண்டு என்று கூறுவார்கள். யாழ், குழல் போன்ற இனிய இசைகளைக் கேட்டால், அசுணம் தன்னை மறந்து தலையசைத்து நிற்கும். அந்த நிலையில் அதனைப் பிடித்துக் கட்டுவது எளிது. அதைக் கொல்ல நினைப்பவர் கத்தி, வேல் முதலிய கருவிகள் ஒன்றும் இல்லாமலே கொல்லலாம். யாழ் இசை கேட்டு இன்பத்தில் மூழ்கி யிருக்கும் இவ்விலங்கின் காதில் விழும்படி கடுங்குரல் உள்ள பறையை முழக்கினால் அங்கேயே விழுந்து இறந்து போகும். இதன் காதுகள் இசை நுட்பம் அறிந்து இன்பம் அடையவும், கொடிய முழக்கம் கேட்டால் பொறுது உயிரையே இழக்கும் துன்பம் அடையவும் தக்கபடி அமைந்துள்ளன என்று கூறுகிறார்கள்.

அழும் குழந்தைகளை உறங்க வைப்பதற்கு தாய்மார் தாலாட்டுப் பாடுவது எங்கும் உள்ள

வழக்கமே. மதங் கொண்ட பெரிய யானைகளை உதயணன் என்ற அரசன் யாழ் இசைத்து வசப் படுத்தினான் என்ற கதை நம் நாட்டில் உண்டு. நஞ்சு கக்கும் கொடிய நாகப் பாம்பை, அது சீறி வரும்போது குழல் ஊதி அடக்கும் வித்தையை பாம்பாட்டிகளிடம் இன்றும் நாம் பார்க்கிறோம். பசுக்களையும் கன்றுகளையும் கண்ணன் குழல் ஊதி மேய்த்ததாகப் புராணக் கதை கேட்கிறோம். ஆனாயநாயனார் பசுக்களை இசை பாடி மேய்த்ததாக தமிழ் நாட்டுக் கதை கூறுகிறது. இன்றும் கிராமங் களில் வயல்களில் நின்று இடைச்சிறுவர் குழல் ஊதும் பொழுது அவர்களுடைய ஆடுமாடுகள் மெய் மறந்து நிற்பதையும் காணலாம்.

இவ்விதம் இசையின் சக்தியை பலவாறும் நாம் அறியலாம். மனிதன் இசை வல்லவன் ஆவது எளிதில்லை. அவன் தன் குரல் கொண்டு நன்றாகப் பாடுவதும், இசைக் கருவிகளோடு இசைந்து பாடுவதும் பலநாட்கள் பழகி அனு பவம் பெற்று ஒருவாறு தேர்ச்சி அடையலாம். அவ் விதம் செய்வதில் குரலும் அக் கருவிகளும் அவ னுக்கு இணைந்துவிட்டால் அது மிகவும் சிறந்த செல்வம் ஆகும். இசைகேட்டு தலை அசைக்கும் மனிதர் எல்லோரும் இசை நுட்பம் அறிந்தவர் என்று நினைப்பதற்கில்லை. சில இளம் பிள்ளைகள் பயிற்சி பெருமலே இனிமையாகப் பாடுவதைப் பார்க்கிறோம். அதைப் பிறவியின் நற் பயனாகவே மதிக்க வேண்டும்.

## கேள்விகள்

1. இசைக் கலைக்கு உள்ள தனிச் சிறப்பு என்ன ?
2. இயற்கை இசை எது ?
3. செயற்கை இசை எது ?
4. மனிதன் இசை பழக உதவும் கருவிகள் எவை ?
5. அசுணத்தின் இயல்பு யாது ?

## பயிற்சி

I. 1. நரம்புக் கருவி இரண்டின் பெயர் வரும்படி வாக்கியங்கள் எழுதுக.

2. துளைக்கருவி இரண்டின் பெயர் வைத்து வாக்கியங்கள் எழுதுக.

3. அசுணத்தின் இயல்பைப் பற்றி சில வாக்கியங்கள் எழுதுக.

4. குரல், இசை, யாழ், குழல் என்ற சொற்களை வைத்து தனித்தனி வாக்கியம் எழுதுக.

II. பொருள் மாருமல் வாக்கியங்களை மாற்று :—

1. இயற்கை இசையைச் சில பிராணிகள் பெற்றிருக்கின்றன. சில பிராணிகளுக்கு......

2. உதயணன் யாழால் யானையை வசப்படுத்தினன். யானை——— யாழுக்கு—— —ஆயிற்று.

3. கண்ணன் குழல் மாடு கன்றுகளை மயக்கியது. மாடு கன்றுகள்—— —— மயங்கின.

# 10. சிக்கன வாழ்க்கை

| | | |
|---|---|---|
| பழமையான | உழைப்பாளி | நிர்வாகி |
| குடித்தனம் | கையிருப்பு | புறக்கணித்த |
| வருவாய் | ஆடம்பரம் | மதிப்பு |
| கலகம் | நாட்டாண்மை | சேமிப்பு |
| ஆலோசனை | நாணயம் | பண்ணையாள் |

சின்னசாமி சிற்றூரில் வசிப்பவன். ஒரு குடிசையும் ஒரு ஏக்கர் நிலமும் ஒரு மொட்டை வண்டியும் இரு மாடுகளும் ஒரு கலப்பையும் தான் அவனுடைய பழமையான சொத்து. அவனிடம் சில நல்ல குணங்கள் உண்டு. பிறர் உதவியை நாடுவது சில சமயங்களில் பிரயோசனப்படாது என்று அவன் அறிந்து இருந்தான். தன் நிலைமைக்குத் தகுந்தபடி குடித்தனம் நடத்தி வருவான். வருவாய்க் குள்ளாகவே செலவு செய்து ஆண்டு தோறும் சிறிது பொருள் மீதம் பிடிப்பான்.

ஒரு சமயம் கிராமத்தில் விவசாயத்திற்குத் தண்ணீர்த் தட்டு ஏற்பட்டது. பயிருக்குத் தண்ணீர் பாய்ச்சும் முறையில் கிராம மக்களுக்குள் கலகம் ஏற்பட்டது. ஒருவரோடொருவர் அடித்துக் கொண்டு மன்றத்தில் வழக்குத் தொடுத்தார்கள். மனக்கவலை, பணச் செலவு இவைகள் தான் கிராமத்தார் அடைந்த லாபம். பயிர்கள் பாழாயின.

சின்னசாமி என்ன செய்யலாம் என்று ஆலோசனை செய்தான். தன் வயல்களுக்கு ஒரு முறை தண்ணீர் பாய்ச்சினுல் முழு விளைவும் கிடைக்கும் என்பதைக் கண்டான். தன்னிடம் இருந்த ரூபாய்களைக் கொண்டு தன் வயலின் மூலையில் ஒரு கிணற்றை வெட்டினன். கபிலை ஏற்றம் போட்டுத் தண்ணீர் இறைத்தான். அவன் எதிர் பார்த்தபடியே பலன் கிடைத்தது.

சின்னசாமி நல்ல உழைப்பாளி. அறுவடை செய்த பிறகும் தன் வயல்களைத் தினம் சுற்றி வருவான். அந்த ஆண்டில் அவனுக்கு ஒரு எண்ணம் தோன்றிற்று. அவனுக்குக் கிணறு இருப்பதால் அவன் வயலுக்குத் தண்ணீர்த்தட்டு கிடையாது. பரங்கி, பூசனி, காய்கறி முதலியன பயிரிட்டான். பலன் அதிகம் கிடைத்தது. காய்கறிகளை தன் பொட்டை வண்டியில் போட்டுக் கொண்டு அவனும் மனைவியும் அடுத்த ஊரிலுள்ள சந்தைக்குச் சென்றார்கள். முதல் தடவையாக அவர்கள் சந்தையிலிருந்து விற்றுத் திரும்பும் போது, அன்று சம்பாதித்தது ஐந்து ரூபாய்கள். அது பெரிய வரும்படி அல்லவா! கிராமத்தில் நடத்தும் அவர்கள் குடித்தனத்திற்கு, ஒரு மாதச் செலவிற்கு அது போதுமானது. அதே விதமாக நான்கு வாரங்கள் அவன் சந்தைக்குச் சென்று காய்கறி விற்று இருபது ரூபாய்கள் சேர்த்தான்.

சின்னசாமி ஆடம்பரமில்லாதவன். சிக்கனமாகவே வாழ்பவன். தனக்கு உபரியாகக் கிடைத்த

ரூபாய்கள் இருபதையும் தன் ஊர் நாட்டாண்மைக்காரரிடம் கொடுத்தான். நாட்டாண்மைக்காரர் நல்ல நாணயமுள்ளவர்; அந்த ஊர் கூட்டுறவுச் சங்கத்தின் தலைவர். கூட்டுறவு, சங்கம் இவைகள் என்னவென்று சின்னசாமிக்கு ஒன்றுமே தெரியாது.

ஊரில் ஒரு போக விளைவிற்கே சில சமயங்களில் தண்ணீர்த் தட்டு ஏற்படும். அப்போது கூட சின்னசாமிக்கு அவனுடைய கிணறு இரு போக விளைவிற்குக் காரணமாக இருந்தது. அடுத்த ஆண்டிலும் அவனுக்கு நல்ல விளைவு கிடைத்தது. தோட்டப் பயிர் வரும்படியும் முன்போலவே கிடைத்தது. நாட்டாண்மைக்காரர் அவனை ஒரு நாள் அழைத்தார். சென்ற ஆண்டில் அவன் கொடுத்திருந்த இருபது ரூபாய்களுக்கு இரண்டு ரூபாய்கள் வட்டி சேர்த்துத் திருப்பிக் கொடுக்க சங்கம் தயாராக இருக்கிறது என்று சொன்னார். சின்னசாமி அடைந்த மகிழ்ச்சிக்கு அளவே இல்லை. குடிசை வீட்டில் பணம் வைத்திருந்தால் திருட்டுப் போகுமே என்று பயந்து அவரிடம் கொடுத்திருந்தான். அது இன்று குட்டி போட்டுத் திரும்ப வருகிறது. ருசி கண்டவன் சும்மா இருப்பானா? அவன் திரும்பப் பணத்தைப் பெற்றுக் கொள்ள வில்லை. அந்த ஆண்டு தோட்டப் பயிர் விற்றுமுதலையும் சங்கத்தில் கொடுத்து வைத்தான்.

சின்னசாமிக்கு ஒவ்வொரு ஆண்டிலும் இவ்விதமாகவே பணம் சேர்ந்தது. சில ஆண்டு

களுக்குப் பிறகு அடுத்த நிலங்கள் சிலவற்றை விலைக்கு வாங்கினான், குடியிருக்க ஒரு நல்ல வீடும் கட்டிக் கொண்டான். செலவு செய்யும் போது யோசித்தே செலவு செய்வான். தன் பொருள் குறையாமல் பெருகி வரும் நோக்கத்தை என்றும் அவன் மறப்பதில்லை.

சின்னசாமி அந்த ஊர் சின்னசாமித் தேவராக இன்று விளங்குகிறார். அக் கூட்டுறவு சங்கத்தில் அவர் ஒரு நிர்வாகி. அவரை முன்பு புறக்கணித்த ஊரார் பலரும் இன்று சங்கத்தில் கடன் வாங்க அவரை எதிர்பார்க்க வேண்டியிருக்கிறது. சின்ன சாமிக்கு ஏன் மதிப்பு ஏற்படாது? சங்கத்தில் தன் சொந்த சேமிப்பு பதினாயிரம் ரூபாய்கள்; விவசா யத்தில் பத்து ஏகரா நஞ்சையும், மொட்டை வண்டியோடுகூட ஒரு பொட்டு வண்டியும் இருக் கிறது. பண்ணையாட்கள் பத்து பேர்கள் எப்பொழுதும் சின்னசாமித் தேவர் வீட்டில் காத்து நிற்கிறார்கள்.

## கேள்விகள்

1. சின்னசாமி தன் வயல்களுக்கு தண்ணீர்த் தட்டு இல்லாமல் என்ன செய்தான்? அதனால் என்ன பயன் அடைந்தான்?
2. சின்னசாமி நல்ல உழைப்பாளி. எவ்விதம்?
3. சின்னசாமி சிக்கனமாக வாழ்பவன். எவ்விதம்?
4. சின்னசாமித் தேவர் நிலைமை என்ன?

**பயிற்சி**

1. வருவாய்க்குள் செலவு செய்யாதவன் நிலைமையை விளக்கி ஐந்து வாக்கியங்கள் எழுதுக.
2. சோம்பேறியின் நிலைமையை விளக்கி ஐந்து வாக்கியங்கள் எழுதுக.
3. சின்னசாமி பின்னும் பத்து ஆண்டுகளுக்குப் பிறகு சிக்கன வாழ்க்கையால் நன்மை பெறுவான் என்பதை விளக்கி ஐந்து வாக்கியங்கள் எழுதுக.

# 11. கல்வியும் செல்வமும்

| | | |
|---|---|---|
| சிறப்பு | பொன்னணி | முயற்சி |
| துயர் | நவமணி | சூழ்ந்து |
| ஏதும் | மாளிகை | அண்டி |

**இரண்டு சிறுவர் பேசுவதாக அமைந்தது.**

1. **மணி:** செல்வம் உள்ளவரே—உலகத்தில்
சீரும் சிறப்பு முளார்
செல்வம் இல்லாதவர்—படுந்துயர்
சொல்ல தரமில்லையே.

2. **கிட்டு:** கல்வியுள்ளவர் தாம்—என்றுமே
காணும் பெருமை யுளார்
கல்வி யில்லாதவர்—சிறுமையைக்
கண்டும் அறிந்திலையே.

3\. மணி: பொன்னணி பூண்டிடலாம்—நவமணிப்
பூண்களும் பூண்டிடலாம்
என்ன நலமுளதே—கல்வியால்
என்னருந் தோழா சொல்வாய்.

4\. கி: பொன்னணி பூண்ட மன்னர் - உலகமே
போற்ற இருந்த துண்டோ
பொன்னணி பூண்டறியாப்—புலவரை
போற்றும் உலக மெலாம்.

5\. ம: மாளிகை வாழ்வு முண்டே-பணத்தினல்
வாகனம் வண்டி யுண்டே
ஆளும் நிலைமை யுண்டே—பிறரையும்
அண்டிப் பிழைப்ப துண்டோ?

6\. கி: கல்விக் கடலினுள்ளே—நிறைந்துள
காட்சி வகை களெல்லாம்
சொல்லி லடங்குவதோ—பணத்திலே
சோர்விலா இன்ப முண்டோ.

7\. ம: உண்ண வுடுக்கவுமே—பிறரிடம்
ஓயாது கை விரிக்கப்
பண்ணும் படிப்பினிலே—நல மென்ன
பார்த்துளாய் சொல்லுகவே.

8\. கி: செல்வம் வளர்ந்திடவும் — தொழிலினல்
தேசம் நலம் பெறவும்
கல்வியே வேண்டு மன்றோ—அமெரிக்கா
காட்டும் வழியதுவே.

9\. ம: புத்தகம் வாங்கவுமே—பள்ளிக்கூடம்
போட்டுப் படிக்கவுமே
எத்தனை செல்வம் வேண்டும்—பண
ஏதும் நடப்பதில்லை. [மின்றி

10\. கி: ஆல மர நிழலில்—முன்னெல்லாம்
ஆயிரம் பேர் படித்தார்
கால நிலைமையினுல்—படிப்புக்குக்
கட்டம் வந்த தப்பா.

11\. ம: அச்சிட்ட புத்தகமே—பணத்தினுல்
ஆயிரம் வாங்கிடலாம்
அச்சினுல் பத்திரிகை—பலப்பல
ஆயிரம் போகுமன்ரே.

12\. கி: ஆயிரம் புத்தகமே—வீட்டில்
அடுக்கி வைப்பதனுல்
ஆயிரம் கோடி யுண்டோ—அவைகளை
அவர் படியா விட்டால்.

13\. ம: கல்வி வளர் வதற்கே—பணத்தினுல்
காணும் உதவி யுண்டு
செல்வம் வளர்வதற்கும்—கல்வியால்
செய்யும் உதவி யுண்டு.

14\. கி: செல்வமும் கல்வியுமே—நாட்டினில்
சேர்ந்து சிறந்திடவே
சொல்லும் வழிகளிலே—முயற்சிகள்
சூழ்ந்து புரிந்திடுவோம்.

## கேள்விகள்

1. கல்வியால் வரும் நன்மைகள் எவை?
2. செல்வத்தால் வரும் நன்மைகள் எவை?
3. ஒன்றுக்கு ஒன்று உதவியாவது எப்படி?
4. அமெரிக்கா என்ன கற்பிக்கிறது?

## பயிற்சி

பாட்டிலே சில சொற்கள் முன்பின்னுக இருக்கலாம். வசனத்தில் அவைகளை ஒழுங்காக எழுத வேண்டும். பின் வரும் பாட்டு அடிகளை வசன முறைப்படிஎழுதுக.

1. என்ன நலம் உளதே—கல்வியால்
என்னருந் தோழா சொல்வாய்.

2. பொன்னணி பூண்டறியாப் —புலவரைப்
போற்றும் உலக மெல்லாம்.

3. மாளிகை வாழ்வு முண்டே — பணத்திருல்
வாகனம் வண்டி யுண்டே.

4. ஆயிரம் புத்தகமே—வீட்டில்
அடுக்கி வைப்பதினுல்
ஆயிரம் கோடி யுண்டோ—அவைகளை
அவர் படியா விட்டால்.

இமய மலையின் உயரப் பகுதிகள் எப்பொழுதும் பனியால் மூடப்பட்டிருக்கும். பல இடங்களில் வெண்மையான பனிக் கட்டிகள் பாறை போல் உறைந்திருக்கும். இக் கட்டிகள் வெய்யிற் காலத்தில் உருகி மலை அருவிகளில் பெருகி ஓடுவதும் உண்டு. இம் மலையில் ஆங்காங்கு பல ஆயிரக் கணக்கான அடி உயரமுள்ள மலைச் சிகரங்கள் தோன்றும். உலகத்திலுள்ள மலைச் சிகரங்களில் மிகவும் உயர்ந்தது இமய மலையிலுள்ள எவரெஸ்டு சிகரம் ஆகும். மேனாட்டார் இம் மலையையும் மலைச் சிகரங்களையும் ஆராய்ந்து அறிய அடிக்கடி நம் நாட்டிற்கு வருகிறார்கள்.

இமய மலையின் நடுப் பகுதிகளில் அடர்ந்த காடுகள் உண்டு. உலகத்திலேயே மிகவும் உயரமாக வளரும் மரங்களை இக் காடுகளில் காணலாம். புலி கரடி முதலிய கொடிய காட்டு விலங்குகளையும் இக் காடுகளில் காணலாம். பெரும்பாலும் மனிதர் நட மாட்டம் இங்கு இராது.

இமய மலைச் சாரலிலும் அடி வாரத்திலும் பல கிராமங்களும் நகரங்களும் உண்டு. பயிர் வளமுள்ள இடங்களும் உண்டு. கோடைகாலத்தில் சுகமாக வாழச் செல்லும் சில நேர்த்தியான ஊர்களும் உண்டு. சிம்லா, நைனிடால் போன்றவை அத் தகைய ஊர்களாகும். இவ்வூர்களில் மலைச் சரிவுகளில் அடுக்கு அடுக்காக கட்டப்பட்டுள்ள வீடுகள் பார்ப்பதற்கு அழகாக இருக்கும்.

சுற்றி வளைந்து செல்லும் பாதைகளில் குதிரைகளின் உதவி கொண்டு மேலே ஏறுவது இங்கு வழக்கம். மலைச் சரிவுகளில் சில புண்ணிய இடங்களும் உண்டு. ரிஷிகேசம், பதிரிநாதம் அவற்றில் முக்கியமானவை. யாத்திரை செய்பவர்கள் இவ் விடங்களுக்குச் சென்று திரும்புவார்கள். ஆண்டு முழுவதும் இங்கு சென்று திரும்புவது முடியாத காரியம். பல மாதங்களில்



இமய மலையும் மலைஅருவியும்

போகும் வழி உறைந்த பனியால் மூடப் பட்டிருக்கும். அதற்கு அப்பாலும் பல இடங்கள் உண்டு. அவ் விடங்களுக்கு மிகுந்த பிரயாசையுடன்தான் செல்ல முடியும்.

இமய மலையின் வெகு உயரத்தில் மானச சரோவரம் என்று ஒரு பெரிய ஏரி இருக்கிறது. அதன் அருகேதான் கைலாயம் இருப்பதாகக் கூறப்படுகிறது. இந்த ஏரியில் மூழ்குவதால்

பாவம் விலகும் என்பது பலருடைய கொள்கை. இவ்வளவு உயரத்திலுள்ள ஏரியில் குளிப்பது எளிதாகவே உள்ளது. இதில் சில வெப்பநீர் ஊற்றுக்கள் இருப்பதே அதற்குக் காரணமாகும்.

இமய மலையிலிருந்து உற்பத்தியாகும் பல ஆறுகள் நம் நாட்டில் ஓடி நிலத்தை வளப்படுத்து கின்றன. கங்கை, பிரம்மபுத்திரா, சிந்து அவற்றில் முக்கியமானவை. அவை எப்பொழுதும் தண்ணீர் பெருகி ஓடும். மழைக்காலத்தில் மழை நீராலும் வெப்பிற் காலத்தில் பனி உருகியும் அவற்றில் தண்ணீர் பெருகும்.

இவ்விதம் இமய மலை நம் நாட்டிற்குச் சிறப்பும் நன்மையும் அளிப்பதை நாம் அறியலாம்.

### கேள்விகள்

1. இமய மலையின் உயரப் பகுதிகள் எப்படி இருக்கும்?
2. இமய மலையின் நடுப் பகுதிகளில் என்ன காணலாம்?
3. இமய மலைச் சாரலிலும் அடி வாரத்திலும் என்ன காணலாம்?
4. மானச சரோவரத்தின் பெருமை என்ன?
5. இம் மலை ஆறுகளில் எப்பொழுதும் தண்ணீர் பெருகி ஓடுவது எதனால்?

## பயிற்சி

I. பின் வரும் சொற்களை எழுவாயாக வைத்து தனித்தனி வாக்கியம் எழுதுக.

இமயம், கங்கை, பனி, யாத்திரை, ஆறு, மலை, நான், நீ, அவள், அவர், அது, அவை.

II. பின் வரும் சொற்களைப் பயனிலையாக வைத்து தனித்தனி வாக்கியம் எழுதுக.

இருக்கிறது, வருகின்றன, காண்பீர்கள், கேட்பாய், வந்தோம், ஓடிற்று.

III. பின்வரும் சொற்களைச் செயப்படு பொருளாக வைத்து தனித்தனி வாக்கியம் எழுதுக.

பனியை, மரத்தை, செடியை,
காட்டை, நாட்டை, பணத்தை,
குழந்தையை, சிறுவனை, செல்வத்தை.

# 13. மதியற்ற ஆடுகள்

| | | |
|---|---|---|
| காட்டாறு | வறண்டு | புரண்டு |
| கடக்க | பாலம் | மேய்ந்து |
| உருட்டி | சளைக்க | பிடிவாதம் |
| மூண்டது | போராடி | சறுக்காது |
| இணங்க | எளிதாய் | சமாதானம் |

காட்டூர் என்பது ஒரு சிறிய ஊர். அதற்கு கிழக்கே உப்பாறு என்ற காட்டாறு ஒன்று ஓடுகிறது. அக் காட்டாறு அனேகமாக வறண்டு

கிடக்கும். எப்பொழுதேனும் காட்டு வெள்ளம் வந்தால் தண்ணீர் வேகமாகப் புரண்டு ஓடும். உப்பாற்றுக்கு மேற்கே முள்ளூர் என்ற சிறிய ஊர் ஒன்று உண்டு. முள்ளூர் மனிதர்கள் ஆற்றை குறுக்கே கடந்து, காட்டூருக்கு நடந்து வருவார்கள். வெள்ளம் வரும் காலங்களில் இந்த ஆற்றைக் கடக்க அதன் குறுகிய இடத்தில் இரண்டு மூன்று மரங்களைச் சேர்த்து ஒரு சிறு பாலம் போட்டிருந்தார்கள்.

முள்ளூரிலே பசுமையான புல் வெளித் தரைகள் உண்டு. காட்டூரிலே காட்டுமரங்கள் அடர்ந் திருந்தன. இரண்டு ஊர்களிலும் உள்ள மாடுகள் முள்ளூரில் உள்ள புல் வெளிகளில் மேய்வது உண்டு. ஆடுகள் காட்டிற்குள் நுழைந்து அங்கே கிடைக்கும் பலவகைக் குழைகளையும் மேய்ந்து வருவது துண்டு. வெள்ளம் வந்தபோது ஆடு மாடுகள் அங்கங்கே நின்று விடும். வெள்ளம் வடிந்ததும் வீடு தேடிப் போகும்.

உப்பாற்றின் வெள்ளத்தில் ஆடு மாடுகள் அடித்துக்கொண்டு போகாமல் இரண்டு ஊராரும் பார்த்துக் கொள்வார்கள். ஆடு மாடுகளும் ஒன்றுக் கொன்று சண்டை இல்லாமலே பழகி இருந்தன.

ஒரு நாள் உப்பாற்றிலே கரை புரண்டு வெள்ளம் வந்தது. முள்ளூர் ஆடுகள் காட்டூரில் இருந்தன. வெள்ளம் வரும் முன்பு ஓடிப் போன

ஆடுகள் வீடுபோய்ச் சேர்ந்து விட்டன. காட்டுரி லிருந்து ஒரு புதிய ஆடு புறப்பட்டது. பாலத்தின் வழியே முள்ளூருக்குப் போக நினைத்தது. அது பாலத்திலே பாதி வழி வருமுன்னே எதிரே மற்றொரு ஆடு வருவதைப் பார்த்து விட்டது.

"அடே, எனக்கு வழி விடு. நான்தான் முதலிலே பாலத்தில் ஏறினேன். வழி விடா




விட்டால் உன்னை முட்டி வெள்ளத்திலே உருட்டி விடுவேன்," என்றது. மேற்கே உள்ள ஆடு அதற்குச் சளைக்காமல் "ஓகோ பெரியவரே, வாரும் ஐயா, நீர் மண்டை பெருத்தவர் ; கொம்பு வளைந் தவர். நான்கு கால்கள் உள்ளவர் ; உமக்கு ஒரு வாலும் உண்டு. நான் உமக்கு வழி விடாமல் இருக்கலாமா! சக்தி இருந்தால் வரலாமே," என்று சொல்லியது.

இரண்டு ஆடுகளும் நடுப் பாலத்திற்கு வந்து விட்டன. பிடித்த பிடிவாதத்தை விடலாமா என்று இரண்டு ஆடுகளும் நினைத்தன. பேச்சு முற்றிச் சண்டை மூண்டது. நிற்கும் இடம் குறுகிய பாலம் என்பதையும், பாலத்தின் கீழே வெள்ளம் ஓடுவதையும் அவை இரண்டும் மறந்து விட்டன.

கொம்பின் வலிமை உள்ள வரையில் விட்டுக் கொடுக்கக் கூடாது என்ற எண்ணத்தோடு இரண்டும் போராடின. சாயாது சறுக்காது செங்குத்தான பாறைகளிலும் இறங்கும் பழக்கம் உள்ள அந்த இரண்டு ஆடுகளும் பாலத்திலிருந்து கீழே விழாமல் வெகு நேரம் சண்டை செய்தன. கோபம் முற்றவே இரண்டும் மோதிப் பாய்ந்து ஒன்றை ஒன்று முட்டி வெள்ளத்திலே தள்ளப் பார்த்தன. மோதிய அடியால் இரண்டும் வெள்ளத்தில் விழுந்து புரண்டு போயின.

பாலத்தின் இரு பக்கங்களிலுள்ள ஊர்களிலிருந்து ஆடுகள் இதை அறிந்தன. மறு நாளும் வெள்ளம் பெருகி ஓடியிற்று. ஒவ்வொரு பக்கத்திலிருந்தும் ஒரு ஆடு அப் பாலத்தைக் கடக்க வந்தது. அவை பின்வருமாறு பேசிக் கொண்டன. சிறிய ஆடு "அண்ணு, நாம் சண்டை போட வேண்டாம். அன்பால் இருவரும் பாலத்தைக் கடக்க வழி தேடுவோம்," என்றது. "எப்படிக் கடக்கலாம். நீ இப் பக்கம் வர

வேண்டும். நானே அப் பக்கம் போகவேண்டுமே, என்றது மற்றொரு ஆடு. முதல் ஆடு "நான் படுத்துக் கொள்கிறேன். என்மேல் ஏறி நீ அப்பால் போய்விடு. நான் பிறகு எழுந்து போகிறேன்," என்றது. இரண்டாவது ஆடு அதற்கு இணங்கவே இரண்டும் எளிதாக ஆற்றைக் கடந்தன. வம்பு வழக்குகள் இல்லாமல் சமாதானத்தோடு வாழ்ந்தால் நன்மையே ஏற்படும் என்பதை இதனால் அறியலாம்.

## கேள்விகள்

1. முதல் நாள் இரண்டு ஆடுகள் சண்டையிடக் காரணம் என்ன?
2. மறுநாள் மற்ற இரண்டு ஆடுகள் எப்படி ஆற்றைக் கடந்தன?

## பயிற்சி

" அடே நீ என்ன செய்ய முடியும்? உன்னால் முடிந்ததைப் பாரடா."

இது மரியாதை இல்லாத முறை.

" தம்பி, நமக்குள் வம்பு வேண்டாம். நாம் மனம் ஒத்து போவோம்."

இது மரியாதை உள்ள முறை.

1. இரண்டு சிறுவர்கள் அன்போடு மரியாதையாகப் பேசுவது போல் நான்கு வாக்கியங்கள் எழுதுக.

2. இரண்டு சிறுவர்கள் கோபத்தால் மரியாதை கெடப் பேசுவது போல நான்கு வாக்கியங்கள் எழுதுக.

# 14. காளமேகப் புலவர்

| | | |
|---|---|---|
| வசை | சிலேடை | இளம்பருவம் |
| வாய்க்க | வீதிவலம் | வாக்குவளம் |
| அருளி | நாயனர் | இறைவன் |
| கைலாயம் | பாசுபதம் | வாதாடி |
| மண்மாரி | பிரபந்தம் | மகுடம் |

காளமேகம் என்பவர் ஒரு பழங்காலத் தமிழ்ப் புலவர். 'வசை பாடக் காளமேகம்' என்று அவரைப் பற்றி ஒரு பழமொழி உண்டு. வசைப் பாட்டு என்பது பிறர் அழிந்து போகும்படி பொருள் வைத்துப் பாடும் பாட்டாகும். இப்புலவர் பல வகைப் பாட்டுக்கள் பாடியிருந்தும் வசைப் பாட்டிலே பெயர் பெற்றிருக்கிறார். இவர் இரண்டு பொருள் தரும் சிலேடைப் பாட்டுக்கள் பல பாடி யிருக்கிறார்.

காளமேகம் என்பது இவருக்கு இயல்பாக வந்த பெயர் இல்லை. கறுத்த மேகம் மழை கொட்டுவது போல கவி மழை கொட்டிய காரணத்தால் இவர் காளமேகம் என்ற பெயர் பெற்றார். இளம் பருவத்தில் இவர் காவேரிக் கரையில் உள்ள ஸ்ரீரங்கத்தில் வாழ்ந்து வந்தார். இளமையில் இவருக்குக் கல்வி யறிவு வாய்க்க வில்லை.

திருவானைக்கோயில் என்ற அடுத்த ஊரில் ஒரு இரவு வீதிவலம் வந்த கடவுள் காட்சியைப் பார்த்துவிட்டு காளமேகம் கோயில் அருகில்

படுத்து உறங்கினர். அப்போது கடவுள் இவருடைய கனவில் தோன்றி இவருக்கு வாக்கு வளம் அருளியதால் புலமை பெற்று அன்றுமுதல் இவர் காளமேகம் ஆனர்.

அதன் பிறகு தேவாலயங்களைக் கண்டு வணங்கும் நோக்கம் கொண்டு காளமேகம் ஊர் ஊராகச் சென்றார். ஆங்காங்கு இவருக்கு மரியாதை செய்தவர் வாழ்த்துப் பெற்றார்கள். இவரை மதியாதவர் வசை பெற்று அழிந்தார்கள்.

ஒரு சமயம் காளமேகம் சிதம்பரத்திற்குச் சென்றார். அப்பொழுது வீதிவலம் வந்த நடராச மூர்த்தியை வணங்கினர். அவ்விடத்தில் கடவுளைப் புகழத் தொடங்கி "அம்பல வாணரே, உம்மைக் கல்லாலும் வில்லாலும் செருப்பாலும் பிரம்பாலும் அடித்தவர்களுக்கு அருள் புரிந்தீர். உம்மை இகழாமல் மலர் தூவிய மன்மதனை எரித்து விட்டீரே. இது என்ன நீதி?" என்று கடவுளைக் கேட்பது போல பாடினர். பாட்டின் பொருள் பின் வருமாறு உள்ளது.

சாக்கிய நாயனர் அயல் மதத்தவர் ஆவார். அவர் சிவ பக்தி பூண்டிருந்தார். தம் இனத் தவர் என்ன நினைப்பாரோ என்று, சிவபூசை செய்ய மனம் இருந்தும் மலர் பறித்துப்போடத் துணியாமல், சிவமூர்த்தியின்மேல் சிறு கற்களை எடுத்து மெல்லப் போடுவார். அவருக்குக்

கடவுள் அருள் புரிந்தார். இதையே காளமேகம் அம்பலவாணர் சாக்கிய நாயனாரால் கல்லால் அடி பட்டதாகக் கூறினர்.

பாண்டவர்களில் ஒருவரான அர்ச்சுனன் பாசுபதம் கேட்கக் கைலாய மலைக்குச் சென்று தவம் புரிந்தான், சிவபிரான் அவன் முன்பு வேடனாக வந்தார். தவம் புரிந்து நின்ற அர்ச்சுனன் மேல் ஒரு பன்றி பாய்ந்தது. அதன்மேல் இருவரும் அம்பு எய்தனர். சிவ வேடன் அர்ச்சுனனை வம்பிற்கு இழுத்தார். அர்ச்சுனன் போராடித் தோற்று வில்லால் வேடச் சிவனை அடித்தான். அவனுக்கும் கடவுள் அருள் புரிந்தார்.

கண்ணப்ப நாயனர் காளத்திமலை மேலே கடவுளை வணங்கியபோது சிவலிங்கத்தின்மேல் இருந்த பூக்களை ஒதுக்கத் தமது செருப்புக் காலையே உதவியாகக் கொண்டார். இதனல் சிவ பிரான் செருப்பு அடி பட்டார். ஆயினும் கண்ணப்பருக்கு அருள் புரிந்தார்.

மாணிக்க வாசகர் பாண்டியனால் வருந்துவது கண்ட சிவ பிரான் வைகையாற்றிலே வெள்ளம் பெருகி வரச் செய்தார். வைகை வெள்ளத்தைத் தடுக்க ஒவ்வொரு வீட்டாரும் அணை போட வேண்டியதாயிற்று. பிட்டு விற்கும் ஒரு கிழவி தன் பங்கை அடைக்கக் கூலியாள் இல்லாமல் வருந்தினள். அவளுக்காக சிவ பிரானே ஒரு

கூலியாளாக வந்தார். கூலியாள் ஒழுங்காக மண் வெட்டிக் கரை போடாமல் விளையாடிக் கொண்டிருந்தார். பாண்டிய அரசன் அங்கு வந்து அக்கிழவியின் பங்கு அடைபடாதிருந்தது கண்டு அவளுடைய கூலியாளைப் பிரம்பால் அடித்தான். பிரம்படி பட்டும் சிவ பிரான் பாண்டிய மன்னனுக்கு அருள் புரிந்தார்.

மன்மதன் தேவர்களின் வேண்டுதலால் சிவனை எழுப்பவேண்டி மலர் அம்புகளை எய்தான். சிவன் தன் நெற்றிக் கண்ணைத் திறந்து அவனை எரித்தார். இத்தனை கதைகளையும் ஒரு பாட்டில் அடக்கிப் புகழ்ச்சியே இகழ்ச்சிபோல் தோன்றும் படியாக காளமேகம் அப்பாட்டில் பாடியிருக்கிறார்.

ஒரு சமயம் காளமேகப் புலவர் அதிமதுரகவி என்ற புலவரை எதிர்த்து வாதாடினார். அதிமதுரர் கேட்ட கேள்விகளுக்கெல்லாம் தக்க விடை கூறியும் அவர் காளமேகப் புலவரை மதியாதிருந்தார். ஆகவே காளமேகம் கோபம் மூண்டு அவ்வூரான திருமலைராயன் பட்டினத்தையே மண்மாரியால் வசை பாடி அழித்தார் என்று ஒரு கதை வழங்குகிறது. இவர் சில பிரபந்தங்களைப் பாடியிருந்தும் இவருடைய தனிக் கவிகளுக்கு அதிக மதிப்பு ஏற்பட்டிருக்கிறது.

காளமேகப் புலவரை 'குடத்திலே கங்கை அடங்கும்படி பாடுவீரா,' என்று ஒருவர் கேட்ட போது, இப்புலவர் பின்வருமாறு பாடினார்.

" விண்ணுக்கு அடங்காமல் வெற்புக்கு அடங்காமல்
மண்ணுக்கு அடங்காமல் வந்தாலும்—பெண்ணை
இடத்திலே வைத்த இறைவன் சடா—ம
குடத்திலே கங்கை யடங்கும்."

சிவ பிரான் சடை மகுடத்தில் கங்கை அடங்கியது என்பது இதன் பொருளாகும்.

## கேள்விகள்

1. காள மேகம் என்ற பெயர் எக் காரணத்தால் வந்தது ?
2. சிதம்பரத்தில் அவர் கடவுளை எப்படிப் புகழ்ந் தார் ?
3. திருமலைராயன் பட்டினத்தை ஏன் அழித்தார் ?
4. குடத்திலே கங்கை அடங்கியது என்பது எப்படிப் பொருள் பட்டது ?

## பயிற்சி

I. நாட்டிற்கு ஏற்ற அரசன் பெயர் வைத்து எழுதுக.

சேர நாட்டில் —— மன்னன் அரசு செய்தான்.
பாண்டிய நாட்டில்——மன்னன் அரசு செய்தான்.
சோழ நாட்டில் —— மன்னன் அரசு செய்தான்.

—

# 15. தொழில் வளர்ச்சி

| | | |
|---|---|---|
| கைத்தொழில் | சாதனங்கள் | தொழிலாளர் |
| தயாரிக்க | தளவாடம் | தட்டுமுட்டு |
| உருவாக்கு | பெருவாரி | தற்பொழுது |
| சுயதேவை | ஈடுபட | நோக்கம் |

மெய் வருந்தி ஒரு தொழிலைச் செய்தால் அதனால் நம் வாழ்வு உயருகிறது. உழவும் ஒரு வகைத் தொழிலே ஆகும். தொழில் வகையில் அது உயர்ந்ததே என்று கூறலாம். ஆயினும் உழவுத் தொழில் நீங்கலாக மற்றத் தொழில்களையே கைத்தொழில் வகையில் வகுக்குகிறோம்.

உழவிற்குக் கலப்பை வேண்டும். கலப்பை செய்ய மரம், இரும்பு முதலியன வேண்டும். மற்ற சாதனங்களான அரிவாள், மண்வெட்டி, கோடரி முதலியனவும் வேண்டும். இவை அனைத்தும் தொழிலின்றும் பிறப்பவையாகும். மர வேலைக்கும் இரும்பு வேலைக்கும் தனித் தனியே தொழிலாளர் உண்டு.

நமக்கு உணவு கிடைத்தால் மட்டும் போதாது; உடையும் வேண்டும். உடை தயாரிக்கப் பருத்தி வேண்டும். பருத்தி நூலாவதும் பிறகு ஆடையாவதும் நாம் அறிவோம். இதற்கு நூற்கவும் நெய்யவும் எத்தனை சாதனங்கள் உண்டு? எவ்வகைத் தொழிலாளர்

வேலை செய்கிறார்கள் என்பதையும் நாம் அறிய வேண்டும். பருத்தி ஆலைகள் நம் நாட்டில் ஒவ்வொன்றாகத் தோன்றி வருவதைக் காணலாம்.

நாம் வசிப்பதற்கு வீடுகள் தேவை. வீடுகளில் எத்தனையோ விதங்கள் உண்டு. வீட்டிற்கு உதவும் தட்டு முட்டுச் சாமான்கள் எத்தனையோ வகைகள் உண்டு. பல தளவாடச் சாமான்களும் வேண்டும். தச்சர், கொல்லர், கொத்தர் முதலிய



தொழிற் பயிற்சிப் பள்ளிக்கூடம். சென்னை

பலரும் சேர்ந்து வீடுகளையும் வீட்டுச் சாமான்களையும் உருவாக்குகிறார்கள். மக்கள் தொகை பெருகிய வண்ணமாகவே இருக்கிறது. ஆகவே வீடுகளும் வீட்டுச் சாமான்களும் பெருவாரியாக ஏற்பட வேண்டும்.

நம் தேவைகள் அத்துடன் நிற்கவில்லை. பிரயாண வசதிகள் தேவையாக இருக்கின்றன.

நமக்கு வண்டிகள் வேண்டும். அவற்றில் எத்தனை மாதிரிகள்தான் உண்டு! மாடு, குதிரை பூட்டி இழுப்பவை இக்காலத்தில் சாதாரண நிலையில் வந்து விட்டன. மோட்டார், ரயில், விமானம் போன்ற வேகமாகச் செல்லும் வாகனங்களையே விரும்புகிறோம். இவை தயாரிக்க எத்தனை தொழிலாளரும் பணமும் வேண்டும்! இவை அனைத்தும் வாழ்விற்கு அவசியமாகவே ஏற்பட்டுள்ளன. இவை தற்பொழுது பெரும்பாலும் அன்னிய நாட்டிலிருந்தே நமக்குக் கிடைக்கப் பெறுகின்றன.

இதனால் பெருஞ் செல்வம் ஆண்டு தோறும் நம்மிடமிருந்து பிற நாடுகளுக்குப் போய்க் கொண்டே இருக்கிறது. இம் முறை தடுக்கப் படவேண்டும். நம் நாட்டிலேயே இவை தயாரிக்க வசதி செய்துகொள்ள வேண்டும். இத் தொழில் களில் பழக பலர் முன்வருவது நன்மையே யாகும். அரசாங்கத்தார் இந்த உண்மையை அறிந்தே பல தொழில்களையும் செய்ய வேண்டி பயிற்சி அளிக்கிறார்கள். அதற்குரிய பல பள்ளிக் கூடங்களும் ஏற்படுத்தி இருக்கிறார்கள்.

நம் நாட்டில் ஆலைத்தொழிலும் குடிசைத் தொழிலும் தன்தன் வழியே பெருக வேண்டும். நாட்டின் சுயதேவையை நம் நாட்டில் தயாரித்த பொருள்களாலேயே அடைய வேண்டும். அதுவே நம் நோக்கமாகக் கொண்டு அனைவரும் தொழில் வளர்ச்சியில் ஈடுபட வேண்டும்.

### கேள்விகள்

1. நம் வாழ்விற்கு மிகவும் அவசியமானவை எவை ?

2. அன்னிய நாடுகளிலிருந்து பெறும் சாமான்கள் எவை ?

3. அன்னிய நாடுகளிலிருந்து சாமான்கள் பெறுவதால் என்ன தீமை ?

4. நாட்டின் சுய தேவையை அடைவது எவ்விதம் ?

### பயிற்சி

அவசியம் இல்லாத ஒரு சொல்லை எடுத்து விடு.

1. நான் நீ நடந்து போனேன்.
2. மாடு வயலில் தண்ணீர் உழுதது.
3. உழவு வீடு உணவு தரும்.
4. தொழில் வளரச் செல்வம் ஏழ்மை வளரும்.

## 16. மானும் காகமும் நரியும்

| | | |
|---|---|---|
| நட்பு | வயிறார | இரைச்சி |
| வஞ்சனை | துணைவன் | ருசியாக |
| விரும்ப | எண்ணம் | அருமை |
| பாழாவது | சிக்கி | விரதம் |
| புதர் | இலகு | ஆச்சரியம் |

ஒரு ஊரை அடுத்த காட்டில் ஒரு மான் வசித்து வந்தது. அங்கு ஒரு மரத்தில் கூடுகட்டிக்

கொண்டு ஒரு காகமும் வசித்தது. நாளடைவில் மானும் காகமும் நட்புக் கொண்டு நண்பர்கள் ஆயின. காகம் பகல் முழுவதும் ஊருக்குள் பறந்து சென்று வயிறாரத் தின்று திரும்பும் போது தன் குஞ்சுகளுக்கும் உணவு கொண்டு வரும். மான் காட்டுப் புற்களை மேய்ந்து இரவு நேரத்தில் காகம் கூடு கட்டியிருந்த மரத்தினடியில் வந்து படுத்து உறங்கும்.

இம்மாதிரி பல நாட்கள் நடந்து வருவதை ஒரு நரி கவனித்து வந்தது. மான் நன்றாக மேய்ந்து கொழுத்து வளர்ந்திருந்தது. அதை தந்திரமாகச் சாக அடித்து அதன் இறைச்சியைத் தின்ன வேண்டுமென்று அந்த நரி ஆசைப் பட்டது. ஆகையால் மானிடம் நெருங்கிப் பழகி அதை வஞ்சனையால் கொல்ல வேண்டுமென்று தீர்மானித்தது.

ஒரு நாள் நரி மானிடம் நெருங்கிப் பழகி புகழ்ந்து பேசியது. அதனோடு நட்புக் கொள்ள விரும்புவதாகவும் தன்னால் முடிந்த உதவி செய் வதாகவும் சொன்னது. மான் அவ் வார்த்தைகளை நம்பி நரியை மற்றொரு துணைவனாக ஏற்றுக் கொண்டது. ஆனால் காகம் மட்டிலும் இப் புதிய நட்பை விரும்பவில்லை.

நரி மானிடம் “நண்ப, காட்டுப் புற்களை மேய்வதை விட காட்டிற்கு அப்பால் ஊர்ப் பக்

கத்தில் வளர்ந்திருக்கும் இளம் பயிர்கள் மிகவும் ருசியாக இருக்கும். குடியானவன் வருவதற்குள் நீ அதிகாலையில் அங்கு சென்று மேய்ந்து பார். பிறகு எந்தப் புல்லையும் நீ விரும்ப மாட்டாய்," என்றது. மான் இவ்விதம் மேய்வதைக் கண்டால் குடியானவன் ஏதாவது ஒரு நாள் மானைத் தடி கொண்டு ஓங்கி அடிப்பான். அதுவும் இறக்க நேரிடும். தன் எண்ணம் நிறைவேறும் என்று நரி நினைத்திருந்தது.

மானும் அடுத்த நாள் நரி சொன்ன விதமாக காட்டு ஓரத்திலுள்ள வயல்களுக்குச் சென்று இளம் பயிர்களை மேய்ந்து திரும்பியது. நரியை தன் அருமை நண்பனாகவே நினைத்து விட்டது. பிறகு தினந்தோறும் மான் இவ்விதமே சென்று மேய்ந்து வந்தது.

பயிர்கள் பாழாவதைக் கண்ட குடியானவன் மானை எப்படியாவது பிடித்து விடவேண்டு மென்று நினைத்தான். அவன் அதற்காக ஒரு வலையை மான் வரும் வழியில் தன் வயலுக்கு அருகில் ஒரு மரத்தினடியில் விரித்து, முளைகள் அடித்துக் கட்டியிருந்தான். வழக்கம் போலவே மானும் அன்று மேய வந்தபோது, விரித்திருந்த வலையில் அகப்பட்டுக் கொண்டது. நரியும் தன் எண்ணம் அன்று நிறைவேறியது கண்டு, சற்று தூரத்தில் வந்து நின்றது. மான் நரியிடம் " உன் சொற்களைக் கேட்டு இங்கு வந்து வலையில்

சிக்கிக் கொண்டேன். குடியானவன் சீக்கிரம் வந்து விடுவான். அதற்குள் இவ் வலையை அறுத்து என்னை உயிரோடு தப்ப விடு. உனக்கு நன்மை ஏற்படும்," என்றது. நரி தன் எண்ணம் அன்று தான் பலித்தது என்று மனம் குளிர்ந்தது. "மானே! எனக்கு இன்று விரத நாள். நான் வலையைத் தொட முடியாது. நான்



நாளைக்குக் கட்டாயம் இங்கு வந்து உன்னை விடுவிக்கிறேன்," என்று கூறி அருகில் இருந்த புதரில் போய் மறைவாக இருந்தது.

காகம் அவ்வழியே பறந்து வந்தது. தன் நண்பனை மான் வலையில் அகப்பட்டுத் தப்ப வழியில்லாது கிடப்பதைக் கண்டது. மான் காக்கையிடம் தன் கதையைச் சொல்லி நரியின் வஞ்சகத்தை அறிவித்தது. காகம் மானிடம் "நண்ப! கவலைப் படாமல் இரு. குடியானவன்

வரும் போது செத்தது போல் மூச்சை அடக்கி அசையாமல் இரு. உன்னைப் பார்த்து செத்து விட்டாய் என்று குடியானவன் வலையை எடுத்துக் கொண்டு புறப்படுவான். நான் மரக் கிளையிலிருந்து கத்தும் போது உடனே எழுந்து வேகமாக ஓடி விடு," என்றது.

குடியானவனும் சிறிது நேரத்தில் வந்து சேர்ந்தான். மான் செத்து விட்டதாகவே நினைத்தான். வலையில் மான் அகப்பட்டு சிக்கியிருந்ததால் குடியான்வன் வலையை இலகுவாக எடுக்க முடியவில்லை. ஆதலால் சிக்கியிருந்த இடங்களை அறுத்து மானை விடுவித்து வலையை எடுக்கும் போது, கிளையிலிருந்த காக்கை கத்திற்று. மான் எழுந்திருந்து ஒரே பாய்ச்சலாக ஓடிற்று. குடியானவன் ஆச்சரிய மடைந்தான். தன் கையிலிருந்த தடியை மானின் மேல் வேகமாக வீசினன். மான் அடிபடாமல் தப்பி ஓடிவிட்டது. அப்பால் மறைந்திருந்த நரியின் மேல் அந்தத் தடி வேகமாகப் போய் விழுந்ததால் நரி நன்றாக அடிபட்டு இரத்தம் கக்கி உயிர் விட்டது. காகமும் மானும் தங்கள் இருப்பிடம் சென்றன.

இதனல் 'கெடுவான் கேடு நினைப்பான்' என்பது விளங்குகிறது. நன்கு அறிந்த பிறகே எவருடைய நட்பையும் கொள்ள வேண்டும் என்பதை நாம் அறிய வேண்டும்.

## கேள்விகள்

1. மானைக் கொல்ல நரி என்ன தந்திரம் செய்தது?
2. காக்கை வலையில் அகப்பட்ட மானை எப்படி விடுவித்தது?
3. இக் கதையால் விளங்கும் நீதி என்ன?

## பயிற்சி

I. அப்பால் × இப்பால்—எதிர் மொழி ஆகும்.

எதிர்மொழி எழுதுக :—

| | |
|---|---|
| இளமை × | நல்லது × |
| நண்பன் × | இரவு × |

II. 1. மானைப் பார்த்த நரி தனக்குள் நினைத்துக் கொள்வது போல நான்கு வாக்கியங்கள் எழுது.

2. காக்கை, மான் வலையில் அகப்பட்டிருப்பதைக் கண்டு தனக்குள் மனம் வருந்துவது போல் நான்கு வாக்கியங்கள் எழுது.

3. மான் தப்பிய பிறகு காகம் அதற்குப் புத்தி கூறுவது போல் நான்கு வாக்கியங்கள் எழுது.

4. அடிப்பட்டுச் செத்துபோன நரியின் நிலைமையை விளக்கி காகம் மானிடம் கூறுவது போல சில வாக்கியங்கள் எழுது.

# 17. சுதந்திரனின் பள்ளிக்கூடம்

| | | |
|---|---|---|
| மாணவன் | ஆடம்பரம் | கவனம் |
| குலத்தொழில் | போதிக்க | அனுபவம் |
| வாழ்க்கை | செல்வம் | காட்சிசாலை |
| கைத்திறன் | நம்பிக்கை | படிப்பினை |
| செய்கை | நல்லொழுக்கம் | விருப்பம் |

*(ஒரு மாணவன் கூறுவதுபோல அமைந்தது.)*

நான் ஒரு ஆரம்பப் பள்ளிக்கூட மாணவன். என் பெயர் சுதந்திரன். என் பள்ளிக்கூடத்தைப் பற்றியும், அதில் படிக்கும் மாணவர்களைப்பற்றியும் சில விவரங்களை உங்களுக்குக் கூறலாமென்று நினைக்கிறேன்.

என் பள்ளிக்கூடம் ஒரு சிறு தோட்டத்தின் நடுவில் உள்ளது. அது ஒரு ஆடம்பரமான கட்டடம் இல்லை. ஒரு சிறு வீடு மாதிரிதான் உள்ளது. ஆனால் வெளிச்சமும் காற்றும் நன்றாக வீசும் விதமாக அமைக்கப் பட்டுள்ளது. நானும் பிற மாணவர்களும் பள்ளிக்கூடத்தை சுத்தமாக வைத்துக் கொள்வதில் அதிக கவனம் செலுத்துகிறோம். பெஞ்சு, நாற்காலி, மேஜை இவை கெடாமலிருப்பதிலும் நாங்கள் கவனங் கொள்ளுகிறோம்.

என் பள்ளிக்கூடத்தில் பல மாதிரியான குலத் தொழிலுள்ள மாணவர்களும் படிக்கிறார்கள். புத்தக மூலம் கல்வி பயிலுவதோடு, தொழிற் கல்வியும் கற்பிக்கப் படுகிறது. அதற்கான வசதிகளைக் கொண்ட சில தனி வகுப்புகளும் நடத்தப் படுகின்றன. நூற்றல், நெய்தல், தச்சுவேலை, சித்திரம் வரைதல் முதலிய பல தொழில் முறைப் பாடங்கள் எங்களுக்குப் போதிக்கப் படுகின்றன. தவிரவும் சோப் செய்யும் முறை, தீக்குச்சி செய்யும் முறை முதலிய வேறு சில பாடங்களும் அனுபவ முறையில் காண்பிக்கப் படுகின்றன.

புத்தகத்தில் வரும் பாடங்களை மட்டும் கற்று உருப்போட்டுத் தேறுவது மாத்திரம் வாழ்க்கையில் நல்ல பலன் கொடுக்காது. ஒவ்வொருவரும் ஏதாவது ஒரு தொழிலை தன் நிலைமைக்குத் தகுந்தவாறு கற்றால்தான் இனி வரும் நாட்களில் காலம் தள்ளலாம். அப்பொழுதுதான் நம் நாட்டிலேயே தேவைப் பொருள்களைத் தயாரிக்கலாம். அன்னியர் பொருள்களை வாங்கத் தேவையில்லை. செல்வம் நாட்டிலேயே நிலைத்திருக்கும். நாடு சுதந்திர நாடு என்று ஒருவாறு கூறலாம். அவ்விதம் தொழில் முறைப் பாடங்களில் நாங்கள் தயாரித்த சில பொருள்களை எங்கள் காட்சி சாலையில் வைத்திருக்கிறோம். எங்கள் பெற்றோர்கள் அவைகளை வந்து பார்த்து எங்கள் கைத்திறனை மெச்சுகிறார்கள். அதிலிருந்து வாழ்க்கையை

கைத்தொழில் முறையில் நன்கு நடத்தலாம் என்ற நம்பிக்கை எங்களுக்கு ஏற்பட்டிருக்கிறது.

தோட்ட வேலை மற்றொரு முக்கியமான பாடம். எங்கள் பள்ளிக்கூடத் தோட்டத்தில் பலன் தரும் செடி கொடிகளைப் பயிரிடுகிறோம். சில பழ மரங்களையும் பயிரிட்டிருக்கிறோம். எங்கள் படிப்பு முடியுமுன் அவை எங்களுக்குப்



பலன் அளிக்காது என்று அறிவோம். ஆயினும் இனி வரும் மாணவர்களாவது அவற்றின் பலனை அனுபவிப்பார்கள் என்பதை நினைக்கும் போது எங்கள் மனது மகிழ்ச்சி அடையும். தானிய வகைகளைப் பயிரிடும் முறைகளையும் பாடங்கள் மூலமாக அறிகிறோம். அந்தி நேரங்

களில் பாத்திகள் கட்டுவதும், தண்ணீர் இறைப்பதும் எங்களுக்குப் பொழுது போக்காக இருக்கும். அவை ஒரு விதமான உடற் பயிற்சியாகவும் இருக்கும்.

எங்கள் உபாத்தியாயர் பள்ளிக்கூடத் தோட்டத்திலுள்ள வேப்ப மரத்தடியில் இரு மரப்பெட்டித் தேன் கூடுகளை சென்ற மாதம் கொண்டுவந்து வைத்தார். தேனீக்கள் காலை வேளைகளில் தேன் சேர்க்கச் செல்வதும், கூடுகளுக்குத் திரும்புவதும் எங்கள் கவனத்தை இழுக்கும். அமாவாசை முன் தினம் கூடுகளைத் திறந்து உபாத்தியாயர் இரண்டு படி அளவு தேனை எடுத்தார். நல்ல சுத்தமான தேன். நாம் இரை போடாமலிருக்கும் போது தேனீக்கள் தேனைச் சேகரித்துக் கொடுப்பது, நமக்கு ஒரு படிப்பினையாகும். "ஒருவரிடமும் திரும்ப உதவியை எதிர் பாராது நீ மற்றவருக்கு உதவி புரிய வேண்டும்," என்பதை தேனீக்களின் செய்கை விளக்குகிறதல்லவா?

விளையாட்டிலும் தோட்ட வேலையிலுமே எங்களுக்கு அதிகமான விருப்பம் என்று எண்ணுகிறீர்கள். எங்களுக்குப் படிப்பிலும் நல்ல விருப்பம் உண்டு. உபாத்தியாயர் எண்ணும் எழுத்தும் கற்பிப்பதோடு நல்லொழுக்கத்தையும் கற்பிக்கிறார். நல்லொழுக்கமே நம் வாழ்க்கையை நலப்படுத்தும். இன்றைய சிறுவர்களாகிய நாமே நாளைப் பெரியவர் ஆவோம். அன்றைய சிறுவர்

களுக்கு நமது நடத்தை வழி காட்டியாக இருக்க வேண்டும். அம்முறையில் நாம் எல்லோரும் நடப்போமாக.

### கேள்விகள்

1. சுதந்திரனின் பள்ளிக்கூடத்தில் என்ன பாடங்கள் கற்பிக்கிறார்கள்?
2. அப் பாடங்களால் என்ன நன்மை ஏற்படும்?
3. பள்ளிக்கூடத் தோட்டம் எப்படி அமைந்து இருக்கிறது?

### பயிற்சி

I. தேனீக்கள் தேன் சேர்க்கச் செல்வதும் கூடுகளுக்குத் திரும்புவதும் எங்கள் கவனத்தை இழுக்கும். மேற்கண்ட வாக்கியத்தை இருவாக்கியங்களாக ஆக்கு.

II. உபாத்தியாயர் இரண்டு படி தேன் எடுத்தார். நல்ல சுத்தமான தேன்.—ஒரே வாக்கிய மாக்கு.

## 18. குயிலும் கிளியும்

| | | |
|---|---|---|
| உரிமை | காமரம் | தோட்டம் |
| யாக்கை | இனம் | இச்சை |
| சிறை | படைத்தவன் | பைந்தமிழ் |

1. குயில். பேசப் பழகிவிட்டாய்—கிளியே
பேசி மகிழுகின்றாய்
பேச்சில் உரிமை யுண்டோ—கிளியே
பேசிப் பயனில்லையே.

2 கிளி பாட்டு மழை பொழிவாய்—குயிலே
பாட்டால் உருக்குகிறாய்
பாட்டுன் உரிமை தானோ—குயிலே
பாடி மகிழு வையே.

3. குயில் நம்மவர் கூட்டத்திலே—கிளியே
நாம் பேசும் பேச்சலவோ
நம்மவர் தாய் மொழியாம்—கிளியே
நாணம் இலை உனக்கே.

4. கிளி மாமரச் சோலை யிலே—குயிலே
வந்து மறைந்து நின்றே
காமரம் பாடு கின்றாய்—குயிலே
கற்றது யாரி டமே.

5. குயில் இயற்கைச் செல்வ மன்றோ—கிளியே
எனக்கு இசைக் கலையே
செயற்கைத் தேட்ட மில்லை—கிளியே
தேசம் சிரிப்ப தில்லை.

6. கிளி தண்டமிழ் சொற் களையே—குயிலே
தக்கபடி யுரைப் பேன்
தண்டமிழ் இன் பறியாய்—குயிலே
சண்டை யிட வருவாய்.

7. குயில் பைந்தமிழ் உன் மொழியோ—கிளியே
பாடம் பழக்கி வைத்தாய்
எந்த மொழி யரிதே—கிளியே
ஏ னிந்த நாடகமே.

8. கிளி நீயும் பழக லாமே—குயிலே
நீட்டி முழக் குகிறாய்
வாயும் திறப்ப துண்டோ—குயிலே
வார்த்தை வருவ துண்டோ.

9. குயில் என்னை வளர்ப்ப துண்டோ—கிளியே
ஏழை மனித ரினம்
உன்னை வளர்ப்பது போல்—கிளியே
ஊட்டி வளர்ப்ப துண்டோ!

10. கிளி காக்கையைப் போலி ருப்பாய்—குயிலே
கண்டோர் அரு வருப்பார்
யாக்கை அழ கில்லையே—குயிலே
யாரே உன்னை வளர்ப்பார்?

11. குயில் பச்சை நிற முடையாய்—கிளியே
பார்த்தவர் கண் கவர்வாய்
இச்சை வளர்த் திடுவாய்—கிளியே
யாரும் உனைப் பிடிப்பார்.

12. கிளி அருமைக் கூடு கட்டி—குயிலே
ஆசையோ டென்னை வைப்பார்
பெருமை யெல்லாம் செய்தே—குயிலே
பேச்சும் பழக்கி வைப்பார்.

13. குயில் கூடு சிறை யில்லையோ—கிளியே
கொண்டா டுவாய் மகிழ்ந்தே
காடு திரிவ திலே—கிளியே
காணலாம் ஆனந் தமே.

**14. கிளி**
காட்டில் திரிகை யிலே—குயிலே
கற்ற இசையை யெல்லாம்
காட்டிலே கொட்டு வையோ—குயிலே
காதுகள் உண்டோ அங்கே.

**15. குயில்**
கடவுள் தந்த செல்வம்—கிளியே
கானப் பெருங் கெனக்கே
கடவுள் கேட்டி டவே-கிளியே
காட்டிலே கொட்டு கிறேன்.

**16. கிளி**
என்னைப் படைத் தவனோ—குயிலே
இப்படி வாழ வைத்தான்
உன்னைப் பிடித்து வையார்—குயிலே
ஒரு மனித ருமே.

## கேள்விகள்

1. கிளிக்கு உள்ள பெருமை என்ன?
2. குயிலுக்கு உள்ள பெருமை என்ன?
3. கிளியின் வாழ்வில் உள்ள குறை என்ன?
4. குயிலின் வாழ்வில் உள்ள குறை என்ன?

## பயிற்சி

பின் வரும் வாக்கியங்களில் எழுவாய், பயனிலை எடுத்து எழுதுக.

1. கண்டோர் அருவருப்பார்.
2. நான் காட்டில் கொட்டுவேன்.
3. மனிதர் உன்னைப் பிடியார்.

# 19. பல துளி பெரு வெள்ளம்

## தேசீய சேமிப்புத் திட்டம்

(தந்தையும் மக்களும் பேசுவதாக அமைந்தது.)

| | | |
|---|---|---|
| உண்டில் | முடிவு | மதிப்பு |
| தபால் | பத்திரம் | ஆண்டு |
| சேமிப்பு | திட்டம் | எண்ணம் |
| மதிப்பு | வட்டி | பழக்கம் |

**தந்தை :** கண்ணா, உன் உண்டியில் இப்பொழுது எத்தனை பணம் இருக்கும்?

**கண்ணன் :** அப்பா, நேற்றுத்தான் திறந்து பார்த்தேன். ஒரு ரூபாயும் ஆறு அணைக்களும் இருந்தன.

**தந்தை :** மாதவா, உன் உண்டியில் எத்தனை சேர்ந்திருக்கிறது?

**மாதவன் :** அப்பா, என் உண்டியில் பன்னிரண்டு ரூபாய்கள் எட்டணைக்கள் இருப்பதைப் பார்த்தேன்.

**தந்தை :** கமலா, உன் உண்டியில் எத்தனை சேர்ந்திருக்கிறது?

**கமலா :** அப்பா, என் உண்டியில் ஐந்து ரூபாய்கள் ஐந்து அணைக்கள் உண்டு.

**தந்தை :** குழந்தைகளே, இந்தப் பணத்தை இனி என்ன செய்வது என்பதைப் பற்றி ஒரு முடிவு செய்ய வேண்டும்.

**கமலா :** அப்பா, எங்கள் உண்டியல் பணம் எங்களுக்குத்தானே? அப் பணத்தை என்ன செய்யலாம் என்று நாங்களே முடிவு சொல்லுகிறோம்.

**தந்தை :** மாதவா, உன் பணத்தைக் கொண்டு என்ன செய்யலாம்?

**மாதவன் :** அப்பா, எனக்கு ஒரு கடியாரம் வேண்டும்.

**தந்தை :** கண்ணா, உனக்கு என்ன வேண்டும்?

**கண்ணன் :** நான் இன்னும் பணம் சேர்த்து ஒரு சைக்கிள் வாங்கி அதன்மேல் ஏறிவர ஆசைப் படுகிறேன்.

**தந்தை :** கமலா, உனக்கு என்ன வேண்டும்?

**கமலா :** அப்பா, நான் பணம் நிறையச் சேர்த்த பிறகு நகை பண்ணிக் கொள்ளப் போகிறேன்.

**தந்தை :** குழந்தைகளே, உங்கள் உண்டில் பணத்தைக் கொண்டு வேண்டிய பொருளை நீங்கள் வாங்கிக் கொள்ளலாம். வாரம் தோறும் அம்மாவும் நானும் கொடுக்கும் சிறிய தொகைகளைப் போட்டு வந்தால் உங்கள்




தேசிய சேமிப்புப் பத்திரம் வாங்குவது

எண்ணங்கள் விரைவில் நிறை வேறும். சில்லறைப் பணத்தை உண்டிலில் போட லாம். மொத்தமாகச் சேர்ந்த பணத்தை வளர்க்க ஒருவழி உண்டு.

**கமலா** : பணம் எப்படி அப்பா வளரும்? மரமா, செடியா, அது?

**தந்தை** : உங்களுக்கு தபால் ஆபீசு தெரியுமே. அங்கே உங்கள் பணத்தைச் சேர்த்து வைத்து வளர்க்க ஒரு வழி உண்டு.

**கண்ணன்** : தபால் ஆபீசில் எப்படிப் பணம் போடுவது? எங்கள் பணத்தைப் போட அங்கே இடம் உண்டா? உண்டிலைக் காலி செய்தா போடவேண்டும்?

**தந்தை** : உங்கள் உண்டில் காலியாக வேண்டாம். நீங்கள் ஐந்து ரூபாய்கள் சேர்த்ததும் அதைத் தபால் ஆபீசில் கொடுத்து அதன் மதிப்பிற்குரிய ஒரு பத்திரம் வாங்கலாம். அப் பத்திரம் நம்மிடம் இருக்க வேண்டும். தபால் அதிகாரிகள் நமது பணத்திற்கு வட்டி சேர்த்துக் கொடுப்பார்கள்.

**மாதவன்** : என்ன பத்திரம் அப்பா; ஐந்து ரூபாய்களுக்குத் தான் அப் பத்திரம் உண்டா?

**தந்தை :** மாதவா, ஐந்து முதல் ஐயாயிரம் ரூபாய்கள் வரையில் இப் பத்திரங்கள் உண்டு. இதற்கு தேசீய சேமிப்புப் பத்திரங்கள் என்று பெயர். நம் நாட்டிலே குறைந்த பணம் உள்ள ஏழைகளும் சிக்கனம் செய்து பணம் சேர்க்கும் பழக்கம் கொள்ளும் பொருட்டு இந்த வழி பிறந்திருக்கிறது. இப் பத்திரங்கள் ஐந்து, ஏழு, பன்னிரண்டு ஆண்டுகள் கால அளவுடன் கூடியவை.

**கண்ணன் :** நம் பணத்தை அவர்களிடம் கொடுத்து விட்டு நாம் பல ஆண்டுகள் காத்திருக்க வேண்டுமா ?

**தந்தை :** குழந்தாய், அப்படி இல்லை. ஐந்து ஆண்டுப் பத்திரங்களையும் ஏழு ஆண்டுப் பத்திரங்களையும் நமக்குத் தேவையானால் நாம் நினைத்த போது பணம் ஆக மாற்றி விடலாம். பன்னிரண்டு வருடப் பத்திரங்களை ஒரு வருடத்தின் பிறகே மாற்றலாம்.

**கமலா :** நான் என் ஐந்து ருபாய்களை ஐந்து வருடம் வரை தபால் ஆபீசில் போட்டு வைக்கிறேன். மீதம் அணக்களை என்ன செய்யலாம் ?

**தந்தை :** உண்டியில் சில்லறைப் பணம் இருக்கலாம். ஆனால் அப் பணத்திற்கு சேமிப்பு தபால் தலைகள் வாங்கி ஒரு அட்டையில்

ஓட்டி வந்து, இவ்விதமே ஐந்து ரூபாய்கள் வரை தபால் தலைகள் சேர்ந்ததும் இப் பத்திரம் வாங்கலாம். குழந்தைகளே இந்த திட்டத்தின்படி நீங்கள் சிறிது சிறிதாக சேர்த்தால் என்றும் பணத்தை வீணாக்காத அறிவு உங்களுக்கு வரும். உங்கள் சிறு முயற்சியும் நாட்டிற்கு ஒருவகை உதவி யாகும். பல துளி பெரு வெள்ளம் என்ற பழமொழியும் உண்மையாகும்.

**குழந்தைகள் :** அப்பா, எங்களுக்குத் திட்டம் போடுகிறீர்களே! நீங்கள் என்ன சேர்த்து வைத்திருக்கிறீர்கள் ?

**தந்தை :** குழந்தைகளே, உங்கள் கேள்விக்கு மெச்சுகிறேன். சென்ற ஆண்டில் மகசூல் விற்ற பணம் ஐயாயிரம் ரூபாய்களும் இத் திட்டத்தில் பத்திரம் வாங்கியிருக்கிறேன். சில காலம் கழிந்து கமலா கலியாணத்திற்கும் கண்ணன், மாதவன் கலாசாலைப் படிப்பிற்கும் பணம் வேண்டுமல்லவா ? அதற்காகவே அப் பணம் சேர்த்து வைத்திருக்கிறேன்.

**குழந்தைகள் :** நல்லது அப்பா, அதற்காக நாங்கள் நன்றி செலுத்துகிறோம்.

## கேள்விகள்

1- உண்டிலில் குழந்தைகள் பணம் சேர்த்தது எப்படி ?

2. தந்தை கூறிய புது வழி என்ன ?

3. தபால் ஆபீசில் சிறு பணத்தைச் சேமிப்பது எப்படி ?

4. பணம் சேர்ப்பதால் நன்மை என்ன ?

## பயிற்சி

I. குழந்தையை அழைக்க குழந்தாய் என்கிறோம். பிள்ளை, தந்தை என்ற சொற்களைக்கொண்டு எப்படி அழைக்கலாம் ?

II. கண்ணன்—முதல் வேற்றுமை.
கண்ணா எட்டாம் வேற்றுமை.
அண்ணன், அப்பா, பாட்டன், வேலன், முருகன், இவற்றிற்கு எட்டாம் வேற்றுமை சொல்லுக.

III. கிளி முதல் வேற்றுமை.
கிளியே எட்டாம் வேற்றுமை.
மயில், மகன், மகள், இவற்றிற்கு எட்டாம் வேற்றுமை கூறுக.

---

# 20. வைத்தியர் யார் ?

| | | |
|---|---|---|
| கண்டம் | அரசாண்டு | இத்தாலி |
| ஜெர்மனி | பிரான்சு | அடையாளம் |
| மறைமுகம் | மூடுபனி | மெலிந்து |
| வைத்தியர் | இளகியது | மயங்கி |
| உணர்ந்து | அதிகாரி | வறுமை |

ஐரோப்பா கண்டத்தில் முற்காலத்தில் அரசர் பலர் சிறு சிறு நாடுகளை அரசாண்டு வந்தார்கள். இத்தாலி, ஜெர்மனி என்ற நாடுகளின் அரசர்கள் இப்பொழுது மறைந்து விட்டார்கள். பிரான்சிலும் அரசர் வாழ்ந்த அடையாளமே இல்லை. இரண்டொரு நாடுகளில் மட்டுமே இன்னும் அரசர் உண்டு.

முன்னொரு காலத்தில் ஜெர்மன் மன்னர் ஒருவர் செய்த உதவியைப் பற்றி இக் கதையிலே படிப்போம். அவர் மாற்று உடை அணிந்து நாட்டிலே பல பக்கங்களிலும் போய் வருவது வழக்கம். தன் ஆட்சியிலுள்ள குறைகளை மறை முகமாகச் சென்று அடிக்கடி அறிந்து வருவார். அவ்விதம் ஒரு நாள் உண்மையாக நடந்த நிகழ்ச்சியை இங்கே கூறுவோம்.

அந்நாட்டிலே பனி மிகுதியாகப் பெய்யும். மழையும் மிகுதியாக உண்டு. பனி மிகுந்த காலத்தில் வெளியே மனிதர் நடமாட இயலாது. ஏழைகள்

உணவிற்கு வருந்துவது உண்டு. அரசர் நாடு பார்க்கத் தனிமையிலே நடப்பார். குதிரை மேலும் போய் வருவார். வண்டிகளிலும் போவது உண்டு.

பனி மிகுந்த ஒரு நாள் காலையில் அரசர் தலைநகரின் அருகிலுள்ள கிராமத்தின் வழியே வண்டியில் போய்க் கொண்டிருந்தார். அப்பொழுது ஒரு சிறுமி அவர் வண்டிக்குப்பின் ஓடி வந்தாள். வெளிச்சம் குறைவாக இருந்ததாலும் பனி மறைத்ததாலும் அரசர் சிறிது நேரம் அச் சிறுமியைப் பார்க்கவில்லை. பிறகு அவள் வண்டியின் வலப்பக்கம் வந்து, "ஐயா, ஐயா" என்று அழைத்தாள்.

அரசர் அச் சிறுமியைப் பார்த்தார். "குழந்தாய் உனக்கு என்ன வேண்டும்? என்னை ஏன் அழைத்தாய்?" என்று கேட்டார். அப் பெண் "ஐயா, என் தாயார் நோயால் மெலிந்திருக்கிறாள். உயிர் துடிக்கிறது. நீங்கள் ஒரு வைத்தியராக இருந்தால் என்னுடன் வந்து என் தாயைக் காப்பாற்ற வேண்டும்," என்று தலை வணங்கி மன்றாடினாள்.

அரசர் மனம் இளகியது. "குழந்தாய், நீ வண்டிக்குள் ஏறிக் கொள். உன் வீடு எங்கே இருக்கிறது? வழிகாட்டு; நான் வந்து வைத்தியம் செய்கிறேன்," என்று கூறி அப் பெண்ணை ஏற்றிக் கொண்டு வண்டியை மேலும் விடச்

செய்தார். சிறுமியின் வீட்டின் முன் வண்டி நின்றது. அரசர் தாம் இன்னார் என்பதை தெரிவிக்காமல் வண்டியிலிருந்து இறங்கி வீட்டிற்குள் போனார்.

வீட்டில் பனியின் கொடுமை அதிகமாய் இருந்தது. ஒரு சிறு படுக்கையில் நாற்பது வயது மதிக்கத் தக்க ஒரு பெண் மயங்கிக் கிடந்தாள்.




அரசர் அவள் கையைப் பிடித்து நாடி பார்த்தார். அவளுக்கு என்ன நோய் என்பதை ஒரு நொடியில் உணர்ந்து கொண்டார். உடனே ஒருசிறு கடிதத்தில் இரண்டு மூன்று வரிகளை எழுதி அச் சிறுமியின் கையிலே கொடுத்தார். "குழந்தாய் இதைக் கொண்டுபோய் நீ அருகேயுள்ள இந்த வீதி அதிகாரியிடம் கொடு. அவர் உடனே மருந்து கொடுப்பார்," என்று கூறிப் புறப்பட்டார்.

அச் சிறுமி சீட்டை எடுத்துக் கொண்டு அதிகாரியின் வீட்டிற்கு ஓடினாள். அவர் அச் சீட்டில் அரசர் எழுத்தை அறிந்துகொண்டு அக் குடும்பத்தின் வறுமையே அப் பெண்ணின் நோய் என்பதைத் தெளிவாய் உணர்ந்து வறுமை தீர மருந்து கொடுத்தார். உழைத்துப் பிழைக்க வழி இல்லாத ஏழைகளைக் காப்பது அரசாங்கத்தின் கடமையே என்பதை அறிந்த அதிகாரி அக் குடும்பத்தை நல்ல நிலையில் வைக்க முயன்றார். அச் சிறுமி அவர் கொடுத்த பொருளைப் பெற்றுக்கொண்டு "அந்த வைத்தியர் யார்?" என்று அவரைக் கேட்டாள். அதிகாரி "அம்மா, அவரே நம் அரசர் பெருமான். ஏழைகள் வறுமையைப் போக்கும் வைத்தியர்" என்றார். அச் சிறுமி திரும்பி வந்து தன் தாயிடம் நடந்தவற்றை உரைத்தாள். அரசர் வைத்தியம் குடும்ப வறுமையை நீக்கியது. எப்பொழுதேனும் அரசர் அப்பக்கம் வரும்பொழுது வாசலில் நின்று இருவரும் வணங்கி அவருக்கு நன்றி தெரிவிப்பார்கள்.

## கேள்விகள்

1. மன்னர் எப்படி வெளியே வருவார்?
2. சிறுமி அவரிடம் என்ன வேண்டினாள்?
3. மன்னர் செய்த வைத்தியம் என்ன?

## பயிற்சி

I. அவர் மருந்து கொடுப்பார். அவர் மருந்தைக் கொடுப்பார். இப்படி வாக்கியங்களில் வேற்றுமை வைத்து எழுதுக.

1. மேகம் மழை பெய்யும்.
2. குழந்தை பாட்டுக் கேட்கும்.
3. கண்ணன் குழல் ஊதுவான்.
4. பனி நடுக்கம் தரும்.
5. நாம் கலப்பை பிடிப்போம்.
6. வயலில் நெல் வளர்ப்போம்.
7. மாடு புல் மேயும்.

# 21. உல்லாசப் பிரயாணம்

| | | |
|---|---|---|
| கடற்கரை | விடுமுறை | தயார் |
| உல்லாசம் | கட்டணம் | சுறுசுறுப்பு |
| சிமிட்டி | ஆபத்து | ஆனந்தம் |
| நேர்த்தியான | விஞ்ஞானம் | ஆணையர் |
| காட்சிசாலை | ஆராய்ந்து | சுகவாசம் |

*[நாகப்பட்டினம் கடற்கரையை அடுத்த நகரம். அங்குள்ள ஆரம்பப் பள்ளிக்கூடப் பிள்ளைகளில் சிலர் கோடை விடுமுறை நாட்களில் வெளியூருக்குச் சென்று காட்சிகளைக் கண்டு வந்தார்கள். அதை ஒரு சிறுவன் எடுத்துக் கூறுவதாக அமைந்தது.]*

நான் நாகப்பட்டினம் நகராட்சி ஆரம்பப் பள்ளிக்கூடத்தில் படிக்கிறேன். என் ஊர் கடற்கரையை அடுத்துள்ளது. கடற் காற்று உடம்பிற்கு நன்மை அளிக்கும் என்று இவ் வூருக்கு பலர் வந்து போவார்கள். எங்கள்

உபாத்தியாயர் வகுப்புப் பிள்ளைகளைக் கூட்டிக் கொண்டு கோடை விடுமுறையில் சில நாட்கள் வெளியிடங்களுக்குச் சென்று திரும்புவதாக ஏற்பாடு செய்திருந்தார். வகுப்பிலுள்ள இருபது பிள்ளைகள் அதற்காகத் தயாரானோம். அவரவருக்கு வேண்டிய பெட்டிகள் படுக்கைகளைத் தயார் செய்து கொண்டோம். செலவிற்குப் பணமும் பெற்றோரிட மிருந்து பெற்றுக் கொண்டோம்.

நாங்கள் அனைவரும் குறித்த வேளையில் எங்கள் ஊர் புகைவண்டி நிலையத்தை அடைந் தோம். எங்களுக்காகவே வண்டியில் ஒரு பாகம் ஒதுக்கப் பட்டிருந்தது. மாணவர் இவ்விதம் உல்லாசப் பிரயாணம் செய்ய நிலைய அதிகாரிகள் வசதிகள் செய்து கொடுக்கிறார்கள். பிரயாணச் கட்டணமும் மிகவும் குறைவுதான். வண்டியில் ஏறிக் கொண்டோம். சுகமாகப் போய்வர வேண்டி எங்கள் நகர பரிபாலன சபைத் தலைவரும் ஆணையரும் தக்க ஏற்பாடுகளைச் செய்திருந்தார்கள். வண்டியும் புறப்பட்டது.

மூன்று மணி நேரம் கழித்து தஞ்சாவூரை அடைந்தோம். இரவு எட்டு மணிக்கு எங்களுக்கு வண்டியிலேயே உணவு அளிக்கப் பட்டது. சிறிது நேரம் கழித்து வண்டியும் அங்கிருந்து புறப்பட்டது. பத்து மணிக்கு முன்பே திருச்சி ராப்பள்ளி சந்திப்பை அடைந்தோம். அங்கு பல இடங்களிலிருந்தும் புகை வண்டிகள்

வருவதும் போவதுமாக இருந்தன. எங்கும் ஒரே மின்சார வெளிச்சம். இங்கு ஓய்வே இல்லாமல் சுறுசுறுப்பே எவரிடமும் காணப்பட்டது. நாங்கள் வந்த புகை வண்டி இத்துடன் நின்று விட்டது. மறுநாள் காலை நான்கு மணிக்கு வேறு வண்டியில் போவதாக ஏற்பாடு ஆயிற்று. ஆகவே சிறிது நேரம் படுத்துத் தூங்கினோம்.

அதிகாலையில் நான்கு மணிக்கு 'எக்ஸ் பிரஸ்' வண்டி சென்னையிலிருந்து வந்தது. அதில் ஏறிக் கொண்டோம். அது திருவனந்தபுரம் வரை போகும் வண்டியாகும். போகும் வழியில் கொடைக்கானல் மலைக்கு இறங்கிப் போக வேண்டும். சிறிது நேரத்தில் எங்கள் வண்டி திண்டுக்கல்லை கடந்து, கொடைக்கானல் ரோடு என்ற இடம் வந்தது. நாங்களும் இறங்கினோம். அவ்விடத்தில் காலை உண்டி சாப்பிட்ட பிறகு மலைக்கு ஏறும் மோட்டார் வண்டி ஒன்றில் புறப்பட்டோம்.

மோட்டார் பத்து மைல் தூரம் சாலையில் சென்ற பிறகு மலைமேல் ஏற வேண்டியிருந்தது. இனித்தான் எங்கள் பிரயாணம் உண்மையாகவே உல்லாசமாக இருந்தது. என்ன அருமையான பாதை! நாற்பது மைல் நீளமுள்ள அப்பாதை முழுவதும் சிமிட்டியினாலும் தார் கொண்டும் போடப்பட்டிருக்கிறது. மலைச் சரிவிலே வளைந்து வளைந்து செல்லவேண்டும்.

ஒரு பக்கத்தில் ஒரே பள்ளம். கவனமின்றி மோட்டாரை ஓட்டினால் ஆபத்து நேருமென்பதில் சந்தேகமில்லை. மேலே போகப் போக எங்களுக்கு அளவிலா மகிழ்ச்சி ஏற்பட்டது. மிகவும் குளிர்ந்த காற்று! கடற் காற்றை விட மேலானது. காட்டு மரங்கள் எவ்வளவு உயரமாக இருந்தன! இடை இடையே மலையிலிருந்து அருவிகள் விழுவதும் இன்பக் காட்சியாகவே இருந்தது.

மலைச் சரிவுகளில் எத்தனை பழத் தோட்டங்கள்! ஆரஞ்சு, பேரிக்காய், பலா, பால்பரி போன்ற மரங்கள் அத் தோட்டங்களில் மிகுந்து காணப்பட்டன.

சில மலைச் சரிவுகளில் வாழை மரங்கள் லட்சக் கணக்கில் வளர்ந்திருந்தன. மலை வாழைப் பழம் இங்கிருந்துதான் மிகுதியாக ஏற்றுமதி ஆகிறதாம். இங்கு வாழைக்குத் தண்ணீர் பாய்ச்சுவது முடியாத காரியம். மலைமேல் மேகங்கள் தங்கி, தானகவே பெய்யும் மழை நீர் தான் இவ் வாழைகளுக்குக் கிடைப்பது. பல மலைகளைச் சுற்றிச்சுற்றி கடைசியாக கொடைக்கானல் வந்து சேர்ந்தோம். என்ன நேர்த்தியான இடம்! இந்த ஊர் எங்கள் ஊரை விட ஐயாயிரம் அடிக்கு மேல் உயரமுள்ள இடம் என்கிருர்கள்.

நாங்கள் மோட்டாரை விட்டு இறங்கினேம். நாங்கள் வருவதை முன் கூட்டியே அறிந்திருந்த

அந்த ஊர் பள்ளிக்கூட ஆசிரியர் இருவரும் பிள்ளைகள் பலரும் எங்களை வரவேற்று நாங்கள் தங்க வேண்டிய இடத்திற்கு அழைத்துச் சென்றார்கள். சிறிது ஓய்வு எடுத்துக் கொண்டபிறகு பல இடங்களுக்கும் சென்று பார்ப்பதாக ஏற்பாடு ஆயிற்று.

பிற்பகலில் சிங்கார ஏரிக்குச் சென்றோம். அது ஆறுபோல் வளைந்து வளைந்து மூன்று மைல் நீளமுள்ளது. ஆனால் அதிக அகலமில்லை. அதில் பல படகுகள் மிதந்து கொண்டிருந்தன. தண்ணீர் அலைகள் இல்லாமல் அமைதியாக இருந்தது. சிலர் படகுகளில் ஏறி தாங்களாகவே ஓட்டி, பொழுது போக்கினார்கள். நாங்களும் சில படகுகளில் ஏறிக் கொண்டோம். ஏரியில் படகுகளை செலுத்துவது இங்கு ஆனந்தம் அளித்தது. கரையோரமாக புல் தரைகளில் குழந்தைகள் விளையாடுவதும் இன்பக் காட்சியே ஆகும். ஏரியின் இரு பக்கங்களில் சிமிட்டி பெஞ்சுகள் போடப்பட்டு, பலர் உல்லாசமாக உட்கார்ந்திருந்தார்கள். மலை மேல் மேகங்கள் தவழ்ந்து வருவதும் இந்த ஏரியில் இறங்குவதும் ஆச்சரியமாகவே தோன்றும். மூடு பனி போல் பறந்து வரும்போது எதிர் நிற்பவரும் சிறிது நேரம் மறைந்து போவார்.

இங்குள்ள தோட்டங்களில் பல வகையான பூச்செடிகளைக் காணலாம். ஒரே செடியில் பல

நிறமுள்ள பூக்கள் பூக்கும். இங்கு பூக்களுக்கு மணம் இராது. மிகக் குளிர்ந்த இடமாதலால் ரோஜா போன்ற பூக்களும் மணம் கொள்ளாமலே இருக்கும். முட்டைக்கோசு, காலிபிளவர், காரட் என்ற காய்கறி வகைகள் இங்கு மிகுதியாகக் காணப்படுகின்றன. இவை நல்ல சத்துள்ளவை. குங்கிலிய மரம், யூகலிப்டஸ் மரம் முதலியன அடர்ந்து வளர்ந்துள்ளன. இம் மரங்கள் மிகக் குளிர்ந்த இடங்களிலே தான் பயிராகும்.

மரங்கள் மிகுந்த தோட்டங்களிலே ஆங்காங்கு வசதியான வீடுகள் அமைந்துள்ளன. சில ஆண்டுகளுக்கு முன் இங்கு வெள்ளைக்காரத் தோட்ட முதலாளிகள் பலர் இருந்தார்களாம். நாடு சுதந்திரம் பெற்ற பிறகு அவர்களில் பலர் சொத்துக்களை நம்மவருக்கு விற்று விட்டுப் போய் விட்டார்களாம். இங்கு மலைச் சரிவுகளில் நூற்றுக் கணக்கான வீடுகள் அடுக்கடுக்காக அமைந்து இருக்கும்.

கொடைக்கானல் மலையில் ஒரு உயர்ந்த இடத்தில் வானக் காட்சிசாலை ஒன்று இருக்கிறது. நாங்கள் மறுநாள் இங்கு சென்று பார்த்தோம். பல பெரிய விஞ்ஞானக் கண்ணாடிகள் மூலம் பயிற்சி பெற்ற சிலர் வானுலகை ஆராய்ந்து பார்த்த வண்ணமாக இருக்கிறார்கள். புதிய அனுபவங்களும் தோற்றங்களும் இம் முறையில் இவர்கள் பெற்று உலகிற்கு அறிவிக்கிறார்கள்.

கொடைக்கானலில் மூன்று நாட்கள் தங்கினோம். ஊரை விட்டுப் போகிறோமே என்று நினைத்தோம். அது சுக வாசத்திற்கு நேர்த்தியான இடம். நான்காம் நாள் மலையை விட்டு கீழே வந்தோம். திரும்பவும் ரயில் ஏறி மதுரை நகர் அடைந்தோம்.



மாரியம்மன் தெப்பக் குளம்—மதுரை.

மதுரை ஒரு பழமையும் புதுமையும் சேர்ந்த நகரம். இங்குதான் முற்காலத்தில் பாண்டிய மன்னர்களும் பிறகு நாய்க்கச் சிற்றரசர்களும் ஆண்டார்கள். இங்குள்ள மிகப் பெரிய ஆலயமும் அரண்மனையும் மாரியம்மன் தெப்பக் குளமும் காணத் தக்க காட்சிகளாகும். இங்கு இரண்டு நாட்கள் தங்கி, ஊர் முழுவதும்

சுற்றிப் பார்த்தோம். விடுமுறை நாட்களும் கழிந்து விட்டன. நாங்கள் ஊர் திரும்பினோம்.

சென்ற இடங்களில் பல காட்சிகளையும் கண்டோம். பலரோடு பழகி அனுபவம் பெற்றோம். பல இடங்களில் வழங்கும் முறைகளையும் அறிந்தோம். அங்குள்ள நில வளம், தொழில் வளம் இவற்றையும் பற்றி அறிந்தோம். இவ்வித உல்லாசப் பிரயாணம் நம்மவருக்கு அறிவை வளர்க்கும் என்பதில் சந்தேகமில்லை.

## கேள்விகள்

1. உல்லாசப் பிரயாணத்திற்கு என்ன முன் ஏற்பாடு செய்ய வேண்டும்?
2. கொடைக்கானல் மலைமேல் ஏறும் போது தோன்றும் காட்சிகள் என்ன?
3. கொடைக்கானல் மலைமேல் என்ன காட்சிகள் காணலாம்?
4. மதுரை நகரில் பார்க்கத் தக்க காட்சிகள் என்ன?
5. உல்லாசப் பிரயாணத்தினால் அடையும் நன்மை என்ன?

## பயிற்சி

1. உன் ஊரிலுள்ள சில காட்சிகளை விபரமா எழுதி அவற்றை விடுமுறை நாட்களில்

பார்த்துப் போகலாம் என்று உன் நண்பனுக்கு ஒரு கடிதம் எழுது.

2. நீ உல்லாசப் பிரயாணம் செய்த போது பார்த்த ஒரு ஊரின் நிலைமையையும் உன் ஊரின் நிலைமையையும் ஒப்பிட்டு பத்து வாக்கியங்கள் எழுது.

## 22. சிலம்புச் செல்வி

(நாடகம்)

| | | |
|---|---|---|
| கோலம் | அரண்மனை | நீதிநெறி |
| காவலன் | வணிகர் | விசாரணை |
| வழக்காட | செங்கோல் | மாணிக்கம் |
| வியாபாரம் | சிங்காதனம் | சிறுகல் |
| சிலம்பு | துயரம் | தெறித்து |

டம் : பாண்டியன் அரண்மனை வாயிலும் நீதி சபையும்.

லம் : மாலை.

த்திரர் : பாண்டியன், கண்ணகி, சபையினர், காவலன்.

[அரண்மனை வாயிலில் கண்ணகி வந்து தலைவிரி ாலமாக நிற்கிறாள். வாயிற் காவலன் அவளைக் ண்டு வணங்குகிறான்.]

**கண்ணகி :** காவல, செங்கோல் முறை தெரியாத பாண்டியனிடம் சென்று நான் வந்திருப்பதைக் கூறு.

**காவலன் :** தாயே, நீ யார் என்று போய்ச் சொல்வேன். காளியோ, வேறு தெய்வமோ தெரியவில்லையே. அரண்மனை வாயிலில் நேற்று வரை தெய்வங்கள் வந்ததை நான் பார்த்தது இல்லையே!

**கண்ணகி:** பொய் கூறிய தட்டான் வார்த்தைகளை நம்பி உங்கள் மன்னன் தக்க விசாரணை செய்யாமல் கொலை செய்யப்பட்ட வணிகர் மனைவி நான். என் பெயர் கண்ணகி. என் கணவர் இந் நகரிலே வியாபாரம் செய்து பிழைப்பதற்காக வந்தது உண்மை. கடை வீதியில் என் சிலம்பு ஒன்றை விலை பேசியதும் உண்மை. அரண்மனைச் சிலம்பைக் களவு செய்தார் என்று தட்டான் கூறியது பொய். அதைக் கேட்டு என் கணவரைக் கொன்றது கொடுமை! அரசன் கேட்க நான் என் வழக்கை உரைக்க வேண்டும். என்னை அரசர் முன் அழைத்துப் போவாய்.

**காவலன் :** தாயே, அரசர் முன்போய் இங்கு நீ வந்திருக்கும் நிலைமையை நான் தெரி

விக்க வேண்டும். அரசர் ஆணை பெற்றே இங்கு வந்து அழைத்துப் போகவேண்டும். இதோ போய் வருகிறேன். சற்றே பொறுக்க வேண்டும்.

(உள்ளே ஓடுகிறான்.)

(அரசர் சிங்காதனத்தில் வீற்றிருக்கிறார். மந்திரிகள் முன்னே இருக்கிறார்கள்.)

**அரசர்** : காவல! என்ன செய்தி?

**காவலன்** : அரசர் வாழ்க; நாடு வாழ்க. அரசர் பெருமானே, என்ன சொல்வேன்! காளியோ என்னவோ தெரியவில்லை. ஒரு சிலம்பை ஏந்தி அரண்மனை வாயிலில் நிற்கிறது. இங்கே வழக்காட வேண்டுமாம்.

**அரசர்** : வழக்கு உரைக்க வந்தவரை உடனே இங்கே அழைத்து வருவாயாக. எவராக இருந்தாலும் இங்கே நீதி கிடைக்கும் என்று நம்பி வரலாம்.

**காவலன்** : அப்படியே.

(வெளியே வந்து கண்ணகியை உள்ளே போகும்படி கூறுகிறான்.)

(கண்ணீர் கொட்டும் விழிகளோடு விரிந்த கூந்தலோடு ஒரு சிலம்பை வலக் கையில் ஏந்திக் கொண்டு கண்ணகி அரசர் முன் வருகிறாள்.)

**கண்ணகி** : செங்கோல் முறை தவறிய பாண்டி
மன்னனே! என் வழக்கை அறிவி
கிறேன். என் கணவர் இந் நக
வீதியிலே சிலம்பு விற்க வந்தார். அ
சிலம்பு அரசியின் சிலம்பு போ
இருந்ததால் அவர் கள்வர் ஆ
விடுவாரா? கள்வராகவே இருந்தாலு
நேரில் அழைத்து அவர் என்ன கூறுகிறு
என்று தீர அறியாமல் குற்றம் சாட்டி
ஒருவன் சொற்களை நம்பிக் கொ
செய்வது நீதி நெறி ஆகுமா?



**அரசர்** : பெண்ணே, கள்வனைக் கொல்வது கொடு
கோல் இல்லையே. உன் கணவன் விற்க வ
சிலம்பு அரசியின் சிலம்பே என்று அதை
செய்த தட்டானே கூறுகிறுன். வே
என்ன சாட்சி வேண்டும்? அரசியும் அது த
சிலம்பே என்று அறிந்து கூறி இருக்கிற

**கண்ணகி** : அரசே, நான் ஒரு பெண். பெண்கள் கணவனை இழந்தால் என்ன துயரம் அடைவார் என்பது உமக்குத் தெரியும். நேற்று என் கணவர் விற்க வந்த சிலம்பு இப்போது இங்கு இருந்தால் எடுத்துத் தர வேண்டும். இதோ ! என் கையில் அதன் இணை இருக்கிறது. இரண்டும் ஒன்றுபோல் இருப்பதை எல்லோரும் காணக் காட்டுகிறேன்.

**அரசர்** : பெண்ணே, நேற்று வந்த சிலம்பு இதுவே!

**கண்ணகி**: இந்த இரண்டும் இணை யில்லையா ; எல்லோரும் பாருங்கள். இப்பொழுது ஒன்று கேட்கிறேன். அரசியின் சிலம்பில் உள்ள சிறு கல் என்ன மணியோ?

**அரசர்**: அச் சிலம்பில் முத்து இருக்கும்.

**கண்ணகி**: என் சிலம்பில் உள்ள சிறு கல் எல்லாம் மாணிக்கமே. நான் இதோ சிலம்பை உடைத்துக் காட்டுகிறேன். எந்தச் சிலம்பை உடைக்க வேண்டும் ?

**அரசர்**: எதை உடைத்தால் என்ன? முத்து இருந்தால் அரசியின் சிலம்பு. இல்லை என்றால் உன் சிலம்பே.

**கண்ணகி**: அரசரே என் சிலம்பை இதோ உடைத்தேன் பாரும். (சிலம்பை ஓங்கி உடைக்கிறாள்.

மாணிக்கம் தெறித்து அரசர் முன் போய் விழுகிறது. சபையினர் திகைக்கிறார்கள்.)

**அரசர்:** ஆ! ஆ! என்ன கொடுமை இது! தட்டான் சொல்லிய பொய்யை நம்பி ஒரு குற்றமும் அறியாத புண்ணியனைக் கொன்ற நானோ அரசன்! நானே கள்வன்! நானே கொலைஞன்!

(அரசன் கீழே விழுந்து உயிர் விடுகிறான்.)

(கண்ணகி கோபத்தோடு வெளியே போகிறாள்.)

## கேள்விகள்

1. கோவலன் கொலையுண்டது ஏன்?
2. கண்ணகி உரைத்த வழக்கு என்ன?
3. பாண்டியன் ஏன் இறந்தான்?

## பயிற்சி

I. கள்வன் என்ற சொல் முதல் வேற்றுமையில் உள்ளது.
கள்வனை என்பது இரண்டாம் வேற்றுமை ஆகும்.

கீழ்க்கண்ட சொற்களை இரண்டாம் வேற்றுமை ஆக்குக.

வீடு, புலி, கோயில், கிணறு. அரசன், பெண்.

II. காவலன் என்பது முதல் வேற்றுமை.
காவல என்பது எட்டாம் வேற்றுமை.

பின் வரும் சொற்களுக்கு எட்டாம் வேற்றுமை கூறுக. **அரசன், புலவன், வேடன், முருகன்.**

III. நானே **அரசன்.** நானே கள்வன். அவனும் வருக.

2 ஓ. ஏ. உம் இவை இடைச் சொற்கள். பின் வரும் வாக்கியங்களின் இடைச் சொல்லை எடுத்தெழுதுக.

1. கற்றவனும் நீ தானே?
2. மதுரை ஒன்றே நகரம்.
3. கடன் கேட்கக் காலம் இதுவோ?
4. நானும் அவனும் நாடகம் பார்த்தோம்.
5. இவர் இரவும் பகலும் உழைக்கிறார்.

---

# செய்யுட் பாடம்

## 1. வெற்றி வேற்கை.

### இவை அழகு தரும் என்பது

1. கல்விக்கு அழகு கசடு அற மொழிதல்.
2. செல்வர்க்கு அழகு செழுங்கிளை தாங்குதல்.
3. மந்திரிக்கு அழகு வரும் பொருள் உரைத்தல்.
4. உண்டிக்கு அழகு விருந்தோடு உண்டல்.

### பனைமரம் விளக்கும் நீதி

5. தேம்படு பனையின் திரள்பழத் தொரு விதை
வானுற வோங்கி வளம்பெற வளரினும்
ஒருவர்க்கு இருக்க நிழல் ஆகாதே.

### ஆலமரம் விளக்கும் நீதி

6. தெள்ளிய ஆலின் சிறு பழத் தொருவிதை
தெண்ணீர் கயத்துட் சிறுமீன் சினையினும்
நுண்ணிதே யாயினும் அண்ணல் யானை
அணி தேர் புரவி ஆட்பெரும் படையொடு
மன்னர்க் கிருக்க நிழலாகும்மே.

### இயற்கை மாறுது

7. அடினும் ஆவின்பால் தன் சுவை குன்றுது.
8. சுடினும் செம் பொன் தன் ஒளி கெடாது.
9. அரைக்கினும் சந்தனம் தன் மணம் அறுது.
10. புகைக்கினும் காரகில் பொல்லாங்கு கமழாது.
11. கலக்கினும் தண் கடல் சேறுகாதே.

## பொறுக்கும் பிழையும் பொறாப் பிழையும்

12. சிறியோர் செய்த சிறு பிழை யெல்லாம்
பெரியோர் ஆயின் பொறுப்பது கடனே.

13. சிறியோர் பெரும் பிழை செய்தனராயின்
பெரியோர் அப்பிழை பொறுத்தலும் அரிதே.

## நல்ல நட்பும் தீய நட்பும்

14. ஒருநாள் பழகினும் பெரியோர் கேண்மை
இருநிலம் பிளக்க வேர் வீழ்க் கும்மே.

15. நூறாண்டு பழகினும் மூர்க்கர் கேண்மை
நீர்க்குட் பாசி போல் வேர்க் கொள்ளாதே.

## கல்வியின் பெருமையும் கல்லாமையின் இழிவும்

16. கற்கை நன்றே கற்கை நன்றே
பிச்சை புகினும் கற்கை நன்றே.

17. கல்லா வொருவன் குல நலம் பேசுதல்
நெல்லினுட் பிறந்த பதராகும்மே.

18. எக்குடிப் பிறப்பினும் யாவரே யாயினும்
அக்குடியிற் கற்றோரை மேல் வருக என்பர்.

19. நாற்பாற் குலத்தின் மேற்பால் ஒருவன்
கற்றில னாயிற் கீழிருப்பவனே.

20. அறிவுடை யொருவனை அரசனும் விரும்பும்.

அதிவீரராம பாண்டியர்.

## அரும் பதவுரை

கசடு - குற்றம், கிளை - சுற்றத்தார், உண்டி - உணவு, கயம் - குளம், சினை - முட்டை, சுடு - காய்ச்ச, கேண்மை - நட்பு, பாசி - பாசம், பதர் - வீண்பொருள்.

# 2. மூதுரை

## உதவிக்கு உதவி

1. நன்றி ஒருவர்க்குச் செய்தக்கால் அந் நன்றி
என்று தருங்கொல் எனவேண்டா—நின்று
தளரா வளர் தெங்கு தாளுண்ட நீரைத்
தலையாலே தான் தருதலால்.

## நல்லார் இணக்கம்

2. நல்லாரைக் காண்பதுவும் நன்றே நலமிக்க
நல்லார் சொற்கேட்பதுவும் நன்றே—நல்லார்
குணங்கள் உரைப்பதுவும் நன்றே அவரோடு
இணங்கி யிருப்பதுவும் நன்று.

## தீயார் இணக்கம்

3. தீயாரைக் காண்பதுவும் தீதே திருவற்ற
தீயார் சொற் கேட்பதுவும் தீதே—தீயார்
குணங்கள் உரைப்பதுவும் தீதே அவரோடு
இணங்கி யிருப்பதுவும் தீது

## மன்னனும் புலவரும்

4. மன்னனும் மாசறக் கற்றோனும் சீர் தூக்கின்
மன்னனிற் கற்றோன் சிறப்புடையன் மன்னர்க்குத்
தன்தேச மல்லாற் சிறப்பில்லை கற்றோர்க்குச்
சென்றவிட மெல்லாம் சிறப்பு.

5. அட்டாலும் பால் சுவையிற் குன்ருதளவளாய்
நட்டாலும் நண்பல்லார் நண்பல்லர்
கெட்டாலும் மேன் மக்கள் மேன் மக்களே—சங்கு
சுட்டாலும் வெண்மை தரும்.

### கல்லாதவன் கற்ற கவி

6. கான மயிலாடக் கண்டிருந்த வான் கோழி
தானு மதுவாகப் பாவித்து—தானுந் தன்
பொல்லாச் சிறகை விரித்தாடி னல் போலுமே
கல்லா தான் கற்ற கவி. **(ஔவையார்)**

### அரும் பதவுரை

நன்றி - உதவி. தருங்கொல் - தருவார். தெங்கு - தென்னை மரம், தாள் - அடி, இணங்கி - சேர்ந்து, மாசு - குற்றம், கானம் - காடு.

## 3. கதைப் பாட்டு

### சிங்கமும் சுண்டெலியும்

1. தூங்கிய சிங்கத்தையே—ஒரு
சுண்டெலி கண்டதுவே
ஓங்கிய பாய்ச்சலினுல்—எலி
ஓடி விழுந்ததுவே.
2. சிங்கம் விழித்துக் கொண்டே—மிகச்
சீறிய கோபத்தினுல்
அங்கங் குலுங்கிடவே—இங்கும்
அங்கும் திரும்பியதே.

3. சுண்டெலி, என்ன செய்தாய் !—உன்னை
அடித்துக் கொன்றிடுவேன்
மண்டை கொழுத்ததுவோ ? என்மேல்
வந்து விளையாடுவாய் !

4. ஐயையோ என்ன செய்வேன் — நான்
அறியாப் பிள்ளை ஐயா
பையவே போய் விடுவேன்—என்னைப்
பார்த்தே இரங்குவீரே.

5. செத்துப் பிழைத்தாய் போடா—இனிச்
சேட்டைகள் செய்ய வந்தால்
குத்திக் கிழித்திடுவேன்—உன்
குலம் அழித்திடுவேன்.

6. சிங்கப் பெரியவரே—நான்
சிறிய சுண்டெலியே
இங்கு உயிர் கொடுத்தீர்—நானும்
ஏற்ற உதவி செய்வேன்.

7. சின்னப் பயலே நீயோ—இந்தச்
சிக்கத்துக்கும் உதவி
என மனத்துணிவோ—போ
என்முன் வாராதேடா.

8. சிங்கம் ஒரு பகலில்—வனம்
சென்று திரும்பியது
அங்கு வலை ஒன்றிலே—நன்றாய்
ஐயோ அகப்பட்டதே.

9. காடு நடுங்கிடவே — அது
கர்ச்சனை செய்ததுவே
ஓடும் விலங்கினங்கள் கேட்டு
உள்ளம் பதறிடவே.

10. சுண்டெலி வந்ததுவே—சிங்கம்
சோர்வது கண்டதுவே
துண்டு பல படவே—வலையைச்
சுற்றிக் கடித்ததுவே.

11. வலை யறுந்தவே—சிங்கம்
வழியைக் கண்டதுவே
தலை நிமிர்ந்ததுவே—உதவித்
தன்மை யறிந்ததுவே.

12. சிறிய சுண்டெலியால் பெருஞ்
சிங்கம் நலம் பெறலாம்
சிறிய தென்று சோறும் உயிர்
செய்யும் உதவி கண்டோம்.

# 4. புதுமைப் பாட்டு

1. மண்ணில் எடுத்த தோர் எண்ணெயை விட்டு நாம்
வண்டியை ஓட்டுகின்றோம்
விண்ணில் விமானம் பறக்க மண்ணெண்ணெயை
மேலும் விடுவதுண்டே.

2. மண்வரும் எண்ணெய் அழுக்கினைப் போக்கியே
வாயுவும் சேர்த்து விட்டு
விண்வரும் மின்போல் விளக்கங்கள் ஏற்றுவோம்
வீடு விளங்கிடவே.

3. ஆற்றுத் தண்ணீரின் விசையினை யேற்றி
அழகிய காந்தத்திலே
ஏற்ற செம்புச் சுருள் சுற்றவே விட்டு நாம்
எத்தனை வேலை செய்வோம்.

4. ஊர் விளக் கேற்றுவோம் பாடும் படங்களை
உள்ளே யிருந்து காண்போம்
பேர் பலவாகப் பிரிந்த தொழில்களில்
பின்னும் உதவ வைப்போம்.

5. உகத்தில் எங்கேயோ உள்ளவர் பேச்சினை
உள்ளபடி கேட்கவே
நிலவுற்ற வித்தையை எப்படிப் போற்றுவோம்
நெஞ்சம் மருள்வதுண்டே.

6. யாவும் படைத்த கடவுள் செயலினால்
யாம் பல வேலை செய்வோம்
தேவன் ஒருவனைச் சிந்தையில் வைத்தின்றும்
செய்வோம் புதுமைகளே.

## அரும்பதவுரை

மண்ணெண்ணெய் - பெற்ரோல்எண்ணெய்.
விண் - ஆகாயம்

# 5. நாட்டுப் பாட்டு

1. நன்மையே சிறந்த நாடு ஞானமே பிறந்த நாடு
வன்மையே விளங்கு நாடு மன நலம் தெளிந்த நாடு
இன்மையே யறியா நாடு ஈகையே குறையா நாடு
பன்மையே படைத்த நாடு பாரத நாடே யன்றோ.

2. உண்மையே தெளிந்த நாடு உறுதியே பிறந்த நாடு
பெண்மையே சிறந்த நாடு பேடியர் பிறவா நாடு
வண்மையே மலிந்த நாடு வாழ்வெலாம் விளங்குநாடு
பண்மலி யிசை சேர் நாடு பாரத நாடே யன்றோ.

3. நாடகம் பிறந்த நாடு நறுமணம் சிறந்த நாடு
ஏடகம் கலைசேர் நாடு எழிலெலாம் பொலிந்த நாடு
மாடகம் பயின்ற நாடு வளை குழல் ஒலித்த நாடு
பாடகம் பொலிந்த நாடு பாரத நாடே யன்றோ.

4. வெள்ளமே பெருகு நாடு விரிகடல் உடுக்கு நாடு
கள்ளமே யறியா நாடு கருத்திலே சிறக்கு நாடு
வள்ளலர் பிறந்த நாடு வரலியே மிகுந்த நாடு
பள்ளமே வயல் சேர் நாடு பாரத நாடே யன்றோ

5. கல்வியே சிறந்த நாடு கலைகளே சிறந்த நாடு
செல்வமே சிறந்த நாடு தேட்டமும் சிறந்த நாடு
ஒவ்வதே துணிந்த நாடு உலகெலாம் புகழும் நாடு
பல்வகை நலஞ்சேர் நாடு பாரத நாடே யன்றோ.

## அரும்பதவுரை

இன்மை வறுமை, ஈகை-கொடை, வண்மை-கொடை, பேடி-கோழை, பண் இசை, மாடகம்-இசை பாடும் யாழ், வளை-சங்கு, பாடகம்-காலில் அணியும் நகை.

# செந்தமிழ் வாசகம்

## ஐந்தாம் புத்தகம்

திருத்திய பதிப்பு

ஆசிரியர்

**வி. தி. ஸ்ரீநிவாசன்**

முன்னாள் தமிழ்ப் பேராசிரியர்,

இராசா கல்லூரி, புதுக்கோட்டை.

பதிப்பாளர்

**ஸ்ரீநிவாஸ் அண்டு கோ,**

புதுக்கோட்டை

 1951 [விலை 9 அணா.

# முன்னுரை

'செந்தமிழ் வாசகம்' என்னும் இப் புத்தக வரிசை அரசியலார் வெளியிட்டுள்ள பாடத் திட்டத்தை யொட்டி எழுதப் பட்டிருக்கிறது.

மாணவர்கள் வாழ்க்கையில் கண்டு பழகிய பொருள்கள் பற்றிய பாடங்களும் உற்சாகமும் நீதியும் புகட்டக் கூடிய கதைகளும் இப் புத்தக வரிசையில் எழுதப் பட்டுள்ளன. பாடங்கள் அனைத்தும் படிப் படியாக அறியக் கூடிய முறையில் அமைக்கப் பட்டிருக்கின்றன. பாடங்களை யொட்டி கேள்விகள் பயிற்சிகள் முதலியன இடம் பெற்றிருப்பது, மாணவர் அறிவுத் திறமையை வளர்க்கச் சாதனமாகும். அவசியமான இடங்களில் இலக்கணப் பயிற்சிக்கும் சுலபமான முறையில் இடமளித்திருப்பது, மாணவர்கள் தமிழ் மொழியைப் பிழை நீக்கிக் கற்றுக் கொள்ள பயன்படும்.

ஆதலால் இப் புத்தக வரிசை மாணவருக்கு மொழி அறிவை நல்ல முறையில் அளிக்கும் என்று நம்புகிறேன்.

ஆசிரியர்

# பதிப்பாளர் குறிப்பு

'சென்னைச் செய்தி' பதிப்புக்களில் வெளி வந்துள்ள படங்களில் சிலவற்றை இப் புத்தகத்தில் உபயோகித்துக் கொள்ள அனுமதி கொடுத்த 'சென்னைச் செய்தி' வெளியிடும் அதிகாரிகளுக்கு எங்கள் நன்றி உரியதாகும்.

பதிப்பாளர்.

# பொருளடக்கம்

# செந்தமிழ் வாசகம்

## 1. நம் தாய் நாடு

| | | |
|---|---|---|
| பாரத நாடு | அரசியல் | பாகிஸ்தான் |
| குமரி முனை | புண்ணியம் | அரசாங்கம் |
| யாத்திரை | கடலாட | சுரங்கம் |
| தொழிற்சாலை | நீர்வீழ்ச்சி | மின்சாரம் |
| பேரரசு | ஆதிக்கம் | அடிப்படை |

நம் தாய் நாட்டின் பெயர் பாரத நாடு ஆகும். உலகம் நமது நாட்டை இந்தியா என்ற பெயரால் நெடுங் காலமாக அறியும். இந்த இரு பெயர்களும் நமது அரசியல் சட்டத்தில் நாட்டின் பெயர்களாக இருப்பதைக் காணலாம். நமது தேசிய கவி சுப்பிரமணிய பாரதியாரும் "பாரத தேசம் என்று பெயர் சொல்லுவார்; மிடிப் பயம் கொல்லுவார்; துயர்ப் பகை வெல்லுவார்," என்று பாடி இருக்கிறார்.

இமய மலை நம் நாட்டின் வடக்கு எல்லையாக உள்ளது. குமரி முனை தெற்கு எல்லையாக இருக்கிறது. அம் முனைக்குப் பக்கத்தில் மூன்று கடல்கள் கலக்கின்றன. நம் நாட்டின் கிழக்கிலும் மேற்கிலும் கடல்கள் அமைந்து உள்ளன.

வட நாட்டிலே கங்கை, யமுனை, பிரம புத்திரா முதலிய புண்ணிய நதிகள் ஓடுகின்றன.

தென்னாட்டிலே கோதாவரி, காவேரி, தாமிர வருணி முதலிய நதிகள் பாய்கின்றன. வடக்கே காசி, பிரயாகை, அயோத்தி முதலிய புண்ணிய நகரங்களும் தெற்கே காஞ்சிபுரம், ஸ்ரீரங்கம், இராமேசுவரம் முதலிய புண்ணிய நகரங்களும் உண்டு.



இமய மலை

வடக்கே இந்தி, குஜராத்தி, வங்காளி, மராத்தி முதலிய மொழிகளைப் பேசுகிறார்கள். தெற்கே தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம் முதலிய மொழிகள் வழங்குகின்றன. அயல் நாட்டார் நம்மை அரசாண்டபோது ஆங்கில மொழி இந்தியா முழுமைக்கும் அரசாங்க மொழியாக உதவியது. இனி நம் நாட்டு மொழிகளில் பெரும்பாலோர் பேசும் மொழி ஒன்றே பொது மொழியாக இடம் பெறும்.

நாட்டின் வட கோடியில் உள்ள கேதாரம், பதரி, கைலாசம் முதலிய இமயமலை முடிகளுக்கு தென்னாட்டு மக்கள் யாத்திரை போகும் வழக்கம் உண்டு. அது போலவே தென் கோடியில் உள்ள தனுஷ்கோடி, இராமேசுவரம், கன்னியா குமரி முதலிய இடங்களுக்கு வட நாட்டார்



குமரி முனை

கடலாட யாத்திரை வரும் வழக்கம் உண்டு. வடநாடு, தென்னாடு என்று வெளிப்படையாக பிரிவு இருந்தாலும் உண்மையில் நம் மனம் ஒன்று பட்டிருக்கிறது என்பதை இந்த யாத்திரை களால் அறியலாம்.

நம் நாட்டில் மலை வளம், கடல் வளம், ஆற்று வளம், நாட்டு வளம் என்ற நால்வகை வளங்களும் உண்டு. உலக மக்கள் கூட்டத்தில் ஐந்தில் ஒரு பங்கு நம் நாட்டில் வாழ்கிறார்கள். இந்தியா,

பாகிஸ்தான் என்று இரண்டாகப் பிரிந்த நிலையிலும் நம் சுதந்திர நாட்டில் முப்பத்தைந்து கோடி மக்கள் வாழ்கிறார்கள்.

நம் நாட்டில் தங்கமும் இரும்பும் நிலக்கரியும் கிடைக்கின்றன. சுரங்கங்களிலிருந்து இரும்பும் நிலக்கரியும் கொண்டு பெரிய தொழிற் சாலைகள் நடத்தி, நாட்டின் செல்வத்தை வளர்க்க முயலுகிறோம். ஆற்று வெள்ளத்தை அணைகளால் தடுத்து நிறுத்தி, அதிலிருந்து பல இடங்களுக்கும் நீர்ப் பாசன வசதி அளிக்கிறோம். நீர் வீழ்ச்சிகளின் உதவி கொண்டு மின்சார சக்தியை வளர்த்து நாட்டுத் தொழில்களைப் பெருக்குகிறோம். கலை, கல்வி, செல்வம், கைத்தொழில்கள் இவற்றின் பெருக்கமே நம் நாட்டிற்குப் பெருமை அளிக்கும்.

மகாத்மா காந்தியடிகள் நாடு சுதந்திரம் பெறப் பாடுபட்டார். அவர் எவ்வகையான படைகளையும் உதவி கொள்ளாமலே எல்லாப் படைகளையும் உள்ள ஆங்கிலப் பேரரசை எதிர்த்து அமைதியாகவே போராடினார். நாட்டு மக்கள் அவர் காட்டிய வழியே நின்றதால் ஒரு துளி இரத்தமும் சிந்தாது வெற்றி பெற்றிருக்கிறோம். நாம் பெற்ற சுதந்திரத்தைக் காப்பாற்றிக் கொள்ள நமக்கு என்ன வேண்டும்? அன்னிய நாட்டினர் திரும்பவும் ஆதிக்கம் கொள்ளாமல் இருக்க நாட்டைக் காக்கப் பெரும் படை வேண்டும்.

நம் நாட்டுத் தொழில்கள் வளர்ந்து செல்வம் பெருக வேண்டும். செல்வம் மிகுந்தால் மக்களின் வாழ்வு நிலை உயரும். உணவு, உடை, வசிக்க இடம் இவை நம் நாட்டு மக்களுக்குக் குறைவு இல்லாமல் இருக்கவேண்டும். நம் தாய் நாடு நல்ல நிலைமையில் இருக்கச் செய்வதே நமது கடமை ஆகும்.

## கேள்விகள்

1. நம் நாட்டின் நான்கு எல்லைகளையும் கூறுக.
2. வடக்கே உள்ள புண்ணிய நகரங்கள் எவை?
3. தெற்கே உள்ள புண்ணிய நதிகள் எவை?
4. நம் நாட்டில் வழங்கும் மொழிகள் எவை?
5. நம் நாடு நல்ல நிலைமையில் இருக்கச் செய்வது எவ்விதம்?

## பயிற்சி

I. வடக்கு + மலை = வடமலை என்று சேரும்.
தெற்கு + நாடு = தென்னாடு என்று சேரும்.
பின்வரும் சொற்கள் எப்படிச் சேரும்?

| | |
|---|---|
| வடக்கு + நாடு | தெற்கு + மலை |
| மேற்கு + நாடு | கிழக்கு + மலை |

II. சுதந்திரம், புண்ணியம், படை என்ற சொற்களை தனித்தனியே வைத்து வாக்கியங்கள் எழுதுக.

III. கிளி + அழகு = கிளியழகு என்று சேரும்.
பின் வரும் சொற்களைச் சேர்த்து எழுதுக.

| | |
|---|---|
| வெளி + உலகம் | காளி + அம்மை |
| அணி + அமைப்பு | சாலை + ஓரம் |

# 2. உழவுத் தொழில்

| | | |
|---|---|---|
| நெடுங்காலம் | பழமையான | புலமை |
| வந்தனை | வேளாண்மை | முயற்சி |
| உரம் | இயந்திரம் | நாற்று |
| வேளாளர் | களை | சாகுபடி |
| கொழு | வலிய | துள்ளூசி |

உழவுத் தொழில் நம் உணவுப் பொருள்களை நிலத்தில் வளர்க்க உதவும் உயர்ந்த தொழிலாகும். உலகத்தில் உழவுத் தொழில் நெடுங் காலமாகத் தோன்றியுள்ளது. நமது நாட்டில் உள்ள பழமையான நூல்கள் எல்லாம் உழவின் பெருமையைப் பற்றி உரைக்கின்றன. புலமையில் சிறந்தவரான கம்பரும் உழவைப் புகழ்ந்து, 'ஏரெழுபது' பாடியிருக்கிறார். பாரதியாரும் "உழவுக்கும் தொழிலுக்கும் வந்தனை செய்வோம்," என்று பாடி, உழவுத் தொழிலின் மேன்மையை நமக்குக் காட்டுகிறார்.

நம் நாட்டு மக்கள் கைத்தொழில் வகைகளில் உழவு ஒன்றையே முன்னாளில் நன்றாக அறிந்திருந்தார்கள். இத்தொழில் வேளாண்மை என்ற பெயரும் பெறும். வேளாண்மை செய்யும் மக்கள் வேளாளர் என்ற பெயர் பெற்றார்கள். உழுது உண்டு வாழ்பவரே உண்மையான வாழ்வு நடத்துகிறார். மற்றவர் எல்லோரும் கை கட்டியோ, தலை வணங்கியோ, மெய் வருத்தியோ பிறர் கை பார்த்துப் பிழைப்பவரே ஆவர்.

உழவர் நிலத்தின் தன்மையை நன்றாக அறிய வேண்டும். இந்த நிலத்தில் இன்ன பயிர் வளரும் என்ற உண்மையை பண்ணேடு பல காலம் பழகியே அறிய வேண்டும். ஏட்டுப் படிப்பினால் மட்டும் மண்ணின் தன்மையைத் தெரிந்து கொள்ள முடியாது. நீர் வளம் நிறைந்துள்ள நிலத்தில் நன்செய்ப் பயிர் வளர்க்கலாம். தண்ணீர் குறைவாகவே கிடைத்தால் தோட்டப் பயிர் சாகுபடி செய்யலாம். அவ்வப்பொழுது பெய்யும் மழையால் வளர வேண்டும் என்றால் புன்செய்ப் பயிர் வளர்க்கலாம். புன்செய் தோட்டமாவதும் தோட்டம் நன்செய் ஆவதும் மனிதன் முயற்சியால் ஆகலாம்.

நிலத்தை உழும்போது அடி மண் மேல் மண் ஆகும்படி நன்றாகப் புரட்டி உழ வேண்டும். முன்னாளில் நம் நாட்டில் தோன்றிய கலப்பை மரத்தால் இயன்றது. நிலத்தில் பாயும் மரப் பகுதி சிறிது கூர்மையாக ஊசிபோல் இருப்பதால் அதற்குத் துள்ளூசி என்ற பெயர் உண்டு. அத் துள்ளூசி தானே மண்ணைப் பிளந்து உழ இயலாது. ஆகையால் அதற்கு உதவியாக இரும்புக் கருவி ஒன்று இணைக்கப் பட்டிருக்கும். அக் கருவியைக் கொழு என்று சொல்லுகிறோம். "கொழு நடந்த வழியிலே துள்ளூசி நடக்கும்," என்பது ஒரு பழமொழியாகும்.

சிறிய துண்டான கொழுவின் உதவியால் மரக் கலப்பை எளிதாய் உள்ள மண்ணைப் புரட்டி

உழுது விடலாம். வலிய தரையாக இருந்தால் இக் கலப்பை உழாமலே அதன் மேல் ஓடுவதைப் பார்க்கிறோம். இக் குறையைப் போக்கவே இக் காலத்தில் இரும்பினால் இயன்ற கலப்பைகள் வந்துள்ளன. இரும்புக் கலப்பைகளை நம் நாட்டு மாடுகள் இழுக்க முடியும். கலப்பை



இயந்திரக் கலப்பை

வண்டிகளும் கலப்பை இயந்திரங்களும் இக் காலத்தில் வந்திருக்கின்றன. இவைகள் நீண்ட நிலப் பரப்பை விரைவில் உழுவதற்கு உதவும்.

காலம் அறிந்து உழவேண்டும்; காலம் அறிந்து விதைக்க வேண்டும். வயல்களில் நெல் நாற்றுக்களை வளர்த்து அவைகளை உரிய காலத்தில் எடுத்து ஒன்று அல்லது இரண்டு சேர்த்து வரிசையாக நட வேண்டும். நட்ட சில நாட்களில் பயிர் வளர இடையூறாக முளைக்கும்

களைகளைக் களைய வேண்டும். பயிர் வளர தட்டு இல்லாமல் தண்ணீர் பாய்ச்சி வர வேண்டும். கதிர் முற்றிச் சாயும் போது அறுத்து அடித்து எடுத்து வர வேண்டும். நன்செய் நிலத்தில் உழைப்பு அதிகம் உண்டு. அதற்குத் தக்க பலனும் உண்டு.

நிலத்தில் நல்ல விளைவு வர வேண்டும் என்றால் பசுந்தாள், எருக் குப்பை, பிண்ணாக்கு முதலிய உரங்களைப் போடவேண்டும். நன்செய் நிலத்தில் வாழை, கரும்பு, வெற்றிலை முதலியவை களையும் பயிரிடலாம்.

தோட்டங்களில் காய்கறி வகைகளும் கீரை வகைகளும் பயிர் செய்யலாம். புன்செய் நிலங் களில் கடலை, எள்ளு, துவரை, பருத்தி முதலிய பயிர்களை வளர்க்கலாம். நிலத்தில் நாம் பாடுபடும் அளவிற்கு ஏற்ற பலன் வரும். மழை பெய்யாத குறையால் நம் முயற்சி வீணாவதும் உண்டு. கிணறு வெட்டியும் வாய்க்கால் அமைத்தும் தண்ணீர் பாய்ச்சி மழையில்லாக் குறையையும் போக்கலாம். நாம் உழவுத் தொழிலை நன்றாகச் செய்தால் நம் நாட்டில் உணவுக் குறை இருக்க இடமில்லை,

## கேள்விகள்

1. உழவுத் தொழிலுக்கு உள்ள பெருமை என்ன?
2. துள்ளூசி என்பது எது ?
3. கொழு எதற்காக இருக்கிறது ?

### பயிற்சி

I. துள்ளுசி, கலப்பை, கொழு என்ற சொற்களை வைத்து தனித்தனியே வாக்கியங்கள் எழுதுக.

II. மெய்யெழுத்தால் முடிந்த நான்கு சொற்கள் எழுதுக. (உ-ம்).கதிர்.

III. உயிரெழுத்தால் தொடங்கும் நான்கு சொற்கள் எழுதுக. (உ-ம்). உண்மை.

## 3. தமிழ் நாட்டு முப் பெரியார்

| | | |
|---|---|---|
| சிற்றரசர் | நாடகமேடை | கிளர்ச்சி |
| பாளையப்பட்டு | வசனம் | பத்திராசிரியர் |
| கர்நாடகம் | நியாயவாதி | உணர்ச்சி |
| தரைமட்டம் | வழக்கறிஞர் | தமிழ்ப்பணி |
| நயவஞ்சகம் | இயக்கம் | விமரிசை |

தமிழ் நாட்டின் தென் பகுதியில் நம் நாட்டின் சுதந்திரத்திற்கு உழைத்த மூன்று பெரியார் உண்டு. சுதந்திரம் பெற்றிருக்கும் நாம், இன்று அம் மூவரையும் நினைத்துப் போற்ற வேண்டும். மூவரும் திருநெல்வேலி ஜில்லாவில் ஒன்றை யொன்று அடுத்துள்ள ஊர்களிலே பிறந்தவர் ஆவார்.

ஒருவர் பாஞ்சாலங் குறிச்சியிலே சுதந்திரப் போர் நடத்திய வீர பாண்டியர். மற்றொருவர்

ஓட்டப் பிடாரம் என்ற சிறு கிராமத்திலே பிறந்த வ. உ. சிதம்பரம் பிள்ளை என்பவர். இன்னொருவர் அடுத்த ஊரான எட்டைய புரத்தில் வாழ்ந்த தேசிய கவி சுப்பிரமணிய பாரதியார்.

பாஞ்சாலங் குறிச்சியில் சிற்றரசராய் ஆண்ட வீர பாண்டியர் என்பவர் கட்டப் பொம்மன் என்ற பெயரால் நாடு அறிந்த பெருமை உள்ளவர். வெள்ளைக்கார வியாபாரக் கூட்டத்தார் நம் நாட்டில் சிறிது சிறிதாக இடம் பெற்ற போது அவர்களைப் போரில் எதிர்த்த பெருமை கட்டப் பொம்மனுக்கு உண்டு.

பாண்டிய நாட்டிலே அக்காலத்தில் எழுபத் திரண்டு பாளையப் பட்டுக்கள் இருந்தன. பாளையப் பட்டுத் தலைவர்கள் நம் நாட்டிலே சிற்றரசர் போல் வாழ்ந்தவர்கள். பாண்டிய மன்னர் அழைக்கும் போது படையோடு வருவார்கள். பாண்டிய குலம் மறைந்த பிறகும் பாளையப் பட்டுக்கள் சுதந்திரம் குறையாது இருந்தன. வெள்ளைக்கார வியாபாரிகள் கர்நாடக நவாபிற்குச் சிறு உதவிகள் செய்து அவற்றிற்குப் பதிலாக இப் பாளையப் பட்டுக்களில் வரி வாங்கும் உரிமையைப் பெற்றார்கள். கர்நாடக நவாபே இப் பாளையப் பட்டுகளில் ஒழுங்காக வரி வாங்கியது கிடையாது.

தாய் நாட்டில் நுழைந்த அன்னிய நாட்டு வியாபாரக் கூட்டத்தார் வரி கேட்க வந்த போது

தம் கட்டப் பொம்மதுரை சீறி எழுந்தார். 'வரி கொடுக்க மாட்டேன்,' என்று எதிர்த்துப் போராடினர். வெள்ளைக்காரர் பெரும் படையோடு திரண்டு வந்து பாஞ்சாலங் குறிச்சியை தரை மட்டம் ஆக்கினர். அப்பொழுதும் அவர் பின் வாங்க வில்லை. ஆனல் சில நய வஞ்சகர்கள் அவரைக் காட்டிக் கொடுத்தனர். அதனல் அவர் சிறைப் பட்டார். வெள்ளைக்கார அதிகாரிகள் வீர பாண்டியனைத் தூக்கிலிட்டுக் கொன்றார்கள். அவர் இறந்த பிறகும் அவர் தம்பி சில காலம் எதிர்த்து நின்றார். அதுவும் வீணாயிற்று. வெள்ளைக்காரர் அரசு பிறகு பலம் பெற்றதால் எவரும் அவர்களை எதிர்க்கத் துணியவில்லை.

அன்று தன் நாட்டிற்காகத் வீரத்துடன் அன்னியரோடு போராடி உயிரிழந்த தென்னாட்டு சிங்கத்தை நாம் என்றும் மறக்கலாகாது. 'கட்டப் பொம்மன் நாடகம்' இன்று நாடக மேடைகளில் நடிக்கப் படுவதை நாம் பார்க்கலாம்.

சிதம்பரம் பிள்ளை இளமையிலே தம் கிராமத்திலேயே தமிழ்க் கல்வி கற்றார். பிறகு தூத்துக்குடி சென்று ஆங்கிலம் கற்றுக் கொண்டார். திருச்சிராப்பள்ளியில் ஒரு சிறந்த நியாய வாதியிடம் வழக்கறிஞர் தொழில் பழகிக் கொண்டார். பிறகு தன் ஜில்லாவிலேயே சில நாட்கள் வழக்கறிஞராக இருந்தார். அவர் என்றும் பொய் வழக்கு வாங்கிப் பேசியதில்லை. ஏழை மக்கள் வழக்கைப் பணம் பெருமலே பேசுவார்.

பெரும் பணம் தேட வேண்டும் என்ற எண்ணம் இல்லாமலே தேசீய இயக்கத்தில் இறங்கினர்.

சிதம்பரம் பிள்ளை நம் நாட்டுத் தொழில் வளர்ச்சி பெற வேண்டும் என்று முடிவு செய்து கப்பல் தொழில் நடத்த ஆரம்பித்தார். பெரும் முயற்சியோடு பணம் திரட்டி இரண்டு மூன்று



வ. உ. சிதம்பரம் பிள்ளை

கப்பல்கள் வாங்கி வெள்ளைக்காரருக்குப் போட்டியாகக் கப்பல் வியாபாரம் நடத்தினர். இவ்விதம் அந்நாளில் சுதேசிக் கப்பல் தொழில் ஏற்படுத்திய பெருமை சிதம்பரனுடைச் சேர்ந்தது.

தன்னலமுள்ள ஆங்கிலேய அரசாங்கம் சிதம்பரம் பிள்ளையை நசுக்கச் சமயம் பார்த்தது.

அரசியல் கிளர்ச்சிகளில் கலந்து ஊக்கத்தோடு பேசியதாக சிதம்பரனார் கைதி செய்யப்பட்டு இருபது ஆண்டுகள் சிறையில் இருக்கத் தீர்ப்புப் பெற்றார். சிறைச் சாலையிலே இப் பெரியார் மிகவும் துன்பமடைந்தார். ஆனால் சில ஆண்டுகளில் விடுதலை கிடைத்தது. அவர் வெளிவந்த பிறகு இளமையில் படித்த தமிழ்க் கல்வியிலேயே ஊக்கம் கொண்டு அழகிய பாட்டுக்களும் வசனங்களும் எழுதினார். செல்வம் இழந்து ஏழையாக வாழ்ந்த நிலையில் அன்று உலகம் அவரை மதியாது இருந்தது. அவர் நாட்டிற்காக உழைத்தே இறந்தார்.

'கப்பலோட்டிய தமிழன்' என்று சிதம்பரம் பிள்ளையின் நினைவு நமக்கு ஏற்படும்படி இன்று பல அன்பர்கள் தூத்துக்குடியில் வ.உ.சி. பெயர் கொண்ட கப்பல்களை கடலில் செலுத்தி வருகிறார்கள்.

கடையம் என்ற சிறிய ஊரிலே சின்னசாமி ஐயருக்குப் புதல்வராகப் பிறந்த சுப்பிரமணிய பாரதியார் இளம் பருவத்தில் தாயை இழந்து அத்தையின் ஆதரவில் வளர்ந்தார். தந்தையார் வியாபார வழிகளில் செல்வத்தை இழந்ததால் ஏழையாக வாழ்ந்தார். வயது வந்த பாரதியார் பிறகு காசிக்குச் சென்று ஆங்கிலம் படித்தார். ஆனால் இளமையில் மனத்தில் ஆழ்ந்து இடம் பெற்ற தமிழ் அன்பு வடநாட்டிற்குப் போயும் மாறவில்லை.

ஆகவே தென்னாடு திரும்பி வந்து பத்திராசிரியாய் இருந்தார். எட்டைய புரத்திலும் சில நாட்கள் இருந்தார். அவர் நாட்டுப் பாட்டுக்களைப் பாடி மக்கள் உள்ளத்தை உணர்ச்சி பெறச் செய்தார்.

தூத்துக்குடியில் சிதம்பரம் பிள்ளை கப்பல் ஓட்டச் செய்த அக்காலத்தில் நடந்த ஒரு அரசாங்க வழக்கில் அரசாங்கத்தார் பாரதியாரையும் பிடித்துச்



சுப்பிரமணிய பாரதியார்

சிறை செய்ய நினைத்தார்கள். சிறையில் அடங்கினால் தமிழ்ப்பணி குறையுமோ என்று எண்ணி நம் பாரதியார் புதுச்சேரிக்குச் சென்றார். அங்கு பல ஆண்டுகள் தங்கியிருந்தார். அங்கே அவரை வறுமைப் பிணி வாட்டியது. பிறகு உண்மையில் அவர் மேல் குற்றம் ஒன்றும் இல்லாததால்

அவராகவே சென்னைக்கு வந்தார். அப்பொழுதும் அரசாங்கம் அவரை அடக்க நினைத்தது. ஆனால் அது பயன் படவில்லை. சில காலம் சென்னையிலே பத்திராசிரியர் கூட்டத்தில் சேர்ந்து பணி ஆற்றினார். வறுமையால் வாடிய உடம்பிலே நோய்களும் இடம் பெற்றிருந்தன. பாரதியாரை கோயில் யானை ஒரு நாள் தாக்கியது. அதுவே காரணமாக நம் புலவர் இறந்தார்.

பாரதியார் பாடல்கள் உணர்ச்சி மிகுந்தவை. இன்று அவற்றைப் பொதுச் சொத்தாக அரசாங்கத்தார் செய்திருக்கிறார்கள். பாரதியார் விழா எட்டையபுரத்தில் ஆண்டுதோறும் கொண்டாடப்படுகிறது.

இம் முப் பெரியாரும் வெவ்வேறு வழியாய் நம் தாய் நாட்டிற்கு உழைத்தார்கள். ஆயினும் மூவரும் நம் தாய் நாட்டின் சுதந்திரத்திற்காகவே பாடுபட்டனர் என்பதை நாம் அறிய வேண்டும். அவர்களுடைய சரித்திர வரலாறு நமக்கு வீர உணர்ச்சியை ஊட்டும்; தன் நலமற்ற சேவையை வளர்க்கும்.

## கேள்விகள்

1. முப் பெரியார் என்று தமிழ் நாட்டில் நினைக்கத் தக்கவர் யார்?
2. வீர பாண்டியர் என்ன பணி புரிந்தார்?
3. வ. உ. சிதம்பரம்பிள்ளை என்ன பணி புரிந்தார்?
4. பாரதியார் செய்த பணி என்ன?

**பயிற்சி**

I. ஊர், இடம் இவற்றின் பெயர் இடப் பெயர் ஆகும்.

இடப் பெயர்—வீடு, தோட்டம், மதுரை.
பொருளின் பெயர் பொருட் பெயர் ஆகும்.
பொருட் பெயர்.—ஏடு, ஆணி, ஓலை.

இப் பாடத்திலிருந்து இடப் பெயர் இரண்டு எழுதுக. பொருட் பெயர் இரண்டு எழுதுக.

II. ஒரு சொல் சேர்த்து வாக்கியத்தை முடிக்க

1. பாரதியார்———பாடினார்.
2. சிதம்பரம் பிள்ளை———ஓட்டினார்.
3. வீர பாண்டியர்———செய்தார்.

# 4. வானக் காட்சி

| | | |
|---|---|---|
| **இயற்கை** | **கவரும்** | **திகழும்** |
| **ஒளிமயம்** | **தோற்றம்** | **வெப்பம்** |
| **வானவீதி** | **ஊடுருவி** | **வானவில்** |
| **சிதறுண்ட** | **திரளும்** | **எண்ணற்ற** |
| **கிரணம்** | **தூமகேது** | **பிசிர்** |

நில உலகத்திலே காணும் இயற்கைக் காட்சிகளைப் போலவே வானத்திலும் நம் மனத்தைக் கவரும் அழகிய காட்சிகள் பல உண்டு. வானக் காட்சி காலையில் ஒரு வகை தோற்றம் அளிக்கும். நண் பகலில் வேறு வகையாக இருப் பதைக் காணலாம். மாலையில் வேறொரு வகையாகத்

தோன்றுவதும் உண்டு. இரவில் இன்னொரு வகையாகத் திகழும். ஒவ்வொரு வேளையிலும் நாம் அக் காட்சிகளைக் கண்டு மனம் மகிழ்கின்றோம்.

காலை வேளையில் முதலிலே கிழக்கு திசை வெளுக்கிறது. பிறகு சிவப்பு, நீலம் முதலிய நிறங்கள் வானத்திலே பரவுகின்றன. சூரியன் உலகத்தையே ஒளி மயமாக்க வருகிறது. பிறகு வானமும் நீலம் மாறி சற்று வெண்மையாகிறது. நடுப்பகற் பொழுதில் ஒரே வெளிச்சமாகவும் வெப்பமாகவும் தோன்றுகிறது. சூரியனையும் நாம் நேரே பார்க்க முடிவதில்லை. அது காலையில் தோன்றியதை விடச் சிறியதாகக் காணப்படுகிறது. ஆனால் உண்மையில் அதன் உருவம் மாறவில்லை. மாலை வேளையில் சூரியன் மேற்கே சாய்கிறது. சிவந்த பழம் போல வானத்திலே சூரியன் இறங்கி வருகிறது. அதன் ஒளி பொன்னிறம் கொள்ளுகிறது. அந்தி நேரத்தில் வானம் உருக்கி வார்த்த தங்கம் போல பளபளப்பாய் இருக்கிறது. வானத்தில் அங்கே தோன்றும் மேகங்களின் அழகைப் பல நிறங்களில் காணலாம். சூரியன் நிற்கும் இடத்திலிருந்து கரு நீல வீதிகள் வானத்தே ஊடுருவிப் பாய்வது போல தோன்றும். பிறகு இருள் மெல்ல மெல்ல உலகத்தை விழுங்க வருகிறது.

இரவில் வான வீதியிலே பல காட்சிகள் தோன்றும். எண்ணற்ற ஒளி உருவங்கள் இருண்ட

வானத்திலே மின்மினிப் பூச்சிகளைப் போல மின்னுவதைக் காண்போம். அவற்றுள் சில விண்மீன்கள் ஒரே தன்மையாக ஒளி தரும். சில விட்டு விட்டு ஒளி வீசும். சில சிவப்பாகவும் சில நீலமாகவும் தெரியும். சில மதிப்பற்ற வயிரக் கற்கள் போல இருக்கும். இக் காட்சிகளைக் கண்டு இளங் குழந்தைகளும் மனம் மகிழும்.




இராக் காலத்தில் வான வீதிக்கு அரசன் தானே என்று கூறுவது போல சந்திரனும் வரும். சந்திரன் ஒரு பட்சம் வளர்வதும் மறு பட்சம் தேய்வதும் இயற்கையாக நடைபெறு கிறது. அது வளர்ந்து வரும் காலத்தில் விண் மீன்கள் சில மறைவதும், அது தேய்ந்து வரும் போது அந்த மீன்கள் மீண்டும் தோன்றுவதும் வானத்தில் நிகழும் இயற்கை விளையாட்டுப்

போலவே காணப்படும். மேகங்கள் இடையிடையே வந்து சந்திரனை மறைப்பதும் சந்திரன் அவைகளோடு போராடியே வெளி வருவது போல் தோன்றும் அழகும் இயற்கையான காட்சியாகும்.

மழை மேகங்கள் கூடி வானத்தில் ஒளி செய்யும் சூரியனை மறைப்பதும் உண்டு. சூரியன் அவைகளை எதிர்த்து வெல்ல முடியாது தோற்றுப் போய் சற்று மறைந்து, பகல் வேளையிலேயே வெளிச்சம் குறைய இடமாவதும் உண்டு. சூரியன் கிழக்கே நிற்க மேகங்கள் மேற்கே திரளுமானால் சூரிய கிரணங்கள் மேகத்தின் சிதறுண்ட சிறு நீர்த் துளிகளின் மேல் விழலாம். அப்பொழுது ஓரொரு சமயம் மேற்கே வான வில் தோன்றுவது உண்டு. வான வில்லில் ஏழு நிறங்கள் இருப்பதைப் பார்த்து மனம் மகிழாத குழந்தைகள் உலகத்தில் இல்லை. மேற்கே சூரியன் இருக்கும் போது கிழக்கே நீர் மேகம் கூடினால் கிழக்கேயும் ஓரொரு சமயம் வான வில் தோன்றலாம்.

வானத்திலிருந்து சில காலங்களில் கொள்ளிகள் வெடித்துக் கீழே விழுவது உண்டு. இவ்விதம் இவை விழுவதை இராக் காலங்களில் காணலாம். இவைகளை விண்வீழ்க் கொள்ளிகள் என்று கூறுகிறோம். இவை விண்மீன்களிலிருந்து பிரிந்த சில பிசிர்களாய் இருக்கலாம். இவை கீழ் நோக்கி விழும் போது ஒளிவீசிக் கொண்டு வரும். பூமியில் அப் பிசிர்கள் மரம் செடிகள் மேல்

விழுந்தால் இவை கரிந்து போகும். சிறிய உருக்குக் கட்டிகள் இவை விழுந்த பக்கங்களில் பிறகு கிடைப்பதும் உண்டு. அக் கட்டிகள் அப் பிசிர் களின் பாகங்களே என்று கருதுகிறார்கள்.

தூம கேது என்ற வால் நட்சத்திரம் எப் பொழுதேனும் இராக் காலங்களில் வானத்தில் தோன்றும். அதன் தலை உருண்டு இருக்கும். அதிலிருந்து புறப்பட்ட வால் புகை போல நீண்டு வளர்ந்து தோன்றும். தூம கேது வானத்தில் ஒற்றையாகவும் அபூர்வமாக இரட்டையாகவும் வருவது உண்டு. அக்காலத்தில் எல்லோரும் மிகுந்த கவலையோடு வானத்தையே பார்ப்பார்கள். அது தோன்றுவது நாட்டுக்குப் பெரும் தீங்கு என்று நம்பும் வழக்கம் இருக்கிறது. அது சில நாட்கள் வரை வானத்தில் தோன்றி மறையும்.

நாம் பரந்த வெளியில் நின்று வானத்தைப் பார்த்தால் சிறிது தூரத்தில் வானம் பூமியைத் தொடுவது போலத் தோன்றும். எத்தனை காதம் நடந்து போனாலும் வானம் பூமியைத் தொடுவது இல்லை என்பதை நாம் அறியலாம். வானத்தில் மேகங்கள் பலவகை அழகான உருவங்களோடு திகழ்வதையும் அவற்றின் இடையே ஒரோரு சமயம் மின்னல் பல வகையாக மின்னுவதையும் பார்க்கலாம். நீண்ட கம்பி போல பளீர் என்று தோன்றி மறையும் மின்னல் ஒரு வகையாம். அகன்ற ஒளியாக வரும் மின்னல் மற்றொரு வகை

யாம். பல உருவங்களாக நெளிந்து தோன்றும் மின்னல் வேறொரு வகையாம். இவ்விதம் எத்தனையோ வகையான அழகிய காட்சிகளைத் தரும் வானத்தை நம் கடவுள் நமக்காகப் படைத்த காட்சிசாலை என்றே கொள்ளலாம்.

## கேள்விகள்

1. காலை, மாலை வேளைகளில் வானத்தில் வரும் காட்சிகள் என்ன?
2. வானவில் எப்பொழுது தோன்றும்?
3. மின்னல் எப்படித் தோற்றம் அளிக்கும்?
4. தூமகேது என்பது எப்படித் தெரியும்?
5. விண்வீழ்க் கொள்ளி எப்படி விழும்?
6. வானம் பூமியைத் தொடும் காட்சி எங்கே காணலாம்?

## பயிற்சி

I. நிலம் + உலகம். நிலவுலகம் என்று சேரும்.

பின் வரும் சொற்கள் எப்படிச் சேரும்?

நலம் + உணர்ச்சி, குளம் + உருவம்.

பலா + இலை. பலாவிலை என்று சேரும்.

பின் வரும் சொற்கள் எப்படிச் சேரும்?

புரு + அரசு, ஆ — இனம்.

II. விண்மீன், விண்வீழ்க் கொள்ளி, தூமகேது, மின்னல் என்ற சொற்களை வைத்து வாக்கியங்கள் எழுதுக.

III. போல என்பது ஒரு இடைச்சொல் ஆகும். பெயர்ச்சொல்லை யொட்டி வந்து அது பொருள் தரும். இந்தப் பாடத்தில் போல என்ற இடைச் சொல் வந்த வாக்கியங்களை எடுத்து எழுதுக.

IV. வானவில்லைப் பார்த்து மகிழாத குழந்தை இல்லை. எல்லாக் குழந்தைகளும் வானவில்லைப் பார்த்து மகிழும். இவ்விதம் கீழ்க்கண்ட வாக்கியங்களை மாற்றுக.

1. எங்கள் ஊரில் படியாத சிறுவர் எவருமில்லை.
2. புலியைக் கண்டு அஞ்சாத விலங்கு இல்லை.
3 பூனையைக் கண்டு ஓடாத எலி இல்லை.

# 5. ஆதாரக் கல்வி

| | | |
|---|---|---|
| **இன்பம்** | **துன்பம்** | **இணைந்து** |
| **வெறுப்பு** | **நேசிக்க** | **வாழ்த்து** |
| **வணக்கம்** | **படிப்படியாக** | **பயிற்சி** |
| **பணி** | **திகைக்கும்** | **தொண்டர்** |

"தொடங்கும் போது கல்வி துன்பமாகத் தோன்றும். பழக்கம் ஏறிய பிறகு அதன் இன்பம் தெரியும்," என்று ஒரு புலவர் கூறியுள்ளார். முன்னாளில் ஆரம்பக் கல்வி நம் நாட்டில் இளம் பிள்ளைகளுக்கு பயம் அளிப்பதாகவே இருந்தது. பள்ளிக்கூடத்தில் உபாத்தியாயர் எப்பொழுதும் பிரம்பும் கையுமாக இருப்பார். பிள்ளைகளுக்கு அவரைக் கண்டால் நடுக்கம் ஏற்படும். அதன்

காரணமாக பெற்றோர்கள் அடங்காப் பிள்ளைகளை உபாத்தியாயரிடம் சொல்லி அடக்கும் வழக்கம் இருந்தது.

தொடங்கும் போதே இளங் குழந்தைகளுக்கு அக் கல்வியில் இன்பம் உண்டாகும்படி செய்வதே புதிய கல்வி முறை ஆகும். பிள்ளைகள் எழுதப் படிக்கப் பழகுவதோடு கல்வி முடிந்து விடாது. "கண் கண்டது கை செய்யும்" என்ற உண்மை குழந்தைகளிடம் காணத் தக்கது. சிறு கைகளால் அவர்கள் செய்யத் தக்க வேலைகளை எளிய முறையிலே பழக்கி வைப்பது ஆதாரக் கல்வியின் நோக்கமாகும்.

பாப்பாப் பாட்டிலே பாரதியார் பாடிய சில கருத்துக்கள் இந்த ஆதாரக் கல்வியின் உண்மையை விளக்கும். இளம் பிள்ளைகள் விளையாடுவதற்குக் குதித்துக் கொண்டு வருவார்கள். படிப்பையும் அதனோடு சேர்ந்த தொழிலையும் விளையாட்டாகவே செய்து விட்டால் அவர்கள் படிப்பில் துன்பம் அறியாமல் இன்பமே காணுவார்கள். இம் முறையில் உபாத்தியாயரும் பிள்ளைகளும் இணைந்து பழகும் குணம் உள்ளவர்களாய் இருப்பார்கள். சிறுவர்கள் ஒரு புதிய கருத்தை வெறுப்புடன் ஏற்றுக் கொள்வதான எண்ணமே அவர்களுக்குத் தோன்ற இடமில்லை. சிறு பிள்ளைகள் உபாத்தியாயர்களை அன்புடன் நேசிக்கப் பழக்கம் ஏற்படுவதே ஆதாரக்

கல்வியின் முக்கிய நோக்கம். தாயும் குழந்தைகளும் போலவும் அண்ணனும் தம்பி மார்களும் போலவும் பழக வேண்டும்.

இளங் குழந்தைகளுக்குக் கடவுள் வணக்கத்தின் கருத்தை எளிதாக அறியும்படி செய்யலாம். பெற்றோர்களும் பெரியோர்களும் உபாத்தியாயர்களும் தினந்தோறும் கைகூப்பி நின்று ஒரு பக்கம் நோக்கி வணங்குவதைப் பார்த்தால் குழந்தைகளும் அப்படியே செய்வார்கள். உபாத்தி



யாயரும் குழந்தைகளும் அப்படியே தினம் கடவுள் வாழ்த்துப் பாடுவதும் மௌனமாகவே வணக்கம் செய்வதும் இக் கல்வி முறையில் முதற் படியாக காணத் தக்கது.

குழந்தைகள் தாமாகவே பல் விளக்கி, கை கால் கழுவி, முகம் துடைத்து, அழுக்கற்ற உடைகளை அணிந்து, ஒழுங்காக நடந்து வரும்படி

எளிய முறைகளால் பழக்கலாம். காலையில் அதிக நேரம் தூங்கும் பழக்கம் உள்ள குழந்தைகளையும் சிறிது சிறிதாக நல்ல வழிக்குத் திருப்பலாம். காலை ஆறு மணிக்கு முன் மணி அடித்து பிள்ளைகளை வரிசையாக நடத்தும் பழக்கம் தொடங்கினால் சில நாட்களில் சோம்பல் மாறி விடும். பெரியவர் சிறு குழந்தைகளுக்குப் படிப்படியாக நல்ல பழக்கங்களை அறிவிக்க வேண்டும். பல குழந்தைகள் சேர்ந்து படிக்கும் பள்ளிக்கூட அறையும் சுற்றுப் புறமும் குப்பை கூளங்களும் புழுதியும் நிறைந்திருக்கும். இவைகளை ஒரு கூலியாள் வந்து தான் எடுத்து, அப்புறப் படுத்த வேண்டும் என்று காத்திருக்கக் கூடாது. 'தன் கையே தனக்கு உதவி' என்ற விதமாக குழந்தைகளே அசுத்தங்களைக் கூட்டி அப்புறப் படுத்தப் பயிற்சி பெற வேண்டும். உபாத்தியாயரே முன் நின்று கூட்டும் போது, பிள்ளைகளும் இப் பணியை விளையாட்டாகவே செய்வார்கள்.

பள்ளிக்கூடத் தோட்டத்தில் ஒவ்வொரு குழந்தைக்கும் இடம் இருக்க வேண்டும். ஒவ்வொரு குழந்தையும் தனக்கென்று ஒரு சிறு பகுதியைப் பிரித்துக் கொண்டு, தோட்ட வேலை செய்யலாம். நிலத்தைக் கொத்திக் களைந்து விதை போடவும் தண்ணீர் பாய்ச்சவும் அவர்களே பழக வேண்டும். உபாத்தியாயர் அருகில் நின்று கொண்டே குழந்தைகள் இன்னது செய்வது என்று தெரியாமல் திகைக்கும் போது வழி

காட்ட வேண்டும். கருவிகளைக் கையாளும் வகையை அவர்களே எளிதில் அறிந்து கொள்ளும்படி விட வேண்டும்.

மரத்தின் நிழலில் அமர்ந்து தமிழ்ப் பாடம் கணக்கு, சரித்திரம் முதலிய பாடங்களைப் படிக்கலாம். நடக்கும் போது ஒரு குழந்தை தடுக்கி



விழுந்து காலில் புண்பட்டால் மற்றக் குழந்தைகள் கூட்டம் கூடி வேடிக்கை பார்க்காமல் சமயத்திற்கு ஏற்ற உதவி செய்யும்படி பழக வேண்டும். பூச்சி கடித்தால் உடனே அதற்கு மருந்து போட அறிந்து கொள்ள வேண்டும். ஏதேனும் கைத் தொழிலிலும் சிறிது சிறிதாகப் பயிற்சி பெற வேண்டும். இக் குழந்தைகள் பருத்தியை விதை

நீக்கிப் பட்டை போட்டு, கதிரிலும் இராட்டினத்திலும் நூல் இழுக்கப் பழகிக் கொள்ளவும் வேண்டும்.

இது போலவே அந்தந்த ஊர்களில் எந்தத் தொழில் குடிசைகளில் எளிதாக நடைபெறுகிறதோ



அதையே குழந்தைகளும் பழகும்படி செய்ய வேண்டும். தொழிலுக்காக ஒரு பொழுதும் படிப்பிற்காக ஒரு பொழுதும் என்று பிரிக்க வேண்டும். பிரித்து வைத்தாலும் தொழில் நடக்கும்போது படிப்பும் கலந்தே இருப்பதைப் பிள்ளைகளும் பெரியவர்களும் அறிய வேண்டும். இவ்விதம்

இளங் குழந்தைகளை நாட்டிற்குத்தக்க தொண்டர்கள் ஆக்கக்கூடிய ஆதாரக் கல்வி நம் நாட்டில் நல்ல முறையில் வளர வேண்டும்.

## கேள்விகள்

1. குழந்தைகள் கல்வியோடு தொழிலும் பழகுவது எவ்விதம்?
2. பள்ளிக்கூடத் தோட்டத்தில் சிறுவர்கள் என்ன செய்வார்கள்?
3. அசுத்தங்களைக் கண்டால் குழந்தைகள் என்ன செய்ய அறிய வேண்டும்?
4. நூற்கும் தொழிலை எப்படிப் பழக வேண்டும்?

## பயிற்சி

I. ஆரம்பம் + கல்வி = ஆரம்பக் கல்வி என்று சேரும். பின்வரும் சொற்கள் எப்படிச் சேரும்.

பள்ளிக்கூடம் + பிள்ளை      பணம் + செலவு

குளம் + கரை      இனம் + சேர்க்கை

II. தொடங்கு என்ற வினையிலிருந்து தொடக்கம் என்ற பெயர் உண்டாகும்.

கீழுள்ளவற்றிற்கு பெயர் எப்படி வரும்?

அடங்கு      விளங்கு

சுருங்கு      நடுங்கு

# 6. பழமையும் புதுமையும்

## பாட்டு

(ஒரு கிழவரும் குமரனும் உரையாடல்)

| | | |
|---|---|---|
| பழமை | புதுமை | உணர்ந்து |
| திண்மை | வன்மை | சிதலை |
| இற்றை | துலா | கபிலை |
| திருமகள் | விசை | பித்தன் |

கிழவர்: உண்மை விளக்குகிறேன்—குமரனே
உள்ள துணர்ந்து கொள்வாய்
திண்மை உறுதி வன்மை—பழைமையில்
சேருவ துண்டு கண்டாய்.

குமரன்: என்ன வலிமை யுண்டோ—பழமையில்
யாவும் உறைத்திடுவீர்
பின்னும் புதுமையிலே— கிழவரே
பேசுவேன் வன்மைகளே.

கி. ஏடுகள் சேர்த்து வைத்தோம்—குமரனே
எல்லாம் எழுதி வைத்தோம்.
ஏடுகள் இன்றளவும்— அழியாது
இருப்பது கண்ட துண்டே.

கு: புத்தகம் ஆயிரமாய்—கிழவரே
பூமி முழுதும் உண்டே
அத்தனை புத்தகமும்—சிதலையால்
அழிந்து போய்விடுமோ.

கி: காடு திருத்தி வைத்தோம்—குமரனே
காட்டிற் கலப்பை விட்டோம்
நாடு செழித்திடவே—உழவினை
நன்றாய் நடத்தி வந்தோம்.

கு: ஒற்றைக் கலப்பையினால் கிழவரே
ஊரை உழுததுண்டோ
இற்றைக் கலப்பைகளால்—விரைவிலே
எங்கும் பயிர் வருமே.

கி: தோட்டக் கிணறுகளே—குமரனே
துலா கபிலையினால்
நாட்டில் பயிர் வளர்த்தோம்—பலபல
நன்மையும் கண்டு வந்தோம்.

கு: எந்திரம் வைத்திடுவோம்—கிழவரே
எங்குமே நீர் பரவும்
தந்திரம் செய்திடுவோம்—பயிர்களும்
தக்க பலன் தரவே.

கி: எண்ணெய் நெய் ஊற்றிடுவோம்—குமர
ஏற்றுவோம் கை விளக்கை [னே
கண்ணும் குளிர்ச்சி பெறும்— திருமகள்
கண்டு புகுந் திடுவாள்.

கு: ஆற்று நீர் வெள்ளத்திலே—கிழவரே
ஆன் விசை யெடுத்தே
ஏற்றும் விளக் கொளியால்—உலகிலே
எத்தனை இன்ப முண்டே.

கி: மரத்தால் வண்டி செய்தோம்—குமரனே
வைக்கோல் சுமை யடுக்கி
உரத்தால் ஓட்டிவந்தோம்—உனக் கவை
ஓட்டத் திறமை யுண்டோ?

கு: வேகமாய் ஓடுகின்ற—பல வண்டி
விட்டுப் பழகி யுள்ளோம்
போக வர அவையே—கிழவரே
போதும் உமக்கு மன்றோ?

கி: எத்தனை நன்மையுண்டே—பழமையால்
யாவும் மறந்து விட்டாய்
பித்தனைப் போல வன்றோ—குமரனே
பேசப் பழகி விட்டாய்.

கு: முற்றிலும் நன்மைகளே — பழமையில்
மூடி யிருந்த தில்லை
சுற்றிலும் உள்ளதுவாம்— புதுமையைச்
சோர விடுவ துண்டோ ?

## கேள்விகள்

1. பழமையில் இருந்த நன்மைகள் என்று கிழவர் எவற்றை உரைக்கிறார்?
2. குமரன் என்ன மறு மொழி கூறுகிறான்?

## பயிற்சி

1. உனக்கு + அவை = உனக்கவை என்று சேரும். பின் வரும் சொற்கள் எப்படிச் சேரும்?
கணக்கு, எழுது, ஒழுங்கு—இல்லை.

II. வண்டி ஓடும்.

நாம் வண்டியை ஓட்டுவோம்:

ஓடுவது வண்டியின் வேலை. நாம் அது ஓடும்படி செய்கிறோம்.

கீழுள்ளவற்றைப் பொருள் படும்படி அமை.

(ஆடு) தம்பி தொட்டிலை ஆ————கிறான்.

(உருகு) தாய் நெய்யை உ——கிறாள்.

(சுருங்கு) நான் குடையைச் சுரு————கிறேன்.

# 7. சோழ நாட்டு வளம்

| | | |
|---|---|---|
| **சங்ககாலம்** | **தலைநகரம்** | **துறைமுகம்** |
| **பட்டினப்பாலை** | **நவமணி** | **நூற்றாண்டு** |
| **நாகரிகம்** | **வேலைப்பாடு** | **கல்லணை** |
| **பேரணை** | **வெள்ளம்** | **சார்ந்து** |

சோழ மன்னர் ஆண்ட நாட்டை சோழ நாடு என்று சொல்லுகிறோம். கரிகாற் சோழன், மனுச் சோழன், கோப்பெருஞ் சோழன் முதலிய மன்னர்கள் சங்க காலத்தில் வாழ்ந்தனர். இராசராசன், குலோத்துங்கன், விசயதரன் முதலிய மன்னர்கள் பிற்காலத்தில் ஆண்டனர்.

புகார் நகரம் கரிகாலன் காலத்தில் சோழ நாட்டிறகுத் தலை நகரமாய் இருந்தது. அது காவேரி கடலோடு கலக்கும் இடத்தில் ஒரு துறைமுகப் பட்டினமாகவும் இருந்தது. பழைய பாட்டுக்களில் காவிரிப்பூம் பட்டினம் என்றும்

சொல்லப்பட்ட இந்த நகரம் செல்வம் சிறந்து விளங்கியது. இராசராச சோழன் ஆண்ட காலத்தில் தஞ்சாவூர் தலை நகராக விளங்கியது. அவர் ஆட்சியின் அடையாளங்களை இன்றும் நாம் அவ்வூரில் காணலாம்.

முற் காலத்திலே அரசர் பலரும் புலவர் பலரை அன்போடு வரவேற்று ஆதரித்தார்கள். பட்டினப்பாலை என்ற ஒரு பாட்டு காவிரிப்பூம் பட்டினத்தைப் பற்றியே பாடப்பட்டது. அதைப் பாடிய புலவர் சோழ மன்னர் கரிகாலனிடம் பல ஆயிரம் பொன் பரிசாகப் பெற்றுக்கொண்டார். ஒரு பாட்டிற்காக அரசர் அவ்வளவு பணம் புலவருக்குக் கொடுத்தார் என்றால் அக்காலத்தில் சோழ நாடு எத்தனை செல்வத்தோடு இருந்தது என்பது அதனாலேயே விளங்கும்.

நாட்டிலே எங்கும் நெல்லும் கரும்பும் நிறைந்து இருந்து. கடை வீதிகளிலே நவ மணிகளும் பொன்னும் வெள்ளியும் சித்திரங்களும் சிற்பங்களும் பல வகைக் கைத்தொழில் பொருள்களும் விலைப்பட்டன. புகார் நகரம் இந்த நிலையில் இரண்டு மூன்று நூற்றாண்டுகள் இருந்தது. இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே சோழ நாட்டு மக்கள் நாகரிகம் சிறந்து வாழ்ந்ததற்கு நாட்டின் வளமே காரணமாகும்.

கங்கை கொண்ட சோழர், சயங் கொண்ட சோழர் முதலிய பிற்காலச் சோழ மன்னர்கள் அழகு மிக்க பெரிய நகரங்களும் கோயில்களும்

கட்டினார்கள். இராசராச சோழர் கட்டியுள்ள தஞ்சாவூர்க் கோயில் கோபுரம் மிகவும் சிறந்த வேலைப்பாடு உள்ளது. இந்த அழகிய கோயில்களைக் கட்டிய மன்னர்கள் தொழிலாளருக்கு வயிறார உணவு கொடுத்து, பல ஆண்டுகள் வேலை வாங்கினார்கள். இத்தனை மக்களையும்



தஞ்சாவூர்க் கோயில்

பசியை மறந்து பணியே நினைவாக இருக்கும்படி சோழ நாடே அன்று காப்பாற்றியது.

சோழ நாட்டில் பாயும் காவேரியின் குறுக்கே அக் காலத்திலேயே கல்லணை, பேரணை என்ற அணைகள் இருந்தன. இக் காலத்தில் கண்ணம்பாடி அணை, மேட்டூர் அணை முதலியவை அமைந்துள்ளன. காவேரி குடகு நாட்டிலே பிறந்து, பிற நாடுகள் வழியே வந்து

கடைசியாகச் சோழ நாட்டில் பல கிளைகளாகப் பிரிந்து ஓடி, கடலோடு கலக்கிறது. இந் நாளில் மைசூர் நாட்டிற்கும் கோயம்புத்தூர், சேலம், திருச்சிராப்பள்ளி, தஞ்சாவூர் முதலிய தமிழ் ஜில்லாக்களுக்கும் காவேரி நீர் உதவுகிறது. முன்னாளிலே காவேரி வெள்ளத்தின் பெரும் பகுதி சோழ நாட்டிற்கே உதவிய தாகையால் புலவர்கள் காவேரியை 'சோழர் குலக் கொடி' என்று புகழ்ந்தார்கள்.

உணவு பற்றாக் குறை இருக்கும் இக் காலத்தில் நம் தமிழ் நாட்டு மக்களுக்கு வேண்டிய உணவை ஓரளவு அளிக்கும் வளம் இன்றும் தஞ்சாவூர் ஜில்லாவைச் சார்ந்து இருக்கிறது. இரு போகம் விளையும் நஞ்சை நிலம் மிகுந்த இப் பகுதியில் சிறிதும் தரிசு நிலம் இல்லாமல் செய்ய அரசியலார் முயன்று வருகிறார்கள். மக்களும் ஒத்துழைத்து உணவுப் பொருள் பெருக்குவாராக.

## கேள்விகள்

1. சோழ நாட்டை ஆண்ட சிலர் பெயரை கூறுக.
2. சோழ நாடு அக்காலத்திலேயே செல்வம் மிகுந்திருந்தது என்று எப்படி அறியலாம்?
3. இன்றும் சோழ நாடு வள முள்ளதே என்று கூறுவது எப்படி?

## பயிற்சி

I. சோழர் + நாடு = சோழ நாடு என்று சேரும்.
பின்வரும் சொற்கள் எப்படிச் சேரும்.
பாண்டியன் + நாடு, சேரன் + நாடு.

II. நாடு + வளம் = நாட்டு வளம்
நாடு + பாட்டு = நாட்டுப் பாட்டு
நாடு + அழகு = நாட்டழகு

கீழ்க்கண்ட சொற்கள் எப்படிச் சேரும்?

| | | |
|---|---|---|
| வீடு + மாடம் | வீடு + வழக்கம் | சோறு + குறை |
| ஆடு + வகை | ஆடு + உரம் | சோறு + வகை |

# 8. இளங்கோ அடிகள்

| | | |
|---|---|---|
| **யாங்கணும்** | **துணிந்து** | **காவியம்** |
| **மிக்கவர்** | **வரலாறு** | **சிங்காதனம்** |
| **இளவரசு** | **பெருநம்பி** | **பேரானந்தம்** |
| **சிற்றூர்** | **தவக்கோலம்** | **ஆவேசம்** |

பாரதியார் "யாம் அறிந்த புலவரிலே கம்பரைப்போல் வள்ளுவர் போல் இளங்கோவைப் போல் பூமிதனில் யாங்கணுமே பிறந்ததில்லை; உண்மை; வெறும் புகழ்ச்சியில்லை," என்று துணிந்து பாடியிருக்கிறார். கம்பர், திருவள்ளுவர், இளங்கோ அடிகள் என்ற மூன்று தமிழ்ப் புலவர்களைப் போல் வேறு எந்த நாட்டிலும் எந்த மொழியிலும் புலவர்கள் இல்லை என்பது, பல மொழிகளை அறிந்த பாரதியாரின் துணிபு. பாரதியார் பிற மொழிப் புலவர் பாட்டுக்களையும் அறிந்தவர். கம்பரையும் வள்ளுவரையும் தமிழகச் சிறுவர் ஓரளவு அறிவார்கள். இளங்கோ அடிகள்

சிலப்பதிகாரம் என்ற தமிழ் நாட்டுக் கதையைப் பெரிய காவியமாகப் பாடியவர். இவரைப் பற்றியே நாம் இப் பாடத்தில் படிப்போம்.

சேர நாட்டை ஆண்ட மன்னருள் நெடுஞ் சேரலாதன் என்பவர் புகழ் மிக்கவராவர். அவர் இமய மலை வரையில் சென்று வெற்றி பெற்று வந்ததாக சரித்திர வரலாறும் உண்டு. அவர் ஒரு நாள் வஞ்சிமா நகரில் தமது அரண்மனையில் அரசியோடும் இரண்டு மக்களோடும் தன் சிங்காதனத்தில் அமர்ந்திருந்தார். அம் மக்கள் இருவரில் மூத்தவன் செங்குட்டவன். இளையவன் பெயர் இளங்கோ என்பது. தந்தை தன் மக்கள் குணத்தை ஆராய்ந்து இளங்கோவே சிறந்தவன் என்று துணிந்து, அவனுக்கு இளவரசுப் பட்டமும் பெரு நம்பி என்ற விருதுப் பெயரும் அளித்து, மூத்த மகனை ஒதுக்கி வைத்தார். செங்குட்டுவன் இக் கொடுமையை எண்ணி மனம் புகைந்து கொண்டிருந்தான். ஆயினும் அரசராய் இருந்த தந்தையை எதிர்க்க இயலவில்லை. அரசர் சிங்கானத்தில் வீற்றிருக்கையில் அங்கு ஒரு பெரியோர் வந்தார்.

பெரியோர் அரசரையும் மக்களையும் கூர்ந்து நோக்கினர். சிறிது பொழுதில் எதிர் காலத்தில் நிகழ இருந்த பல செய்திகளையும் அறிந்து கொண்டார். அரசர் முகம் நோக்கி “ அரசே, அரச குமாரர் இருவருள் இளங்கோவே எல்லா வகையிலும் சிறப் படைவார். எதிர் காலத்தில்

அவர் பெறும் சிறப்பை இக் குலத்தில் எவரும் அடைந்ததும் இல்லை. அடையப் போவதும் இல்லை,'' என்று கூறினர். அருகில் இருந்த செங்குட்டுவன் செவிகளில் இச் சொற்கள் கொடுமையாக நுழைந்தன. தம்பியைத் தன் து தந்தையே பெரு நம்பி ஆக்கிய செயலை எதிர்த்து ஒன்றும் கூறுதிருந்தாலும் இந்த மொழிகளைக் கேட்டு, மனம் பொறுக்க இயலாது கொதித்து எழுந்தான்.

அண்ணனின் மன நிலையை முகக் குறிப்பால் அறிந்த இளங்கோ உடனே எழுந்து நின்றார். சிங்காதனத்தில் இருந்த தந்தையை வணங்கி ''அரசர் பெருமானே! அரசர் ஆணையை எதிர்த்துப் பேசும் உரிமை 'குடிகளுள் எவருக்கும் இல்லை. நானும் இன்று குடி. மக்களுள் ஒருவனே என்பதை மறவாமலே பேசுகிறேன். இங்கு மூத்தவர் இருக்கும் போதே என்னை பெரு நம்பி ஆக்கினீர். மூத்தவன் இருக்க இளையவன் அரசு பெறுவது என்பது இக் குலத்தில் என்றும் வழக்கத்தில் இல்லை. இனியும் நடக்கக் கூடாது என்பதே என் எண்ணம். இந் நிலையில் நான் இங்கு இருந்தால் நாளைக்கே எனக்கு இளவரசுப் பட்டமும் சூட்டி விடுவீர். இந்த உலக அரசைக் காட்டிலும் பேரரசு ஒன்று உண்டு. அது உலகத்தை மறந்து இறைவனையே நாடும் பெரு மக்களுக்கு அவன் அருளும் பேரானந்தப் பெரு வாழ்வே. அவ் வாழ்வையே பெறத் துணிந்த

சிறியேன் இவ் வரசின் உரிமைகளைத் துறந்து இப்பொழுதே துறவு பூணுகிறேன்,'' என்று கூறி அரண்மனையை நீங்கிப் புறப்பட்டார்.

அரசர் "மகனே, நீ துறந்து நாட்டிற்குப் புறத்தே போக வேண்டாம். அரண்மனையில் உனக்கும் இடம் உண்டு,'' என்று கூறி மகனை தடுத்தார். ஆனால் அது பயன்படவில்லை.

இளங்கோ அன்றே இளங்கோ அடிகள் ஆனார். அவர் உடனே தலை நகரை அகன்று, கிழக்கே ஒரு சிற்றூரில் உள்ள கோயிலில் தவக் கோலம் பூண்டு வீற்றிருந்தார். மதுரையில் நடந்த கண்ணகி கதையை நேரில் பார்த்த சாத்தனார் இங்கு வந்து அக் கதையை விளக்கி உரைத்தார். "சேர சோழ பாண்டிய நாடுகளில் நிகழ்ந்த இக் கதையை, துறவியான நீரே பாடி அருள வேண்டும்,'' என்று வேண்டிக் கொண்டார். செங்குட்டுவன் பத்தினிக் கோயில் கட்டியபோது பத்தினித் தெய்வம் ஆவேசத்தால் உரைத்த செய்திகளையும் கேட்டார். கண்ணகி தேவியால் வாழ்த்தப் பெற்று அக் கதையை சிலப்பதிகாரமாகப் பாடினார். இவை நடந்து பல நூற்றாண்டுகளாகியும் இளங்கோ அடிகளையும் அவர் இயற்றிய சிலப்பதிகாரத்தையும் நாம் போற்றத் தக்கவராவோம்.

## கேள்விகள்

1. பாரதியார் பாட்டில் வரும் புலவர்கள் யார்?
2. நெடுஞ்சேரலாதனிடம் பெரியோர் என்ன சொன்னார்?
3. செங்குட்டுவன் சினம் கொண்டது ஏன்?
4. இளங்கோ எப்படி சினத்தை மாற்றினார்?

## பயிற்சி

I. பெரு நம்பி, இளவரசு, ஆவேசம் என்ற சொற்களை வைத்து வாக்கியங்கள் எழுதுக.

II. சேரன் செக்குட்டுவன் "மகனே நீ துறந்து நாட்டிற்குப் புறத்தே போக வேண்டாம். அரண்மனையில் உனக்கும் இடம் உண்டு," என்று சொன்னார்.

இந்த மேற்கோட் குறிகளை எடுத்துவிட்டால்:—

சேரன் செங்குட்டுவன் மகனை நோக்கி அவர் நாட்டிற்குப் புறத்தே போக வேண்டாம்; அரண்மனையில் அவருக்கும் இடம் உண்டு என்று சொன்னார்.——என்று ஆகும்.

பின்வரும் வாக்கியங்களை மேற்கோட்குறிகளை நீக்கி எழுதுக.

மகன் "அப்பா, எனக்குப் புத்தகம் வேண்டும்," என்றான்.

கிழவர் "பேரா, நீ தெருவில் விளையாடாதே; வண்டி வரும். உன்னை நசுக்கி விடும்," என்று கூறினார்.

உபாத்தியாயர் "தமிழ் படிக்கும் மாணவனாகிய நீ, தமிழின் பெருமையை உணரவேண்டும். தமிழ்ப் புலவர் யார் என்பதை அறிய வேண்டும். நல்ல தமிழ் நடை எழுத அறிய வேண்டும்," என்று கூறினார்.

# 9. உடற் பயிற்சி

| | | |
|---|---|---|
| நுட்பம் | பாழடைந்து | உறவு |
| உழைப்பாளி | நியாயவாதி | ஓவியம் |
| முதிர்ந்த | கடினம் | பந்தயம் |
| இடையூறு | வீரர் | சுறுசுறுப்பு |

மனித உடம்பு ஒரு நுட்பமான இயந்திரம் போன்றது. அதற்குள் இருக்கும் பல பகுதிகளில் ஓய்வு இல்லாமல் பல அருமையான வேலைகள் நடந்து கொண்டிருக்கின்றன. உடம்பை ஒரு அழகான வீடு என்றும் சொல்லலாம். உயிர் என்ற அரசன் வாழும் அரண்மனை என்றே நாம் அதை நினைக்கலாம்.

எவரும் வசிக்காமல் பூட்டப் பெற்ற வீடு சில நாட்களில் பாழடைந்து போவது உண்மை தானே? நல்ல விலை கொடுத்து ஒரு அருமையான இயந்திரத்தை வாங்கி, அதைத் தக்கபடி எண்ணெய் இட்டு ஓட்டாமலே வைத்தால் அதுவும் துருப் பிடித்து வீணாகப் போகும். அவ் வண்ணமே நம் உடம்பும் அதன் உறுப்புக்கள் பாழடையாமல் தக்க நிலையில் இருக்கும்படி கவனிக்க வேண்டும்.

உடம்பும் உயிரும் உறவு கொண்டாடும் காலம் முழுவதும் நோய் இல்லாமலும் சோர்வு இல்லாமலும் இருக்க வேண்டும். உரிய வேலைகளைத் தகுந்த காலங்களில் செய்யத் தக்கதாய்

இருக்க வேண்டும். உடம்பு உழைக்க உழைக்க உறுதி பெறும். உடம்பை நல்ல நிலைமையில் வைத்துக் கொள்ள மருந்தும் மந்திரமும் வேண்டாம். காலை மாலைகளிலும் சிறிதளவு பயிற்சி இருப்பதே போதும். உடம்பிற்கு என்ன பயிற்சி வேண்டும்? கை கால்களை சிறிது பொழுது நீட்டி மடக்கி அசைத்து ஆட்டத் தக்க பயிற்சியே சிறந்ததாம். தலை, கழுத்து முதலிய பகுதிகளுக்கும் எளிய பயிற்சிகள் உண்டு.

உடற் பயிற்சி எல்லோருக்கும் அவசியம் தானா? விறகு வெட்டிக்கு அவன் தொழிலே உடற் பயிற்சியும் ஆகிறது. அவன் கை கால்களில் தசைகள் உறுதியாய் இருப்பதை நாம் பார்க்கலாம். கை கால்கள் வருந்தி உழைக்கும் உழைப்பாளருக்கு உடற் பயிற்சி வேண்டியதில்லை. அவர்களுக்கு நல்ல உணவும் ஓய்வுமே வேண்டும். குழந்தைகள் தவிழ்ந்தும் கை கால்களை ஆட்டியும் உதைத்தும் இயல்பாகவே உடற் பயிற்சி பெறுவதை நாம் கவனிக்கலாம். இருந்த இடத்தை விட்டு அகலாமல் எழுதுவதும் படிப்பதும் தொழிலாக உள்ளவர்களுக்கு உடம்பில் உள்ள உறுப்புக்கள் அசைந்து இயங்கத் தக்க பயிற்சி வேண்டும். பள்ளிக்கூடங்களில் படிக்கும் பிள்ளைகளுக்கு உடற் பயிற்சியை கட்டாயமாக நடத்துவதற்கு இதுவே காரணமாகும். உபாத்தியாயர்கள், நியாயவாதிகள், எழுத்தாளர், வைத்தியர், ஓவியம் வல்லவர் மற்றும் பல

அசைவில்லாத் தொழிலாளருக்கு உடற் பயிற்சி சிறிதாவது வேண்டும்.

இவர்கள் பெரும்பாலும் மனத்திற்கும் வாய்க்கும் வேண்டிய மட்டும் வேலை கொடுக்கிறார்கள். உடம்பை அசைத்து, சிறிது தூரம் நடக்கவும் இடம் இல்லாத நிலைமையில் இருக்கிறார்கள். வெளியே புறப்பட்டால் வண்டிகளில் ஏறிப்



போகிறார்கள். இவர்களுக்கு காலையிலும் மாலையிலும் நல்ல காற்று வீசும் தோட்ட வழிகளில் உலாவி வரும் பழக்கமே நல்லது. வயது முதிர்ந்தவர்கள் கடினமான பயிற்சிகளைச் செய்வது தீமையே தரும். பள்ளிக்கூடப் பிள்ளைகள் இருக்கவும் எழவும் நிற்கவும் நடக்கவும்

ஓடவும் ஆடவும் இடம் தருகின்ற பயிற்சிகளில் கலந்து கொள்ளலாம்.

பள்ளிக்கூடப் பிள்ளைகள் மாலை வேலைகளிலே கால் பந்து, கிட்டிப் பந்து முதலிய பந்து விளையாட்டுக்களில் உடற் பயிற்சி பெறுகிறார்கள். சிறுமிகள் கும்மி, கோலாட்டம், பாண்டி, ஊஞ்ச லாட்டம் முதலிய வகைகளால் உடற் பயிற்சி பெறலாம். விளையாட்டு வகைகளில் பந்தயம் வைத்து வெற்றி பெறவும் பாடு படுகிறார்கள். தண்ணீரில் நீந்துதல், ஓட்டப் பந்தயம், உயரத் தாவுதல், நீளத் தாவுதல், இடையூறு கடத்தல் முதலிய பல வழிகளில் இந் நாளில் இளம் பிள்ளைகள் ஈடுபடுகிறார்கள். விளையாடு மிடத்தில் பிள்ளைகள் வேற்றுமைகளை மறந்து, ஒற்றுமை அடைய வழி உண்டாகும்.

குதிரை யேற்றம், யானை யேற்றம், சிலம்பம் சுழற்றுதல், அம்பு எய்தல் முதலிய பழைய காலப் பயிற்சிகள் வீரருக்கு ஏற்றவையாக இருந்தன. இந் நாட்களில் அவை மறந்து விட்டன. காலத்திற்கு ஏற்ப பயிற்சி முறைகளும் புதுமையாகத் தோன்றுவது இயல்பே ஆகும். ஆயினும் எவரும் அவரவர் உடம்பு நிலைமைக்கு ஏற்ற பயிற்சியையே செய்ய வேண்டும். முறையாக உடற் பயிற்சி பழகுவோருக்கு உடம்பு உரம் பெறும்; இரத்த ஓட்டம் அதிகரிக்கும். தேகத்திற்குச் சுறுசுறுப்பும் மனதுக்கு வலிமையும் உண்டாகும்; ஆயுள் நீடிக்கும்.

## கேள்விகள்

1. பள்ளிக்கூடப் பிள்ளைகளுக்கு ஏற்ற பயிற்சிகள என்ன ?
2. பழைய காலத்து உடற் பயிற்சிகள் எவை ?
3. விளையாட்டு வகை சில கூறுக.

## பயிற்சி

I. ஓட்டம், ஏற்றம் என்பவை தொழிலின் பெயர்கள். ஓடு, ஏறு என்ற பகுதிகளிலிருந்து பிறந்தவை.

ஓடு + அம், ஏறு + அம் (ஓடுதல், ஏறுதல், ஓடுவது ஏறுவது, என்றும் தொழிற் பெயர் வரும்.)

கீழ்க் காட்டிய பகுதிகளிலிருந்து தொழிற் பெயர் வருவிக்க.—தேடு, பொறு, செய், கேள்.

II. குதிரை யேற்றம்: குதிரை + ஏற்றம் என்றுபிரியும்.
பிரித்து எழுதுக : காலை யோட்டம், தலை யாட்டம்.
சேர்த்து எழுதுக : நிலை + ஆட்டம், மனை + ஆக்கும்
விலை + ஏற்றம், குறை + ஆக்கம்.

1. சிறுவருக்கான உடற் பயிற்சியைப் பற்றி ஐந்து வாக்கியங்கள் எழுதுக.

2. வயதானர்களுக்கு உடற் பயிற்சி என்பதைப் பற்றி ஐந்து வாக்கியங்கள் எழுதுக.

# 10. நீர் வீழ்ச்சி

| | | |
|---|---|---|
| நீர் வீழ்ச்சி | இயற்கை | படிவது |
| மகிழ்ச்சி | மூலிகை | வெப்பம் |
| சாதனம் | காந்தம் | மின்சாரம் |
| அருவி | செங்குத்து | தணிகிறது |

மலை நாட்டில் அருவிகள் மலையிலிருந்து கீழே இறங்கும்போது சில இடங்களில் செங்குத்தாகவோ சரிவாகவோ மேல் நிலையிலிருந்து கீழ் நிலைக்கு விழுவது உண்டு. இதனையே நாம் நீர் வீழ்ச்சி என்கிறோம். மேலிருந்து கீழே விழும் எப்பொருளும் விரைவாக வரும் என்பதை நாம் அறிவோம். நிலத்தில் ஓடுகின்ற ஆற்று நீரின் ஓட்டத்தைக் காட்டிலும் மிக விரைவாகவே நீர் வீழ்ச்சியில் தண்ணீர் வந்து விழும்.

நம் தமிழ் நாட்டில் குற்றாலம் நீர் வீழ்ச்சி மிகவும் புகழ் பெற்றது. அதற்கு அப்பால் பாப நாசம், பாண தீர்த்தம் முதலிய பல நீர் வீழ்ச்சிகள் இருக்கின்றன. மைசூர் நாட்டிலே சிவசமுத்திரத்திற்கு அருகிலே காவேரியின் நீர் வீழ்ச்சி ஒன்று இருக்கிறது. நீலகிரி மலைமேல் பைக்காரா என்ற இடத்திலும் ஒரு நீர் வீழ்ச்சி இருக்கிறது.

மழை வளம் மிகுந்த மலை நாடுகளில் நீர் வீழ்ச்சி சில இடங்களில் அமைகிறது. இயற்கைக் காட்சிகளில் மலைக் காட்சியும்

ஒன்றாகும். மலை மரங்கள் ஓங்கி வளர்ந்து அழகு கொடுப்பதும் மலை மேல் மேகங்கள் படிவதும் பாறைகளின் தோற்றமும் இனிய காட்சிகளாகும். இத் தகைய காட்சி யின்பம் தரும் மலைகளில்



குற்றாலம் நீர்வீழ்ச்சி

நீர் வீழ்ச்சியும் அமைந்து இருந்தால் அங்கு நமக்கு ஏற்படும் மன மகிழ்ச்சிக்கு எல்லை உண்டோ! நீர் வீழ்ச்சி கண்களுக்கு இனிய காட்சி என்ற அளவில் நாம் அதை மறந்துவிட முடியாது.

நீர் வீழ்ச்சியால் நமக்கு விளையும் நன்மைகள் பல உண்டு. மலை மேல் வளர்ந்திருக்கும் மூலிகைகளோடு கலந்து விரைவாக வந்து விழும் தண்ணீரில் காலையிலும் மாலையிலும்



மின்சார உற்பத்தி நிலையம்

நன்றாகக் குளிப்பதால் நம் உடம்பில் உள்ள வெப்பம் தணிகிறது. உடம்பினுள் இருக்கும் உறுப்புக்கள் உரம் பெறுகின்றன. இரத்தத்தைப் பற்றியதும் தோலைப் பற்றியதுமான பல நோய் களும் சில நாட்கள் இந்த நீரில் மூழ்குவதால் குணமாகின்றன. உடற் குறையும் மனக் குறையும் போக்கி நன்மை புரியும் இயற்கை மருந்து

நீர் வீழ்ச்சியில் மூழ்குவதே ஆகும். பசி இல்லையே என்றும் வயிறு வலிக்கிறதே என்றும் ஓயாமல் தலை வலி வருகிறதே என்றும் வருந்தும் நோயாளிகளில் எவரும் நீர் வீழ்ச்சியில் மூழ்கி நன்மை பெறலாம்.

இக் காலத்தில் மின்சார சக்தி நமக்குப் பல விதங்களில் பயன் படுகிறது. மின்சார உற்பத்தி செய்ய நீர் வீழ்ச்சியும் ஒரு சிறந்த சாதனமாகும். நீர் வீழ்ச்சியை ஒரு அளவிலே கட்டுப் படுத்தி நீண்ட குழாய்கள் மூலம் ஆண்டு முழுவதும் நீர் விழும் படியாக அமைப்பார்கள். அவ் விதம் விழும் நீரின் வேகம் அடியில் அமைக்கப் பட்டுள்ள சில சக்கரங்களைச் சுற்றச் செய்யும். செப்புக் கம்பிகளால் சுற்றப் பட்ட பெரிய காந்தக் கட்டைகளை அமைத்து மேலே கூறப்பட்ட சக்கரங்கள் சுற்றும் போது மின்சார சக்தி எழும்பு கிறது. அதைத் தக்கபடி எடுத்துச் சேர்த்து பல இடங்களுக்கு அனுப்பலாம். இதனால் நாட்டுத் தொழில்கள் பல நடப்பதற்குரிய மின்சார சக்தியைப் பெருக்க பெருந் துணையாக நீர் வீழ்ச்சி அமைகிறது என்று நாம் அறியலாம்.

## கேள்விகள்

1. நீர் வீழ்ச்சி எப்படி உண்டாகும்?
2. தமிழ் நாட்டில் உள்ள சில நீர் வீழ்ச்சிகளின் பெயர்களைக் கூறுக?
3. நீர் வீழ்ச்சியால் உண்டாகும் இன்பம் என்ன?
4. நீர் வீழ்ச்சியால் மின்சாரம் வருவது எப்படி?

## பயிற்சி

I. வீழ்ச்சி, தேக்கம் என்பவை தொழிற் பெயர். வீழ் + சி, தேங்கு + அம், என்று பிரியும்.

பயில், சூழ், காண், என்ற பகுதிகளிலிருந்து தொழிற் பெயர் எழுதுக.

வீங்கு, ஏங்கு, தீங்கு, என்ற பகுதிகளிலிருந்து தொழிற் பெயர் எழுதுக.

II. நீர் வீழ்ச்சி இனிய காட்சி அளிப்பதோடு அதில் மூழ்குவதால் உடம்பிற்கு நன்மையும் அளிக்கிறது. இந்த வாக்கியத்தை இரண்டாகப் பிரிக்கலாம். நீர் வீழ்ச்சி இனிய காட்சி அளிக்கிறது. அதில் மூழ்குவதால் உடம்பிற்கு நன்மையும் அளிக்கிறது.

பின் வரும் வாக்கியங்களை இவ்விதமே பிரித்து எழுதுக.

1. காலையில் விளையாடுவது மனத்திற்கு மகிழ்ச்சி தருவதோடு உடம்பையும் உறுதி ஆக்குகிறது.
2. காலம் அறிந்து வயலில் உழைப்பது வயலை அழகாய் வைத்திருப்பதே யன்றி அறுவடைக் காலத்தில் நல்ல பலனையும் தருகிறது.

# 11. இயற்கைக் காட்சிகள்

| | | |
|---|---|---|
| வீழ்வது | தாழ்வது | சொக்கும் |
| வேய்வது | சிறக்கும் | பேரின்பம் |
| சிலிர்ப்ப | பூரணம் | வானகம் |

1. புல்லில் பனித்துளி வீழ்வதும்—காலையில்
பொன்னின் கதிர் சில தாழ்வதும்

சொல்லிற் குறிக்கவும் கூடுமோ—அழகு
சொக்கும் இயற்கையின் காட்சியே.

2. கடலின் அலைகள் மேற் பாய்வதும்—அங்கு
கதிரின் ஒளியலை வேய்வதும்

அடடா என்ன அழகப்பா !—அதுபோல்
ஆனந்தம் தருவ தொன்றுண்டோ ?

3. மேகங்கள் கூடி நடப்பதும்—வானில்
மின்னி இடி பட படப்பதும்

காகங்கள் ஓடி மறைவதும்—கண்ணைல்
கண்டவர் உள்ளம் மகிழுமே.

4. மேற்கிலே சூரியன் தங்கவே—பற்பல
மேகம் கிழக்கில் விளங்கவே

தோற்றுமே வானவில் அப்பப்பா !—அந்தத்
தோற்றத்தை எப்படிச் சொல்வதே.

5. பச்சைப் பயிருனல் நெல் வயல்—தோன்றும்
பசுமை யழகினைக் காண்பமே

பச்சை மறந்து பழுத்ததும்—பொன்னே
பரவும் அழகினைக் காண்பமே.

6. கொடிகளில் பூக்கள் மலருமே—அவை
கொட்டும் அழகை யென் சொல்வதே !

செடிகளில் காய்கள் சிறக்குமே—அந்தச்
சேர்த்தி அழகை என் சொல்வதே.

7. புல்லந் தரையிலே இல்லையோ—மக்கள்
புத்தி மயங்கும் பேரின்பமே

மெல்ல நடந்து குழந்தையும்—அங்கு
மேனி சிலிர்ப்பச் சிரிக்குமே.

8. மலைகளில் தோன்றும் அழகினை—யாரே
வாயால் அளப்பது வல்லவர் ?

மலையில் அருவியும் உண்டென்றால்—அங்கு
வாழ்வை மறப்பது மெய்யன்றோ ?

9. வான முழுவதும் மீன்களாய்—நன்கு
வந்ததோர் காட்சி யென் சொல்வதே

வானகம் பூரண சந்திரன்—தோன்றில்
மனமு மகிழா வுயிருண்டோ.

## கேள்விகள்

1. மலையில் உள்ள காட்சி என்ன ?
2. காலையில் காணும் காட்சி என்ன ?
3. வானவில் எப்பொழுது வரும் ?

## பயிற்சி

பாட்டில் தமிழ் நடை வசனம் போல் இருப்பதில்லை. மாறியும் இருப்பதுண்டு. வசன முறைக்கு மாறுவது அங்கியம் ஆகும்.

1. தோற்றுமே வானவில் அப்பப்பா ! பாட்டு நடை. வானவில் தோற்றுமே அப்பப்பா! வசன நடை.
2. புல்லந் தரையிலே இல்லையோ, மக்கள் புத்தி மயங்கும் பேரின்பமே! பாட்டு நடை. மக்கள் புத்தி மயங்கும் பேரின்பம் புல்லந் தரையில் இல்லையோ ! வசன நடை.

# 12. சிற்பக் கலை

| | | |
|---|---|---|
| **சிற்பக் கலை** | **படைப்பு** | **சிற்பி** |
| **வன்மை** | **புகட்டு** | **நுட்பம்** |
| **பலிப்பது** | **கலைஞன்** | **ஆலயம்** |
| **புராணம்** | **இதிகாசம்** | **உருவச்சிலை.** |

மனதைக் கவரும் கலைகளில் சிற்பக் கலை ஒன்றாகும். கடவுள் படைப்பில் உள்ள அழகுத் தோற்றங்களை மனிதன் கண்களால் கண்டதும்

தானும் சில அழகு உருவங்களைப் படைக்க நினைக்கிறான். அவன் நினைவிறல் வளர்ந்த உருவங்களைக் கல்லிலும் செம்பிலும் அமைக் கிறான். அவ்விதம் வளர்ந்ததே சிற்பக் கலையாம்.

இயற்கையில் வன்மையின் உருவமாய் அமைந்த கருங் கல்லை நுட்பமான வேலைப்பாடு களுக்கு உதவும்படி செய்து வைத்த சிற்பியின் கைத் திறமையைப் புகழாதிருக்க முடியாது. கருங்கற் சிலையின் விழிகளின் ஒளியை விளக்கு கிறான்; முகத்தின் அழகைத் தெளிவாகக் காட்டு கிறான். மார்பின் அகலத்தையும் தோளின் பெருமையையும் நன்றாகப் புகட்டுகிறான். விரல் நகத்தில் உள்ள கூர்மையையும் விடாமல் விளக்குகிறான்.

ஆறு அடி உயரம் உள்ள கருங்கல் ஒன்றை நாமும் பார்க்கிறோம்; ஒரு சிற்பியும் பார்க்கிறான். நம் கண் முன் அது கல்லாகவே தோன்றுகிறது. சிற்பியோ அக் கல்லின் தன்மையைத் தெரிந்து கொண்டு தான் விரும்பும் உருவத்தை அக் கல்லில் அமைக்க முடியும் என்று கனவு காண்கிறான். அவன் கண்ட கனவு சில நாட்களிலே பலிப்பதும் உண்டு. எந்தக் கலையும் உருவம் பெற்று வளர்வதற்குக் கலைஞன் மனத்தின் ஆழமே அடிப்படையாம். கலைப் பண்பும் கலையுள்ளமும் இல்லாத மக்கள் ஒரு சிறு கருங் கல்லைக் குழல் ஊதும் கண்ணன் ஆக்கும் அழகை எப்படி அறிய முடியும்?

நம் நாட்டுச் சிற்பங்கள் மலைப் பாறைகளிலே பிறந்தன. ஆலயங்களிலே வளர்ந்தன. இன்று நம் வீடுகளையும் அழகு செய்ய வந்து விட்டன. பாறைகளில் தோன்றியபோது சிற்பி கண்ட கனவு ஒரு வகைக் காட்சி கொடுக்கும்படி படைக்கப் பட்டது. ஆலயங்களுக்கு வந்த பிறகு முழு உருவமும் உயரமும் பருமனும் எந்தெந்த அளவில் அமைய வேண்டுமோ அப்படி அமைக்கப்பட்டன.



மாமல்லபுரச் சிற்பங்கள்

மாமல்லபுரச் சிற்பங்களும் அஜந்தா, எல்லோரா, இவ் விடங்களிலுள்ள பழமையான சிற்பங்களும் பாறைகளிலே நம் நாட்டில் பிறந்தவை. கோயில் களில் காணும் பெரும் சிற்பங்கள் எல்லாம் முழு உருவம் பெற்றுப் பின் வந்தவை.

நம் நாட்டுச் சிற்பம் இயற்கையில் கண்ட காட்சிகளை அப்படியே அமைக்கப் பிறந்ததில்லை. இயற்கையில் இல்லாத பொருள்களையும் சிற்பி தன் கனவிலே கண்டு படைத்த சிற்பங்கள் பல நம் கோயில்களில் உண்டு. புராணங்களில் வரும் கதைகளுக்கெல்லாம் சிற்பம் அமைத்தபோது அங்கு புராணப் புலவர் கற்பனையிலே வந்த உருவங்களை யெல்லாம் சிற்பிகளும் படைத்தார்கள்.



புராண இதிகாசங்களில் வரும் அழகிய உருவங்களைக் கதைகளால் அறிந்த வண்ணம் சிற்பம் அமைக்க முயன்றும் ஒவ்வொரு சிற்பியும் செய்து வைத்திருக்கிறான். இவ் வகையான சிற்பங்கள் நம் நாட்டிற்கே உரியவையாம்.

மார்பில் ஓடும் வரைகளையும் வயிற்றின் வளைவுகளையும் நகத்தின் கூர்மையையும் தெளிவாகச் சிலையில் காட்டும் திறமை நம் நாட்டுச் சிற்பிக்கு உண்டு. சிற்பியின் கைகளால் கருங்கற் சிலை எத்தனை அழகு பெற்றது என்பதை நம் நாடெங்கும் உள்ள கோயில்களில் பார்க்கலாம். இக் கலை கருங்கல்லோடு நின்று விடவில்லை. வெண்கலத்திலும் செம்பிலும் வெள்ளிலும் அழகிய உருவங்களை வார்ப்பாக அமைக்கவும் துணையாயிற்று. ஐம் பொன் சிலைகளும் அழகே உருவமாகப் பிறந்தன. களி மண்ணிலே அச்சுச் செய்து பிறகு உலோகத்தை உருக்கி வார்த்து சிலை செய்வது ஒரு முறையாகும். இக் கலை குலத் தொழிலாக உள்ள சில குடும்பங்களும் இன்னும் உள்ளது.

இக் காலத்தில் சலவைக் கல்லாலும் வெண்கலத்தினாலும் பெரு மக்களின் உருவச் சிலைகள் அமைக்கும் வழக்கம் ஏற்பட்டிருக்கிறது. இது மேனாட்டார் வழியைப் பின்பற்றி நம் நாட்டிற்குப் புதிய முறையைத் தருகிறது. மனித உருவமும் இயற்கைக்குப் பொருத்தமாக அமைவதை இந்த உருவச் சிலைகளில் காண்கிறோம். இச் சிலைகளிலும் உயரம், பருமன் முதலிய அளவுகளை சிற்பி மனம்போல வளர்ப்பது உண்டு. எத்தனை வகையாக இருந்தாலும் சிற்பக் கலை நம் மனதிற்கு இன்பம் விளைப்பதே ஆகும்.

## கேள்விகள்

1. சிற்பக் கலை பிறந்து வளர்ந்தது எப்படி?
2. கல்லிலே சிற்பம் முதலில் எப்படி அமைந்தது?
3. உலோகங்களில் சிற்பம் அமைவது எப்படி?
4. மேனாட்டு முறைப்படி சிற்பம் எப்படி அமையும்?

## பயிற்சி

I. பெயர்ச் சொற்களை எடுத்து எழுதுக.

1. சிற்பக் கலை மனத்தை மகிழ வைக்கும்.
2. கல்லையும் செம்பையும் சிற்பி சிற்பம் ஆக்கினான்.
3. விலங்கு நடந்து வருவது போல தோன்றும்.

II. வினைச் சொற்களை எடுத்து எழுதுக.

1. சிற்பி கருங் கல்லைப் பார்க்கிறான்.
2. வன்மையை மென்மை ஆக்குவோம்.
3. உருவச் சிலை அமைக்கிறோம்.

III. பெயர்ச் சொற்களுக்கு ஏற்ற வேற்றுமை உருபு வைக்க.

1. நான் பாடம் படிக்கிறேன்.
2. கோடரி விறகு வெட்டலாம்.
3. கோயில் சிற்பம் காண்கிறோம்.

# 13. குடிசைக் கைத்தொழில்

| | | |
|---|---|---|
| ஓய்வு | வறுமை | நிகழ |
| நிகழும் | ஊதியம் | திரட்ட |
| நோக்கம் | வீண்போக்க | புத்துயிர் |
| பெரும்பாலும் | கைத்தறி | போராடி |

நாட்டுப் புறத்தில் வாழும் குடிமக்கள் பயிர்த் தொழிலில் கழிந்த நேரம் போக ஓய்வு காலங்களில் தமது குடிசைகளில் செய்யும் கைத்தொழிலே குடிசைக் கைத்தொழிலாம். குடிசைகளில் பெரிய இயந்திரங்கள் வைக்க வேண்டிய இடம் இராது. பலர் சேர்ந்து தொழில் செய்யவும் இடம் இராது. ஒருவர் இருவர் திண்ணைகளில் அமர்ந்து செய்யத் தக்க சிறு தொழிலுக்கே இடம் உண்டு. ஆகவே குடிசைகளில் நிகழும் தொழில், ஆலைத் தொழில் போன்ற பெரும் பணச் செலவால் நடப்பதும் இல்லை; பெரும் ஊதியம் விளைப்பதும் இல்லை.

நம் நாட்டில் உள்ள நகரங்கள் நூற்றுக் கணக்கில் அடங்கி விடும். ஆனால் கிராமங்கள் ஆயிரக் கணக்கில் உண்டு. நாட்டுப் புறத்திலேயே மிகுதியான மக்கள் வாழ்கிறார்கள். நகர மக்களில் பலரும் ஆலைத் தொழில்களால் பெரும் பணம் திரட்டலாம். நாட்டு மக்கள் அவ்விதம் பெருந் தொழில் செய்யவும் பெரும் பணம் தேடவும் வழி இல்லை.

கிராம மக்கள் தமக்கு வேண்டிய சிறிய பொருள்களுக்காக அவர்கள் குடிசைகளில் சில தொழில்களை அவர்களே செய்து கொள்ளலாம். அத் தொழில்களால் கிடைக்கும் பொருள்களை அவர்கள் நகரங்களில் விற்றுப் பணம் தேட வேண்டும் என்ற நோக்கம் பெரும்பாலும் இராது. அவர்கள் வாழ்வின் அவசியத்திற்கு வேண்டிய பொருள்களையே பெரும்பாலும் செய்து கொள்ளுவார்கள்.



வேளாண்மையில் பாடு படுகின்ற நாட்டு மக்களுக்கு சில மாதங்கள் ஓய்வு கிடைக்கலாம். அந்த ஓய்வு காலத்தை அவர்கள் வீண் போக்காது, தங்களுக்கும் பிறருக்கும் உதவும்

பொருள்களைச் செய்யலாம். இத் தொழில்களைச் செய்வதற்காக அவர்கள் தங்கள் இருப்பிடங்களை விட்டு வெளியே போக அவசியம் இல்லை.

குடிசைக் கைத்தொழில்கள் கிராமங்களின் நிலைமைக்கு ஏற்றபடி வெவ்வேறாக இருக்கும். கோரைப் புல் நன்றாக வளர்ந்து கிடைக்கும் ஊர்களில் கோரைப் பாய் பின்னலாம். மூங்கில் மிகுந்த ஊர்களில் மூங்கிற் பாய், கூடை முதலியவை செய்யலாம். நல்ல மண் கிடைக்கும் ஊராக இருந்தால் பல வகையான மண் கலங்கள் செய்யலாம். தென்னை மரங்கள் மிகுதியாய் உள்ள இடமானால் தென்னை நார், மட்டை, ஓடு முதலியவற்றால் ஆகும் தொழில்களைச் செய்யலாம். வாழை மரம் மிகுந்த இடமானால் வாழைப்பட்டை, வாழை நார முதலியவைகளால் செய்யத் தக்க தொழில்களைச் செய்யலாம்.

கோழி, வாத்து, புறா தேனீ முதலியன வளர்ப்பதாலும் நாட்டு மக்கள் பொருள் தேடலாம். தேனீயின் குணத்தை அறிந்து, தேன் கூடுகளை மரத்தால் அமைத்து வைத்து, தேனீக்கள் அக் கூடுகளில் வாழும்படி செய்து தேன் திரட்டுவதும் ஒரு சிறந்த குடிசைத் தொழிலாம்.

மகாத்மா காந்தி நூல் நூற்பது, கைத்தறி நெசவு என்ற இரண்டையும் சிறந்த தொழில்களாகக் கருதினர். நூல் நூற்கும் இராட்டினம் இப்

பொழுது புத்துயிர் பெற்றிருக்கிறது. கைத்தறியும் உயிர் பெற்று வாழவே ஆலைகளோடு போராடிக் கொண்டிருக்கிறது. இத் தொழில் கிராமங்களில் நடந்தால் கிராமங்கள் வறுமை இல்லாமல் வாழ வழி உண்டாகும். காகிதம் செய்யும் தொழிலும் சிறிய அளவில் குடிசைகளில் நிகழத் தக்கதே.

இந் நாளில் எல்லோரும் சோப்புகளை விரும்புகிறார்கள். சோப்பு செய்ய பெரிய தொழிற்சாலை வேண்டாம். கிராமங்களில் குடிசைக் கைத் தொழிலாகவே எவ் வகையான சோப்பையும் செய்யலாம். அவற்றைச் செய்து நகரங்களுக்கு அனுப்பிப் பொருள் திரட்டலாம். ஸ்விட்ஜர்லாந்தில் உள்ள கிராம மக்கள் தங்கள் குடிசைகளில் கடிகாரம் செய்கிறார்கள். பிற நாட்டார்போல் நாமும் செல்வத்தால் உயர வேண்டுமாயின் நாம் ஆலைத் தொழில்களை வளர்ப்பதோடு நின்று விடாமல் குடிசைக் கைத்தொழில்களையும் முறைப்படி வளர்க்க வேண்டும்.

## கேள்விகள்

1. குடிசைக் கைத்தொழில்கள் சில கூறுக.
2. மகாத்மா காந்திக்கு விருப்பமான தொழில் என்ன?
3. குடிசைக் கைத்தொழில்களால் நன்மை என்ன?

### பயிற்சி

I. குடிசை + கைத்தொழில் = குடிசைக் கைத்தொழில் என்று சேரும்.

சேர்த்து எழுதுக :—

| | | |
|---|---|---|
| பலா + பலகை | கிளி + குஞ்சு | இலை + கள்ளி |
| இடை + சிறுமி | வலை + சிறுவன் | மர + தட்டு |

II. இ + வண்ணம். = இவ்வண்ணம்
இ + பொருள் = இப்பொருள்
இ + நாள் = இந்நாள்

இவ்விதம் சேர்த்து எழுதுக :—

| | | |
|---|---|---|
| எ + படி | அ + பொழுது | இ + சிலை |
| அ + சிற்பம் | இ + பொருள் | எ + காலம் |
| எ + வலை | இ + மனை | அ + வயல் |

## 14. பண்டித நேருவின் செய்தி

| | | |
|---|---|---|
| சந்தர்ப்பம் | அரசியல் | அமைப்பு |
| கொள்கை | உள்ளம் | துரோகம் |
| விரோதம் | சோதனை | வெட்கம் |
| துக்கம் | ஆடம்பரம் | மனச்சாட்சி |
| லட்சியம் | சிந்திக்க | போதனை |

[1947-ம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 15-ம் தேதி நம் நாடு சுதந்திரம் அடைந்தது. மறு ஆண்டில் அந்த நாளில் சுதந்திர தினத்தைக் கொண்டாடும் போது பண்டித ஜவாஹர்லால் நேரு நாட்டு மக்களுக்கு ஒரு

செய்தி விடுத்தார். அதில் நாட்டின் நிலைமையையும் மக்களின் பொறுப்பையும் அவர் விளக்கிக் கூறினார். அவர் விடுத்த செய்தியின் சுருக்கம் அரசியலார் வெளியிடும் 'சென்னைச் செய்திப்' பதிப்பில் வெளிவந்துள்ளது. அதை அனுமதி பெற்று கீழே கொடுக்கப் பட்டிருக்கிறது.]

**"மகாத்மாவின் போதனைகளை மறக்காதீர்கள். இந்தியாவின் சேவைக்கு முன் வாருங்கள்."**

சென்ற ஆண்டு ஆகஸ்டு மாதம் 15ம் தேதி பொழுது விடிந்தது. நாம் அடைந்த வெற்றியை மகிழ்ச்சியோடு கொண்டாடினோம். நாட்டுப் பிரி



வினையால் அப்பொழுது தோன்றிய மனக் கவலை இருக்கத்தான் செய்தது. சுதந்திர சூரியன் அடிவானத்தில் கிளம்புவதை எதிர் பார்த்து இருந்தோம். சுதந்திரத்தினால் கிடைக்கும் சந்தர்ப்

பங்களையும் எதிர் நோக்கி இருந்தோம். வானிலே கிளம்பிய சுயேச்சைக் கதிரவனை கரு மேகங்கள் சூழ்ந்து ஒளியை மறைத்து விட்டன. ஆகவே விடிந்தும் விடியாததுமான நிலையில் நாம் இருக்கிறோம்.

சுதந்திரம் என்பது அரசியல் கருத்துக்கள் அல்ல; புதிய அரசியல் அமைப்புக்களும் அல்ல. இவற்றைவிட முக்கியமாகக் கருதப்படும் பொருளாதாரக் கொள்கையும் அல்ல. அது நமது உள்ளத்தையும் மனத்தையும் ஒட்டியது. நம் உள்ளத்திலே குரோதம், விரோதம் இவை இடம் பெற்றிருந்தாலும், மனக்குறைகள் இருந்தாலும் சுதந்திரம் இல்லை என்றே சொல்லலாம்.

சென்ற ஆண்டில் நமக்குப் பல சோதனைகள் ஏற்பட்டன. **தேசத்தின் தந்தை** கொலை செய்யப் பட்டார். நாம் வெட்கமும் துக்கமும் அடையக் கூடிய காரியம் இதை விட வேறொன்றும் இல்லை. என்ன என்னவோ ஏற்பட்டிருந்தும் கடந்த ஆண்டில் நாம் வெகு தூரம் முன்னேறி இருக்கிறோம். மறு ஆகஸ்டு 15-ம் தேதியும் பிறந்து விட்டது.

இந்த நற் தினத்தை நாம் முறையாகவே கொண்டாடுகிறோம். நாம் இக் கொண்டாட்டத்தை ஆடம்பரமாகக் கருதக்கூடாது. நாம் நம் மனச் சாட்சியை அறிய வேண்டும். நமது லட்சியத்திற்கு

மறுபடியும் தம்மைத் தயாராக்க வேண்டும். நாம் செய்தவற்றைப் பற்றி பெருமைப் படாமல், செய்ய வேண்டியதைப் பற்றிச் சிந்திக்க வேண்டும். நாம் செய்துள்ள தவறுகளுக்குக் கவலைப் படவேண்டும். தங்கள் நிலைமை உயரும் என்று நம்மைப் பொருமையுடன் எதிர் நோக்கியிருந்த பாமர மக்களைப் பற்றி யோசிக்க வேண்டும்.

இந்திய நாட்டின் வளங்கள் அளவற்றன. அவை பொது நன்மைக்காகச் சரிவரப் பயன் படுத்தப் பட்டால் நாடு செல்வமும் பெருமையும் மிகுந்து காணும். இந்த மாப்பெரும் வேலைக்காக நமது முழு பலத்தையும் உபயோகிப்போமாக. மகாத்மா காந்தியடிகள் நமக்குக் கற்பித்த பெரும் போதனைகளை நாம் மறவாது இருப்போமாக. அவருடைய கொள்கைகளையும் போதனைகளையும் நாம் மறந்தால், நமது தேசத்தையும் லட்சியத்தையும் காட்டிக் கொடுத்தவர்கள் ஆவோம்.

## குறிப்பு

**நாட்டின் பிரிவினை** :—ஆங்கிலேயர் நம் நாட்டை விட்டு வெளியேறுமுன்பு இந்தியா என்றும் பாகிஸ்தான் என்றும் நம்நாட்டை இரு பிரிவுகளாகப் பிரித்தார்கள்.

**தேசத்தின் தந்தை** கொலை செய்யப்பட்டது :—மகாத்மா காந்தியை தேசத்தின் தந்தை என்றும் அழைக்கிறோம். டில்லியில் ஒரு பிரார்த்தனைக்கூட்டத்தில் அவர் பேசும் போது ஒரு வஞ்சகன் அவரைச் சுட்டுக் கொன்றான். **காந்தியடிகளின் போதனைகள்** :—எப்பொழுதும் உண்மையே பேசுவதும், எவருக்கும் தீங்கு செய்யாமல்

இருப்பதும், காந்தியடிகளின் முக்கிய கருத்துக்களாக இருந்தன. அவர் கடவுள் பக்தியும் நாட்டுப் பற்றும் கொண்டதோடு எவரிடமும் அன்பும் காட்டி வந்தார், அவர் கொள்கைகள் பெரும்பாலும் அவருடைய போதனைகளாக இருந்தன.

**கேள்விகள்**

1. விடிந்தும் விடியாத நிலைமை என்ன ?
2. சுதந்திர தினத்தில் என்ன சிந்தனை கொள்ள வேண்டும் ?
3. தேச முன்னேற்றத்திற்கு என்ன செய்ய வேண்டும் ?

# 15. ஒற்றுமையின் வன்மை

| | | |
|---|---|---|
| **ஒற்றுமை** | **வெற்றி** | **வேற்றுமை** |
| **தோல்வி** | **மதிக்கும்** | **பெருமை** |
| **சிறுமை** | **புகழ்** | **புகழ்** |
| **முதலாளி** | **தொழிலாளி** | **கொழுத்து** |
| **தானியம்** | **ஆராய்ந்து** | **இணங்க** |

ஒற்றுமை வெற்றி தரும். வேற்றுமை தோல்வி தரும். ஒரு குடும்பத்தி லுள்ளவர்கள் ஒற்றுமையோடு வாழ்ந்தால் ஊராரிடம் புகழும் பெருமையும் கிடைக்கும். ஒற்றுமை இழந்தால் பிறர் இகழும்படி சிறுமை அடைவார்கள். ஒரு கிராம மக்கள் ஒற்றுமையோடு வாழ்ந்தால் அயலில் உள்ள கிராமத்தினர் மதிக்கும் பெருமை அடைவார்கள். இந்த உண்மை ஒரு நாட்டிற்கும் பொருத்தமாகும்.

நம் நாட்டில் உள்ள பல கோடி மக்களும் நாம் இந்திய மக்கள் என்ற ஒற்றுமை மனப் பான்மை கொண்டால் நம் வன்மையைக் கண்டு உலகமே நடுங்கும். நாமே இந்து, முகம்மதியர், கிறிஸ்தவர் என்று மதம் காரணமாகவும், உயர்ந்தவர், தாழ்ந்தவர் என்று நிலைமை காரணமாகவும், முதலாளி, தொழிலாளி என்று தொழில் காரணமாகவும், பணக்காரர், ஏழைகள் என்று பணம் காரணமாகவும், ஒருவரை ஒருவர் வெறுத்து எதிர்த்து அழிக்க எத்தனித்தால், விரைவில் நம் நாட்டின் வன்மை குறைந்து போகும். நாம் தலை நிமிர்த்து உலகத்தில் நிற்க வேண்டி நமக்குள் ஒற்றுமை யுணர்ச்சி வளர வேண்டும். ஒற்றுமையால் நாமும் நமது நாடும் நமது வழி வருவோரும் நன்மை பெறுவது உறுதியே யாகும்.

ஒற்றுமையின் வன்மையை விளக்கும் பல கதைகள் உண்டு. அவற்றுள் சிலவற்றை நாம் அறிவது நல்லது. ஒரு காட்டில் நான்கு எருதுகள் புல் மேய்ந்து, கொழுத்துத் திரிந்தன. ஒரு சிங்கம் வெகு நாட்களாக அந்த எருதுகளைக் கொன்று தின்ன நினைத்தது. சிங்கம் நெருங்கும் போது எருதுகள் எல்லாம் ஒற்றுமையாகத் திரண்டு வந்து பாய்ந்ததால், சிங்கம் அவற்றைக் கொல்ல முடியாமல் பயந்து ஓடியது. சில நாட்களில் எருதுகள் ஒற்றுமை இழந்து வாழவே, அதை அறிந்த சிங்கம் அவற்றை தினம் ஒவ்வொன்றாகக் கொன்று தின்று மனம் குளிர்ந்தது.

இக் கதையால் விளங்கும் உண்மை என்ன? ஒற்றுமை இழந்ததால் எருதுகள் உயிரையும் இழக்க நேர்ந்தன என்று அறிவோம்.

ஒரு புறாவும் அதன் கூட்டமும் காட்டு வழியே பறந்து வந்தன. ஓரிடத்திலே தரையில் தானியங்கள் சிதறிக் கிடப்பதைப் பார்த்தன. பசியோடு இருந்ததால் எல்லாப் புறாக்களும் அத் தானியங்களைத் தின்ன விரும்பின.



தலைமைப் புறா "இத் தானியங்கள் இங்கு விளைந்தவை இல்லை. யாரோ நம்மை வலை வைத்துப் பிடிக்க வேண்டி இறைத்திருக்கிறார்கள். நாம் இவற்றை உண்ண நினைப்பது நமக்கே கேடு விளைக்கும்", என்று சொல்லியது. ஒரு சிறு புறா "நாம் இப்படியே ஒவ்வொன்றையும் ஆராய்ந்து

கொண்டிருந்தால் நமக்கு உணவே கிடைக்காது. நல்ல உணவு இங்கு கிடைக்கும்போது நாம் உண்ணு திருக்கலாமா?" என்று கேட்டது. இளம் புறுவின் சொல்லைக் கேட்டு மற்றப் புறாக்களும் கீழே இறங்கி அத் தானிய மணிகளைத் தின்னும் போது, கீழே விரித்திருந்த வலையில் சிக்கிக் கொண்டன. தலைமைப் புறா வெளியில் பறந்து கொண்டே யிருந்தது. முடிவில் அது தன் கூட்டத்தை விடுவிப்பதற்காக ஒரு வழி செய்தது.

"தோழர்களே, வலையிலே நானும் வந்து விடுகிறேன். நான் தனியே இருந்து பயன் இல்லை. இப்பொழுதாவது நான் சொல்லும் வார்த்தையை நீங்கள் கேட்க வேண்டும். நாம் எல்லோரும் ஒரே மனதாகப் பறக்க முயலுவோம். அதனுல் முளைகளிலிருந்து இந்த வலையின் கட்டுக்கள் விலகி நாம் வலையுடன் பறந்து செல்வோம். வேடன் நம்மைப் பிடிக்க முடியாமல் ஏமாறுவான். சிறிது தூரத்திலே எலி ஒன்று இருக்கிறது. எனக்கு அது வெகு நாட்களாகப் பழக்கம் உள்ள நண்பன் ஆகும். நம் கால்களில் சிக்கி யிருப்பதை அந்த எலி விரைவில் அறுத்து நம்மைக் காப்பாற்றும்," என்று தலைமைப் புறா கூறியது.

எல்லா புறாக்களும் அதற்கு இணங்கி ஒன்றாகப் பறந்தன. வேடன் புறாக்களை இழந்து வலையையும் இழந்து வீட்டிற்குத் திரும்பினன். இக் கதை அறிவிக்கும் உண்மை என்ன? ஒற்றுமையினுல் உயிரும் தப்பலாம் என்று அறியலாம்.

இனி நம் நாட்டுச் சரித்திரத்தையும் கவனிப்போம். முன்னாளில் அலெக்சாண்டர் என்ற மேனாட்டு அரசர் நம் நாட்டில் படையெடுத்து வந்த காலத்தில் நம் நாட்டில் இருந்த மன்னர்கள் ஒற்றுமையுடன் அவரை எதிர்க்கவில்லை. ஒருவரே தனிமையில் எதிர்த்து நின்று தோல்வி பெற்றார். அதனால் நம் நாட்டிற்கே சிறுமை விளைந்தது. முகம்மது கோரி என்பவர் பல தடவைகள் படையெடுத்து வந்த போதும் நாட்டு மன்னர்களிடம் ஒற்றுமை இல்லை. வேற்றுமையின் காரணமாக நாம் நம் நாட்டை இழந்தோம். முன்னூறு ஆண்டுகளின் முன்பு வியாபாரத்திற்காக இங்கு வந்த ஆங்கிலேயர் நம் நாட்டைக் கைக் கொண்டு ஆண்டதும் நமக்குள் ஒற்றுமை இல்லாதிருந்த குறையால்தானே. இனியாவது நாம் இன்று பெற்றிருக்கும் சுதந்திரத்தை உறுதியுடன் காப்பாற்றிக் கொள்ளும் பொருட்டு மன ஒற்றுமையோடு வாழ்வோமாக.

## கேள்விகள்

1. எருதுகள் ஏன் இறந்தன ?
2. புறாக்கள் உயிர் தப்பியதற்குக் காரணம் என்ன?
3. அலெக்சாண்டர் வென்றதற்குக் காரணம் என்ன ?
4. நம் சுதந்திரத்தைக் காப்பாற்றிக் கொள்ள நாம் என்ன செய்ய வேண்டும் ?

### பயிற்சி

I. வெற்றி × தோல்வி — எதிர் மொழியாகும்.

பின்வரும் சொற்களுக்கு எதிர் மொழி கூறுக.
செல்வர், கற்றவர், பெரியவர், உயர்ந்தவர், சோம்பல், முதலாளி, உழைப்பாளி, நன்மை, இரவு, இன்பம்.

II. குணத்தை உணர்த்தும் பெயர் குணப் பெயர் ஆகும்.

(உ—ம்.) நன்மை, தீமை.

சில குணப் பெயர்கள் எழுதுக.

அளவு குறிக்கும் பெயர் அளவுப் பெயர்.

(உ—ம்.) கால், அரை, ஒன்று, முழம்.
சில அளவுப் பெயர்கள் எழுதுக.

## 16. தமிழ் மூதாட்டி

| | | |
|---|---|---|
| மூதாட்டி | முதுமை | இளமை |
| சங்கநூல் | அதிகமான் | சூட்டி |
| சிற்றரசர் | வரவேற்று | கனி |
| தூது | தொண்டைமான் | உலை |

தமிழ் மூதாட்டி என்ற புகழ்ப் பெயர் ஔவையாருக்கே உரியது. நம் தமிழ் நாட்டில் வாழ்ந்த புலவர்களில் மிகவும் கிழப் பருவம் வரை வாழ்ந்து தமிழ்ப் பணி பூண்டிருந்த பெருமை ஔவையாருக்கு உண்டு. ஔவை என்ற சொல்லே பாட்டி என்ற பொருள் தரும். இவரை அறிந்த மனிதர் எல்லோரும் இவரது முதுமைப் பருவத்தையே

நினைக்கும்படி இவர் அக்காலத்தில் இருந்திருக்க வேண்டும். இவர் பெற்றோர் யார் என்பதும் இவர் இளமையில் எவ்விதம் வாழ்ந்தார் என்பதும் இன்றளவும் நாம் சரிவர அறிய இயலவில்லை.

சங்கப் புலவர் வாழ்ந்த காலத்தில் ஔவையார் இருந்தார் என்று மட்டும் உறுதியாகக் கூறலாம். ஔவையார் பாட்டுக்கள் இன்றும் சங்க நூல்களில் இருக்கின்றன. ஆத்திசூடி, கொன்றை வேந்தன், மூதுரை என்ற பல நீதி நூல்களை ஔவையார் இயற்றியதாக நாம் நினைக்கிறோம்.

ஔவையாரைப் பற்றிப் பல கதைகள் வழங்குகின்றன. அக் கதைகளின் உண்மை எவ்விதம் ஆயினும் அவற்றால் சில நீதிகள் விளங்குவதால் நாம் அவற்றைப் படித்து இன்பம் அடைகிறோம். சங்கப் புலவரான ஔவையார் செய்த செயல்களை சங்கப் பாட்டுக்களால் அறிகிறோம். மற்றக் கதைகள் இவர் பெயரைச் சுற்றி வளர்ந்து நாம் என்றும் இவருடைய பெருமையை மறவாதிருக்க உதவுகின்றன.

ஔவையார் காலத்திலே அதிகமான் என்ற சிற்றரசர் ஒருவர் தகடூர் என்ற ஊரிலே வாழ்ந்தார். அவர் ஔவையாருடைய அன்பிற்கு உரியவராக இருந்தார். அவர் ஒருநாள் தமக்குக் கிடைத்த அருமையான நெல்லிப் பழம் ஒன்றை அதன் பெருமையை உரையாமல் ஔவையாருக்குக் கொடுத்தார். நெடுங்காலம் உயிர் வாழ உதவும்

அக் கனியின் சிறப்பை அறிந்த ஔவையார் அவ்வரை மனமாரப் புகழ்ந்து பாடினர்.

அக் காலத்திலே தொண்டைமான் என்ற மற்றொரு சிற்றரசர் ஒருவர் இருந்தார். அவர் அதிகமானைப் பகைத்தார். ஔவையார் அவரிடம் தூது போனர். தொண்டைமான் ஔவையாரை



மரியாதையோடு வரவேற்று, தனது ஆயுத சாலையைக் காட்டிக் கொண்டே வந்தார். அங்கிருந்த ஆயுதங்களை எல்லாம் பார்த்த ஔவையார் ஒரு அழகான பாட்டுப் பாடினர். அப் பாட்டின் கருத்து நாம் எப்போதும் நினைக்கத் தக்கது. ஔவையார் பெருமை அதனல் நன்ருக விளங்கும்.

"ஆ! என்ன அழகு! என்ன பளபளப்பு! ன்ன கூர்மை! என்ன நேர்மை! இங்கு

இருக்கும் வேலும் வில்லும் அம்புகளும் ஒரு பெரிய கோட்டைக்குள்ளே காவல் மிக்க அரண் மனைக்குள் இந்த ஆயுத சாலையில் அடுக்கி வைக்கப் பட்டுள்ளன. இவை காம்பும் நுனியும் நெளியாமல் வளையாமல் மழுங்காமல் ஒடியாமல் எத்தனை அழகாய் உள்ளன! இவைகளுக்கு எண்ணெய் தடவி மாலை சூட்டி இருக்கும் அழகைத்தான் என்ன சொல்வேன்! ஆயுதங் களின் அருமை பெருமையை அறிந்த அரசர் தொண்டைமானே என்று உலகம் அறிய உரைப்பேன். ஏழைகளுக்குக் கூழைக் கொடுத்துத் தாமும் அவர்களுடன் கூழ் குடிக்கும் அரசனான அதிகமானுக்கு ஆயுதங்களில் மதிப்பே தெரியாது. தெரிந்திருந்தால் அவருடைய ஆயுதங்கள் எல்லாம் நுனி முறிந்து, ஓரம் வளைந்து, பிடி நெளிந்து, உருவமே மாறி, இருக்கவும் தகுதி இல்லாமல் கொல்லன் உலை வைக்கும் சிறு குடிசையிலே போய்க் கிடக்குமா? அவராவது உம்மைப் பகைப்பதாவது," என்று புன்னகை விளங்கும் முகத்தோடு சொன்னார்.

தொண்டைமான் ஔவையாருக்கு விடை கொடுத்து அனுப்பிய பிறகே அவர் கூறிய பாட்டின் கருத்திலுள்ள தம்முடைய சிறுமையை அறிந்தார்.

ஔவையார் இயற்றியுள்ள சிறு செய்யுள்கள் எல்லாம் நமக்கு நீதிகளை விளக்கக் கூடியவை யாகும்.

## கேள்விகள்

1. ஔவையார் தமிழ் மூதாட்டி என்ற பெயர் பெற்றது ஏன்?
2. ஔவையார் நீதி நூல் என்று எவற்றை அறிகிறோம்?
3. ஔவையார் தொண்டைமானிடம் கூறியதின் கருத்து என்ன?

## பயிற்சி

வாக்கியங்களைக் கேட்டவாறு மாற்றுக.

1. ஆயுதங்கள் தொண்டைமானால் அரண்மனையில் அடுக்கி வைக்கப் பட்டிருந்தன.
   **தொண்டைமான்** என்று தொடங்கி எழுதுக.
2. அரசர் புலவரால் புகழப் படுவர்.
   **புலவர்** என்று தொடங்கி எழுதுக.
3. தொண்டைமான் ஔவையாருக்கு ஆயுத சாலையைக் காட்டினார்.
   **காட்டப் பட்டது** என்று முடியுமாறு இவ் வாக்கியத்தை மாற்றுக.
4. காலையும் மாலையும் கடவுளைப் போற்றுவோம்.
   **கடவுள்** என்று தொடங்கி எழுதுக.
5. என்னால் பாடம் படிக்கப்பட்டது.
   **நான்** என்று தொடங்கி எழுதுக.

# 17. இரு வகைப் புலவர்

| | | |
|---|---|---|
| மெய்ம்மை | பொய்ம்மை | வாய்மை |
| அமுதம் | நஞ்சு | காவியம் |
| கவிதை | கோட்டம் | மாணிக்கம் |

1. மெய்ம்மைப் புலவரும் உண்டு—உலகில்
மெய்ம்மையைக் காட்டிலும் பொய்ம்மை அதி
பொய்ம்மைப் புலவரும் உண்டு—அவரே [கம்
போலிப் புலவர் பொய்க்காலப் புலவர்.

2. கற்றது கைம்மண் அளவே—இன்னும்
கல்லா துலகள வல்லவோ வென்றே
கற்ற புலவர் உரைப்பார்—பிறர்
கல்லாத நூலையும் கற்றதாச் சொல்வார்.

3. வள்ளுவர் வாய்மைப் புலவர்—அவர்
வாக்கில் அமுதம் வருவது காண்போம்
வள்ளுவப் போலிகள் உண்டு—அவர்
வாயிலே நஞ்சு வருவது காண்போம்.

4. கம்பரும் மெய்ம்மைப் புலவர்—அவர்
காவியம் இன்பக் கவிதையே யாகும்
கம்பரின் போலிகள் உண்டு—அவர்
காவியம் துன்பக் கவிதையே யன்றோ.

5. பாரதி நாட்டுப் புலவர்—அவர்
பாட்டிலே நாட்டன்பு கேட்டின்ப முறுவோம்
பாரதி போலிகள் உண்டு—அவர்
பாட்டிலே கோட்டமும் நீட்டமும் உண்டே.

6. அறிவின் கடலாம் புலவர்—ஐயோ!
ஆதர வின்றியே போதலும் உண்டு
அறிவிலாப் போலிப் புலவர்—உலகர்
ஆதரவாலே செழிப்பதும் உண்டு.

7. உள்ளூற வெள்ளது தங்கம்—அதன்
உண்மையை மண்ணும் மறைப்பது காண்
வள்ளுவர் போன்ற புலவர்—எந்த [போம்
மண்ணுள் மறைந்தாலும் மாணிக்கம்
[அன்றே.

8. பொய்ம்மைப் புலமையை வேண்டோம்-என்
போலிப் புலவரின் காலைப் பிடியோம் [றும்
மெய்ம்மைப் புலவர் நூல் கற்போம்—நாட்டில்
மெய்ம்மை நிலைக்கவே திண்மையில் நிற்
[போம்.

**கேள்விகள்**

1. மெய்ம்மைப் புலவர் குணம் என்ன?
2. போலிப் புலவர் குணம் என்ன?
3. மெய்ப் புலவரால் நாடு பெறும் நலம் என்ன?

**பயிற்சி**

I. வினை முற்றால் முடியாத வாக்கியங்களிலே தக்க வினை முற்று வைத்து எழுதுக.

1. வள்ளுவர் மெய்ம்மைப் புலவர்
2. அவர் வாக்கு அமுதம்
3. கம்பர் காவியம் இன்பக் கவிதை
4. பொய்ப் புலவர் வாக்கு நஞ்சு

II. வினை முற்று இல்லாமலே இவ் வாக்கியங்களைப் பெயர்ச் சொல்லால் முடிக்க.

கம்பர் சோழ நாட்டு———
வள்ளுவர் மெய்ம்மை———
பெரிய புராணம் அன்பு மயமான———
பாரதியார் பாட்டு தமிழர் செவிக்கு———
இந்திய நாடு எமது———
சுதந்திர வாழ்வே———

# 18. நரியின் தந்திரம்

| | | |
|---|---|---|
| **எக்காளம்** | **குகை** | **விலங்கு** |
| **தனியன்** | **நட்பு** | **நயவஞ்சகம்** |
| **வேட்டை** | **நற்பேறு** | **சூழ்ச்சி** |
| **கோள்** | **பகை** | **புகார்** |
| **தந்திரம்** | **மடமை** | **திடுக்கிட்டு** |

ஒரு காட்டில் ஒரு எருது தன் மனம்போல் மேய்ந்து கொழுத்து வளர்ந்திருந்தது. அது எக்காளம் செய்வது அக் காட்டிலுள்ள எல்லா

மிருகங்களையும் நடுங்க வைக்கும். ஒருவருக்கும் அடங்காமல் வாழ்வு நடத்திய அந்த எருதின் பெருமையை அக் காட்டிலுள்ள சிங்கமும் அறிந்தது. விலங்கினத்திற்குத் தலைமை பூணும் உரிமையால் காடு முழுவதும் திரிந்த சிங்கம் ஒரு நாள் அந்த எருதின் குரலைக் கேட்டுத் திடுக்கிட்டு, அதைப் பார்க்க மனம் இல்லாமல் தன் குகைக்கு ஓடி வந்தது.

தங்கள் இனத்திற்கே தலைமையான சிங்கம் மனம் கலங்கியதைக் கண்ட மற்ற விலங்குகள் கூடின, புலி, கரடி, யானை, நரி, முதலியன சிங்கத்தை வணங்கி, வன வாழ்க்கையில் உள்ள குறைவுகளைப் பற்றிக் கூறின. சிங்கம் மௌனமாகவே இருந்தது. நரி தனியாக எழுந்து நின்று "அரசே! இக் காட்டில் தங்களை மதியாது வாழும் விலங்கு பொல்லாத விலங்குதான். அதை எதிர்க்க நாம் போகலாமா? அல்லது அதனை நட்பாகச் செய்து கொள்ள வழி தேடுவோமா? எனக்கு அனுமதி கொடுத்தால் நான் போய் அதன் தன்மைகளை அறிந்து கொண்டு வருகிறேன்," என்று கூறியது. சிங்கமும் சம்மதித்தது.

நரி புறப்பட்டுப் போய் நயவஞ்சகத்தோடு எருதை வணங்கி நின்றது. எருது நிமிர்ந்து பார்த்ததும் நரி "ஐயா! பெரியவரே, அடியேன் இக் காட்டு மன்னனான சிங்கத்தின் மந்திரி. சிங்கம் தங்கள் நட்பை விரும்புவதால் தங்களைக் கண்டு கொள்ள வந்தேன். சிங்கத்தைக் காண

விரும்பினால் தங்களை அழைத்துப் போவேன்," என்றது.

எருது "ஐயா மந்திரியாரே, காட்டில் என்னிடம் எவரும் நெருங்காது நான் தனியனாகத் திரிகிறேன். துணை இல்லாத வாழ்வும் ஒரு வாழ்வாகுமா? சிங்க மன்னன் என் நட்பை விரும்பினால் என்னைக் காட்டிலும் நற்பேறு பெற்றவர் யார்," என்று கூறி நரியோடு நடந்து வந்தது. குகையிலிருந்த சிங்கத்தைக் கண்டு வணங்கி அதனோடு நட்புப் பூண்டது.

நாளடைவில் சிங்கமும் எருதும் மனம் ஒத்த நண்பர் ஆனதை மற்ற விலங்குகள் எல்லாம் கண்டு பொறாமைப் பட்டன. மந்திரித் தலைமையும் எருதிற்குக் கிடைத்ததே என்று விலங்குகள் மனம் வருந்தின. எப்படி இந்த இரு நண்பரையும் பிரித்து விடுவது என்று சூழ்ச்சி செய்தன.

ஒருநாள் அடுத்த காட்டில் அவைகள் மறைவாகக் கூட்டம் போட்டன. அங்கே பழைய நரியும் சென்றது. புலியும் கரடியும் நரியை மனமாரத் திட்டிப் பழித்தன. "நரியே! புதிய பெரிய விலங்கை நம் அரசருக்கு நண்பனாக்கி மந்திரியும் ஆக்கி வைத்த பாவி நீயே. மன்னர் இப்பொழுது நம்மை அடியோடு மறந்து விட்டார். இத்தனை காலமாக நாம் இக் காட்டின் நன்மைக்காக உழைத்ததெல்லாம் வீணைப்

போயிற்று. இப்பொழுது எருது முதல் மந்திரி ஆகி விட்டது. நமது மன்னரும் இனி எருதைப் போலவே புல் மேயப் பழகி விடலாம். யானையும் உதவி மந்திரியாக வந்து குழைகளை மேயப் பழகிக் கொடுக்கலாம். ஒட்டகமும் மற்றொரு மந்திரியாக வந்து, அதுவே தக்க வழி என்று ஒத்துப் பாடலாம். இனி இக் காட்டில் வேட்டையே மறந்து போகும். இத் தீமைக்குக் காரணம் நீயே," என்று இடித்து உரைத்தன.

நரி எழுந்து தலை வணங்கி "நண்பர்களே, நான் இந்த எருதை நம் மன்னருக்கு நட்பாக்கி வைத்தது உண்மையே. காட்டிற்கு நன்மை விளையும் என்று எண்ணியே நான் இந்த இருவரையும் சேர்த்து வைத்தேன். ஒரு காட்டிற்கு இரு தலைவர்கள் இருக்கலாமா! இப்பொழுது நீங்கள் குறை கூறுவதால் சேர்த்து வைத்த நானே நாளைக்கே பிரித்து விடுகிறேன். எருதுக்கு உடம்புதான் பெரிது. அறிவு என்பது சிறிதும் இல்லை. நம் மன்னரோ தக்கபடி நாம் எடுத்துக் கூறினல் தலையை அசைப்பார். விரைவில் நம் விரோதியை அழிக்கிறேன்," என்று கூறியது.

அன்று இரவே நரி சிங்கத்தினிடம் போய் எருதைப் பற்றித் பல வகையாகக் கோள் சொல்லியது. சிங்கம் எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டது. நரி அங்கிருந்து புறப்பட்டு எருதி

னிடம் வந்து சிங்கத்தைப் பற்றிப் புகார் சொல்லியது. எருது நரி கூறியதை நம்பி சிங்கத்தைப் பார்க்கப் புறப்பட்டது. நரி சொன்ன விதம் அது நடந்து வந்ததால் சிங்கம் எருது னிடம் கடுங்கோபம் கொண்டு ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து, அதை அடித்துக் கொன்றது. எருது நரியின் தந்திரத்தை அறியாமல் சிங்கத்தினிடம் மரியாதையின்றி நடந்து வந்து உயிரைக் கொடுத்தது. மற்ற விலங்குகள் இக் காட்சியைக் கண்டு மனம் மகிழ்ந்தன.




உலகத்தில் நரி போன்ற குணம் உள்ள மனிதர் பலர் உண்டு. சிங்கம் போன்றவரும் உண்டு. எருது போன்ற மடமைக் குணம் உள்ளவரும் உண்டு. பகையை மூட்டி ஒருவரை ஒருவர் அழிக்கும்போது மகிழும் மனம் உள்ளவரைக் கண்டால் விலகியே வாழ வேண்டும்.

## கேள்விகள்

1. சிங்கமும் எருதும் எவ்விதம் நட்புக் கொண்டன ?
2. மற்ற விலங்குகள் ஏன் வருத்தப் பட்டன ?
3. எருதைக் கொல்ல மற்ற விலங்குகள் செய்த சூழ்ச்சி என்ன ?
4. நரி போன்ற குணம் உள்ள மனிதர் உண்டு என்றால் என்ன ?

## பயிற்சி

I. இங்கு உள்ள சொற்களில் ஏற்ற சொல்லை கீழே உள்ள ஏற்ற வாக்கியத்தில் வைக்க.

உலை—அச்சம்—தந்திரம்—சூழ்ச்சி

1. காட்டு விலங்குகள்——செய்தன.
2. சிங்கம்——கொண்டது.
3. நரிகள் கூடி——இட்டன.
4. நரியே ! என்ன——செய்தால் நாம் வாழலாம்?

II. தகுதி இல்லாத சொல்லை நீக்கி விடு.

1. காட்டின் அரசன் எருது சிங்கமே.
2. சுதந்திரத்தால் சிங்கம் எருது கொழுத்தது.
3. நரி விலங்குகள் ஒரு தந்திரம் செய்தது.

# 19. புகழ்ச் செல்வர்

| | | |
|---|---|---|
| செல்வம் | புகழ் | ஈகை |
| தேவாரம் | பதிகம் | வள்ளல் |
| கொடை | சிறப்பு | பறம்பு |
| முற்றுகை | பாணர் | கொடுமை |
| அசதி | மறதி | கோவை |

செல்வம் உள்ளவர் ஏழைகளுக்குத் தம்முடைய செல்வத்தை ஓரளவு உதவ வேண்டும். இல்லாதவருக்கு உதவும் பொருட்டே தம்மிடம் செல்வம் இருக்கிறது என்று அவர் அறிய வேண்டும். பிறருக்கு அளிக்கும் தன்மையால் அடையும் புகழ் உலகத்தில் மிகவும் சிறந்தது. புகழ் பெற வேண்டும் என்றே தமது செல்வம் முழுவதும் அள்ளிக் கொடுத்த வள்ளல்களையே புகழ்ச் செல்வர் என்று கூறுகிறோம். செல்வ வாழ்வினால் பெறத் தக்க இன்பங்களை மதியாமல், ஈகையால் வரும் புகழைத் தேடியவர் இறந்தும் என்றும் இருப்பவரே ஆவர். உலகில் அவர் பெயர் எக் காலத்திலும் மறைவது கிடையாது.

சுந்தரமூர்த்தி நாயனார் பாடியுள்ள ஒரு தேவாரப் பதிகத்தில் வள்ளல்களில் சிறந்த பாரியின் பெயர் வருகிறது. "கொடுக்கிலாதானைப் பாரியே என்று கூறினும் கொடுப்பார் இல்லை," என்று அவர் பாடியிருக்கிறார். பாரி சங்க காலத்தில் வாழ்ந்தவர். அது கி. பி. இரண்டாம் நூற்றாண்

டாகும். சுந்தரர் வாழ்ந்த காலம் எட்டாம் நூற்றாண்டாகும். பாரியின் ஈகைக் குணம் பல நூற்றாண்டுகளின் பிறகு வாழ்ந்த சுந்தரரும் அறியத் தக்கதாக இருந்தது. இன்று நாமும் கூட பாரியின் கொடைச் சிறப்பை அறிவோம்.

பதினெட்டு நூற்றாண்டுகளின் முன்பு வாழ்ந்த ஒரு நாட்டுத் தலைவரின் பெயரை நாம் இன்று வரை கேட்கக் காரணம் என்ன? பாரி முன்னூறு ஊர்களை ஆண்ட பறம்பு மலைத் தலைவர். அவர் புலவருக்கு வாரிக் கொடுத்துப் புகழ் பூண்டதால் சேர, சோழ, பாண்டியர் பகைக்கு ஆளானர். தமக்கு இல்லாத புகழ் இவருக்கு வந்ததே என்று பொறாமை கொண்ட அம் மன்னர் மூவரும் பாரியின் கோட்டையை முற்றுகை இட்டனர். பாரியின் நண்பரான கபிலர் மூவேந்தர்களையும் பார்த்து "அரசர்களே நீங்கள் படைகளால் இந்த நாட்டைப் பிடிக்க முடியாது. பாணர்களைப் போல ஆடிப் பாடி வந்தால் இப்பொழுது மிஞ்சியுள்ள மலையையும் தம்மையும் என்னையும் கொடுத்து விடுவார். அவர் முன்னூறு ஊர்களையும் முன்னமே ஏழைகளுக்குக் கொடுத்து விட்டார்," என்று சொன்னர். இவ் விதம் அள்ளிக் கொடுக்கும் குணம் இருந்ததால் இந்த வள்ளலை அன்று சுந்தரர் நினைத்தார்; இன்று நாமும் நினைக்கிறோம்.

புகழ்ச் செல்வம் தேடக் காலமும் இடமும் இதுதான் என்பது இல்லை. இளம் பருவத்திலும்

புகழ்ச் செல்வம் ஒருவருக்குக் கிட்டுவது உண்டு. முதுமை வரையிலும் ஒருவர் புகழ் தேடாமலே இறக்கலாம். உயர்ந்த நிலையிலே வாழ்ந்தவர் தான் புகழ் பெறுவார் என்று கூற முடியாது. தமக்கு இருக்கும் கூழைப் பிறருக்கு அன்போடு கொடுத்தவரும் புகழ் பெற்ற கதை உண்டு.

ஔவையார் ஒரு நாள் வயல் வழியே கடும் பகல் வெளியில் நடந்து வந்து கொண்டிருந்தார். ஒரு உழவன் அங்கே உழுது கொண்டிருந்தான். ஔவையார் பசியின் கொடுமையால் களைத்திருந்தார். உழவன் உழவை நிறுத்தி விட்டுக் கூழ்க் கலயத்தை எடுத்துத் திறந்தான். அப்பொழுது அவன் பக்கத்தில் நின்ற ஔவையார் முகத்தைப் பார்த்தான். தன் பசியைக் காட்டிலும் அவர் பசியே தணிக்கத் தக்கது என்று எண்ணி, அக் கூழ்க் கலயத்தை அவரிடம் நீட்டினான். ஔவையார் கூழை வயிறாரக் குடித்தார். நன்றியறிவால் அவனைப் புகழ்ந்து பாட நினைத்து "அப்பா, உன் பெயர் என்ன?" என்று கேட்டார். அவன் "அசதி". என்று பதில் சொன்னான். அசதி என்பதற்கு மறதி என்பது பொருளாம். "என் பெயர் தெரியாது; மறந்து விட்டேன்," என்று அவன் சொன்னான். ஔவையார் அவன் பெயர் அசதி என்றே வைத்துக் கொண்டார். அவனைப் பற்றி அசதிக் கோவை என்ற பெரிய பாட்டுப் பாடினார். அசதி பெற்ற புகழைப் பல அரசரும் பெறவில்லை.

பாண்டிய மன்னருள் நெடுஞ் செழியன் என்ற இளஞ் சிங்கம் ஒருவர் இருந்தார். அவர் அரசு ஏற்ற போது, பகைவர் பலர் அவர் நாட்டை வளைத்தனர். அவர் இளமையை முக்கிய காரணமாகக் கொண்டு எளிதில் அவரை வெல்லலாம் என்று நினைத்துப் பகை அரசர் படையெடுத்து வந்தார். பாண்டிய மக்கள் பயந்தனர். அப்பொழுது அவர் "என்னை இளம் பிள்ளை என்று எண்ணி எதிர்த்த அரசரைப் போரில் வென்று சிறை செய்யாது இப் போர்க் களத்திலிருந்து மீள்வேனாகில், மாங்குடி மருதனார் போன்ற புலவர்கள் என்னைப் பாடாது போவாராக. குடிகள் பழி தூற்றும் கொடுங் கோலன் ஆவேனாக," என்று கூறிப் போர்க் களத்துக்குப் புறப்பட்டார். தலையாலங் கானத்திலே பெரும் போர் நடத்தி வெற்றியுடன் மீண்டார். புலவர் பாடும் புகழை மதித்த இம் மன்னர் இன்றும் புகழ்ச் செல்வராக விளங்குகிறார்.

சமீப காலத்திலும் புகழ்ச் செல்வர் உண்டு. தம்மையே நம் நாட்டிற்காகத் தியாகம் செய்த மகாத்மா காந்தியும், தம் குடும்பத்தையே நாட்டின் பணிக்கு உதவிய மோதிலால் நேருவும், தம் செல்வத்தை எல்லாம் நாட்டிற்கு உதவி வறுமை பூண்ட சித்தரஞ்சன தாசரும் புகழ்ச் செல்வருள் சிறந்தவர் ஆவர். இப் பெரியோர் காட்டிய வழியில் நாமும் வாழ்ந்து புகழ் தேடி, உலகம் என்றும் நினைக்கத் தக்க புகழ்ச் செல்வர் ஆக வேண்டும்.

## கேள்விகள்

1. உலகம் யாரை மறப்பதில்லை? ஏன்?
2. சுந்தரர் பாரியை எதற்காகப் புகழ்ந்தார்?
3. அசதி பெற்ற புகழ் என்ன?
4. நெடுஞ் செழியன் என்ன உறுதி கொண்டார்?
5. சமீப காலத்துப் புகழ்ச் செல்வர் சிலர் பெயர் கூறுக?

## பயிற்சி

I. பெரும் போர், பெருமை + போர் என்று பிரியும். பின் வரும் தொடர்களைப் பிரித்து எழுதுக.
இளம்பிள்ளை, இளவரசன், சிறுமலை.

II. தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ் செழியன் என்பது போர் வெற்றியால் வந்த பெயராம்.

பின் வரும் பெயர்களில் புகழ் தரும் செய்கை எது?

1. புலமையால் நாடு புகழ வாழ்ந்த தாகூர்.
2. தமிழுக்குப் புத்துயிரளித்த பாரதியார்.
3. பாரத சுதந்திரம் தேடிக் கொடுத்த மகான் காந்தி.
4. சொல் வன்மையை நாட்டிற்கே அளித்த சத்தியமூர்த்தி.

# 20. செய்தித் தாள்

| | | |
|---|---|---|
| செய்தி | முரசு | வள்ளுவர் |
| பட்டயம் | பொறிக்க | கல்வெட்டு |
| நிகழும் | நிகழ்ச்சி | தினத்தாள் |
| உரைக்க | கட்டுரை | நகைச்சுவை |
| உள்ளம் | விஞ்ஞானம் | சங்கீதம் |

முற்காலத்தில் அரசர் குடிகளுக்கு அறிவிக்க விரும்பும் செய்திகளை யானை மேல் முரசு அறைந்து தெரிவிப்பதுண்டு. வள்ளுவர் முரசு அறைந்து அரச விளம்பரத்தை விளக்கிச் சொல்வார். சில செய்திகளை மக்கள் எப்பொழுதும் மறவாமல் இருக்க வேண்டும் என்று கல்லிலே செதுக்கி வைப்பதும் உண்டு. அசோக மன்னர் உலகத்திற்கு உரைக்க எண்ணிய அறச் செய்திகள் இவ் வகையால் கல்லிலே செதுக்கப் பட்டதை இன்றும் காண்கிறோம்.

சில செய்திகள் சில குடும்பங்களில் வழி வழியாக வந்து கொண்டிருக்கும். அவை செப்புப் பட்டயங்களிலே பொறிக்கப்பட்டு வருவது உண்டு. நம் நாட்டில் சரித்திரத்திற்கு வேண்டிய பல செய்திகள் கல் வெட்டு எழுத்துக்களாலும் செப்புப் பட்டயங்களாலும் அறியப் பட்டன.

மேல் நாடுகளில் அரசாங்கத்தார் குடிகளுக்குத் தெரிவிக்க விரும்பும் செய்திகளை

காகிதம் தோன்றிய பிறகு எழுதித் தெரிவித்தார்கள். அச்சுத் தொழில் ஏற்பட்ட பிறகு செய்திகளைப் பெரிய காகிதங்களில் அச்சிட்டு ஊர் ஊராக அனுப்பும் வழக்கம் வந்தது. அரசாங்கம் செய்யும் நன்மைகளைக் குடிகள் அறிந்து கொள்ள இச் செய்தித் தாள்களே உதவியாக இருந்தன.



பிறகு இந்த அளவிலே செய்தித் தாள் அடங்கி விடக் கூடாது என்ற எண்ணம் தோன்றியது. ஆயிரக்கணக்கில் அச்சிட்டு நாள்தோறும் நாட்டில் நிகழும் நிகழ்ச்சிகளை வெளியிடும் தினத் தாள்களும் வாரத் தாள்களும் பிறந்தன. ஒவ்வொரு நாளும் பெரிய உருவத்தில் பல பக்கங்கள்வரையில் அச்சிடப் பெற்று பத்திரிகைகள் நாடெங்கும் பரவின.

இன்று இங்கிலாந்து, அமெரிக்கா முதலிய நாடுகளில் தினப் பத்திரிகைகள் மிகவும் வளர்ந்து பெருகி யுள்ளன. இப்பத்திரிகைகள் ஒரு நாளைக்கு லட்சக் கணக்கில் பிரதிகளை அச்சிட்டு நாடங்கும் பரப்புகின்றன, ஒரு நாட்டில் கோடிக் கணக்கான மக்கள் பத்திரிகை படிக்கத் தக்க கல்வியறிவு உள்ள வர்களாக இருந்தாலன்றி இத்தனை பத்திரிகைப் பிரதிகள் வர முடியுமா? நம் நாட்டு மொழிகளில் உள்ள பத்திரிகைகளில் ஏதேனும், ஒரு லட்சம் பிரதிகளை வெளியிடுகிறதா என்பது திட்டமாகக் கூற முடியவில்லை. செய்தித் தாள் நம் மக்களி டையே அதிகம் பரவினால் தான் உலக அறிவு மிகுந்து வாழலாம்.

பத்திரிகைகள் செய்தியைப் பரப்புவதே நோக்கம் என்று நின்றுவிடாமல் வேறு வழிகளி லும் நாட்டுப் பணி செய்ய வேண்டும். அவ் வப்போது இருக்கும் நாட்டு நிலைமையை இவை விளக்க வேண்டும். குடிகளுக்கு வேண்டிய நன்மை களைப் பற்றி அரசாங்கத்திற்கு உரைக்க வேண்டும். அரசாங்கத்திற்குக் குடிகள் செய்ய வேண்டிய கடமைகளைப் பற்றியும் எடுத்துக் கூற வேண்டும்.

வாரம் ஒரு முறை வெளிவரும் சில பத்திரி கைகள் உண்டு. அவை செய்திகளைக் குறுகிய அளவிலேதான் தாங்கி வரும். கதை, கட்டுரை, நகைச்சுவைப் பகுதி முதலிய வழிகளால் படிப்பவர் உள்ளத்தை அவை கவர வேண்டும். மாதம் ஒரு

முறை வெளிவரும் பத்திரிகைகளும் செய்திகளைப் பற்றி அதிகமாகப் பரப்புவது கிடையாது. அவை கதை, கட்டுரை, நாடகம், விஞ்ஞானம், அறிவு விளக்க வழிகள் முதலிய துறைகளில் நாட்டிற்குப் பணி புரிய அமையும்.

சில பத்திரிகைகள் வைத்தியத் துறைக்காக உழைக்க லாம். வேறு சில இசை, சிற்பம், சித்திரம் முதலிய கலைகளுக்காக உழைக்க லாம். விஞ்ஞானத் துறையிலே உழைக்கும் பத்திரிகைகளும் உண்டு. பல பத்திரிகைகளும் விளம்பரச் செய்திகளையும் தாங்கி வருவதைக் காணலாம். எத் துறையில் உழைத்தாலும் இவை எல்லாம் மனிதர் இனத்தின் அறிவு வளர்ச்சி, பொழுது போக்கு என்ற இரு வகைகளிலும் உதவவேண்டும்.

## கேள்விகள்

1. முற்காலத்தில் அரசர் செய்தி எப்படிப் பரவும்?
2. செப்புப் பட்டயம் எதற்காக ஏற்பட்டது?
3. அசோகர் எதற்காக கல்வெட்டு வெட்டினார்?
4. பத்திரிகைகள் உதவும் நன்மை என்ன?

## பயிற்சி

I. தினப்பத்திரிகை, மாதப் பத்திரிகை, வாரவெளியீடு என்ற பெயர்களை இடம் அறிந்து வைக்க.

1. கலை மகள் ஒரு———— ———
2. தின மணி ஒரு————————
3. ஆனந்த விகடன் ஒரு———— ———
4. சுதேச மித்திரன் ஒரு———— ———

# 21. கடிதம் எழுதும் முறைகள்

**உபாத்தியாயருக்கு :**

தெற்கு ராஜ வீதி,
தஞ்சாவூர்.
4-5-51.

ஐயா,

நாளைய தினம் என் தம்பிக்கு காது குத்தல் கலியாணம் நடக்கிறது. அது காரணமாக நாளை நான் வீட்டிலேயே தங்க வேண்டியிருப்பதால், அன்று மாத்திரம் எனக்கு விடுமுறை கொடுக்கும்படி தாழ்மையுடன் கேட்டுக் கொள்ளுகிறேன்.

விலாசம் — தங்கள் வணக்கமுள்ள,

**தலைமை உபாத்தியாயர்** — **க. கோபாலன்.**

ஆரம்பப் பள்ளிக்கூடம் — 5-வது வகுப்பு மாணவன்.

தெற்கு ராஜவீதி

**தஞ்சாவூர்**

**தகப்பனுருக்கு :**

கும்பகோணம்,
2-10-51.

அன்புடைய தந்தைக்கு,

சுந்தரம் வணக்கம். என்னை அவ்விடம் நவராத்திரி விடுமுறைக்கு வரும்படி அன்புடன் எழுதிய கடிதம் வரப் பெற்றேன். இவ் விடுமுறை நாட்களில் மாணவர்களை அழைத்துக்கொண்டு என் உபாத்தியாயர் அடுத்த ஊர்களுக்குச் சென்று காட்சிகளைப் பார்த்துத்

திரும்ப ஏற்பாடு செய்திருக்கிறார். இத்தகைய வசதி அரிதாகையால், நானும் சேர்ந்து போகலா மென்று இருக்கிறேன். இங்கு மாமனும் சம்மதித்திருக்கிறார். தாங்களும் சம்மதிப்பீர்கள் என்று நம்புகிறேன். ஆதலால் விடுமுறை நாட்களில் நான் அவ்விடம் வரமுடியாது பற்றி மன்னிக்கவும். தாயாருக்கும் எனது வணக்கம் உரியதாகும்.

விலாசம்.

தங்கள் அன்புள்ள.

**திரு. சிவபாத முதலியார்,**
மணிகை வியாபாரம்,
**பூதலூர்.**

**சுந்தரம்**

**சகோதர மாணவனுக்கு :**

பாபநாசம்,
*5—11—51.*

அருமை நண்ப,

நான் வெகு நாட்களாக உனக்குக் கடிதம் எழுதா ததுபற்றி மன்னிக்க வேண்டுகிறேன். சென்ற வாரத்தில் உனது பள்ளிக்கூடத்தின் வெள்ளி விழா சிறப்புடன் நடத்தப் பட்டது என்ற விவரத்தை, செய்திப் பத்திரிகைகளிலிருந்து அறிந்தேன். அவ் விழாவிற்கு நீயே காரியதரிசியாகப் பொறுப்பு ஏற்றதாகவும் அறிந்தேன். வெள்ளி விழா என்றால் என்ன? பள்ளிக் கூடத்திற்கும் அதற்கும் என்ன சம்பந்தம்? நீ செய்த ஏற்பாடுகள்

என்ன? இவை போன்ற பல குறிப்புக்களையும் உன்னிடமிருந்து அறிய ஆவலுள்ளவனாக இருக்கிறேன்.

உனது அன்பான பதிலை எதிர்பார்க்கும்,

விலாசம் : நண்பன்,

**திரு. கோ. தாமோதரன்,** **ந பாலசந்திரன்.**

5-ம் வகுப்பு மாணவன்,

நகராட்சி ஆரம்பப் பள்ளிக்கூடம்,

**மேல மாசி வீதி, மதுரை.**

**புத்தக வியாபாரிக்கு.**

மதுரை,
5-10-51.

ஐயா,

தாங்கள் வெளியிட்டுள்ள 5-வது வகுப்பு செந்தமிழ் வாசகம் நான்கு பிரதிகளை தயவு செய்து மறு தபாலில் வி. பி. பி. யில் அனுப்ப வேண்டுகிறேன்.

என் விலாசம் : தங்கள் உண்மையுள்ள,

**ஜி. ஜோஸப்,** **ஜி. ஜோஸப்.**

5-வது வகுப்பு மாணவன்,

யூனியன் மிஷன் கல்லூரி,

**மதுரை.**

விலாசம்,

**ஸ்ரீநிவாஸ் அண்டு கம்பெனி,**

புத்தக வியாபாரம்,

**புதுக்கோட்டை.**

### கேள்விகள்

1. கடிதத்தின் தலைப்பில் என்ன எழுத வேண்டும்?
2. செய்தி எவ்விதம் ஆரம்பிக்க வேண்டும்?
3. கடிதம் எழுதி எவ்விதம் முடிக்க வேண்டும்?
4. வெளிப் பக்கம் என்ன எழுத வேண்டும்?

### பயிற்சி

1. தெப்பத் திருவிழா பார்த்த ஒரு சிறுவன் தனது நண்பனுக்கு எழுதுவது போல ஒரு கடிதம் எழுதுக.
2. தெருவில் கழிவு நீர் வாய்க்கால் ஓடுவதைப் பற்றி நகராட்சி ஆணையருக்கு ஒரு கடிதம் எழுதுக.
3. ஊரிலே முதியவர் கல்வி வளர வழி செய்ய வேண்டும் என்று பத்திரிகைக்கு எழுதுக.

## 22. பத்திரிகைச் செய்திகள்

முன் ஒரு பாடத்தில் செய்தித் தாளைப் பற்றி பல விவரங்களை அறிந்தோம். செய்தித் தாள் தலைவர்கள் பேருரைகளையும், நம் நாட்டு நிகழ்ச்சி களையும், அன்னிய நாட்டில் நிகழும் நிகழ்ச்சி களையும் தாங்கி வரும் என்று அறிந்தோம். அவ்விதம் சென்னையிலிருந்து 3-10-50 தினமணிப் பத்திரிகையில் வெளிவந்துள்ள சில மாதிரிச் செய்திகளைக் கீழே காணலாம்.

## லண்டன் நகரில் அமர கவி பாரதி விழா கொண்டாட்டம்

---

### கடல் கடந்த தமிழர் ஏற்பாடு

லண்டன். அக். 2—அமர கவி ஸ்ரீ சுப்பிரமணிய பாரதியார் நினைவு நாள் லண்டன் தமிழர்களால் இன்று இங்கு சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. தமிழ்க் கவிஞனின் மேதையையும் சேவையையும் புகழ்ந்து பலர் பேசினர்.

இவ் விழாவை ஒட்டி விருந்து ஒன்றும் நடைபெற்றது.

லண்டன் நகரில் வாழும் தமிழர்கள் சேர்ந்து விழாவிற்கு ஏற்பாடு செய்தனர்.

### ஸ்ரீ சி. பி. புகழ் மாலைகள்

பிரதான சொற்பொழிவாளரான ஸ்ரீ சி. பி. ராமஸ்வாமி ஐயர் பேசுகையில், உலகம் முழுமைக்கும் பொதுவான விஷயங்கள் பற்றி பாரதியார் சிறப்பாகப் பாடியுள்ளார் என்பதை காலக் கிரமத்தில் தமிழ் உலகமும் வெளி உலகமும் கட்டாயம் ஒப்புக்கொள்ளும் என்றார். அறிஞர்களுக்கும் பண்டிதர்களுக்கும் மட்டுமே தமிழ் சொந்தம் என்ற நிலைமையை மாற்றி, பாமரனுக்கும் பஞ்சைக்கும் அதைப் புரிய வைத்தபெருமை

பாரதியையே சாரும் என்ருர். இதன் மூலம் தமிழ் மொழிக்கே அவர் புத்துயிரும் புத்துணர்ச்சியும் அளித்துள்ளதாக ஸ்ரீ சி. பி. கூறினுர்.

பலவிதமான பிளவு மனப்பான்மைகள் தலை நாட்டும் இன்றைய சூழ் நிலையில் பாரதியாரின் பரந்த மனப் பான்மையும், எல்லா மதங்களும் கலாச்சாரமும் ஒன்றே என்ற அவரது சித்தாந்தமும் இந்தியாவிற்கு மிகவும் நன்மை பயப்பதாகும், என்ருர் ஸ்ரீ சி. பி. ராமஸ்வாமி ஐயர்.

(தினமணி 3-10 51)

---

## நாசிக் முடிவுகளை நடைமுறையில் நிறைவேற்றுமாறு அழைப்பு

புது டில்லி. அக். 2—காந்தி ஜெயந்திக் கொண்டாட்டத்தை யொட்டி இங்கு நடைபெற்ற பொதுக்கூட்டத்தில் பிரதம மந்திரி நேருஜி பேசுகையில் நாசிக் காங்கிரஸ் நிறைவேற்றியுள்ள தீர்மானங்களை மக்கள் நடைமுறையில் கடைப்பிடிப்பதே மகாத்மா காந்தியின் உபதேசங்களை உண்மையில் பின்பற்றுவதாகும் என்று கூறினுர்.

### உற்பத்தியைப் பெருக்குவதே இப்போது மூல மந்திரம்

மக்கள் மேலும் மேலும் உற்பத்தியைப் பெருக்கிக் கொண்டே போகவேண்டும் என்று பிரதம மந்திரி வேண்டிக்கொள்கையில் உற்பத்தி பெருகினுல் ஒழிய நாட்டின் செல்வம் பெருகா

தென்றூர். நாட்டிலுள்ள மக்களே கிடைக்கும் வளங்களின் மூலம் செல்வ நிலைமையை உயர்த்த வேண்டுமென்றும், இது கடினமான பாதை யாகத் தோன்றியபோதிலும் இது ஒன்றேதான் வழி என்றும் அவர் கூறினூர்.

---

## இந்தியர் வெட்கமடைய வேண்டிய விஷயம்

ஆரம்பத்தில் நேருஜி மகாத்மா காந்தியைப் பற்றிக் குறிப்பிட்டுக் கூறியதாவது :

அவரது வேலையில் அவருடன் ஒத்துழைக்கும் பாக்கியம் எனக்கும் என்னுடைய சகாக்களில் சிலருக்கும் கிடைத்தது. ஆனல் இன்று நாம் அவரது போதனைகளை மறந்து விட்டோம் என்று கூற வெட்க மடைகிறேன். நம் நாட்டில் உள்ளத்தைக் காட்டிலும் இதர நாடுகளில் அண்ணலுக்கு அதிக மதிப்பு அளிக்கப்படுகிறது.

மகாத்மா காந்தி காட்டிய வாழ்க்கை நெறியும் லட்சியங்களும் கால வெள்ளத்தைக் கடந்து நிற்பவை. இந்தியா மக்கள் அவரது போதனைகளை விசுவாசத்துடன் கடைப்பிடித்தால் நாம் நிச்சயம் நம் இடையூறுகளை எல்லாம் வெல்ல முடியும்.

(தினமணி 3-10-50)

---

(மேற்கண்ட செய்திகள் தினமணி 3-10-50 பதிப்பில் வெளி வந்தவை ஆகும்.)

# 23. நமது போர்ப் படை

| | | |
|---|---|---|
| நட்பு | வல்லரசு | பீடிக்கிறது |
| தற்காப்பு | முழக்கம் | சமாதானம் |
| வற்புறுத்து | வண்ணமாக | தரைப்படை |
| கப்பற்படை | விமானப்படை | பீரங்கி |
| ஊதியம் | போர்முனை | குண்டு |

உலகத்தில் பல நாடுகள் உண்டு. அவற்றில் சில பெரியவை; பல சிறியவை. நாடுகள் அனைத்தும் நட்புடன் வாழ வேண்டும். இல்லையேல் சண்டைகள் தோன்றும். பெரிய வல்லரசு நாடுகள் தங்களுக்குள் வேற்றுமை கொண்டால் அதனால் ஏற்படும் சண்டை உலகச் சண்டையாகவே முடிகிறது. அதன் முடிவு உலக நாடுகள் அனைத்தையும் பீடிக்கிறது. வெற்றி பெற்ற நாடு மற்ற நாடுகளை ஆட்டி வைக்கிறது. அவற்றை தன்னுடன் சேர்த்துக் கொள்ளவும் முயலுகிறது. ஆகவே சில நாடுகளுக்குத் தற்காப்பும் அவசியமாகிறது.

உலக நாடுகளில் நம் இந்தியாவும் ஒரு பெரிய நாடுதான். ஆனால் அது வல்லரசு இனத்தில் சேரவில்லை. இப்பொழுதுள்ள வல்லரசுகள் அனைத்தும் 'போர் முழக்கமே அடிக்கடி செய்கின்றன. இந்தியாவின் கொள்கைக்கு அது முற்றிலும் மாறானது.

நம் அரசாங்கம் சண்டையை விரும்பவில்லை என்பது உண்மைதான். ஆனால் பிறர் நம் நாட்டின்மேல் ஏதாவது காரணத்தினால் படையெடுத்தால் என்ன செய்வது? நம் நாட்டின் சரித்திரத்தைக் கவனித்தால் முன்னாளில் மேனாட்டவரும் முகம்மதியர்களும் இந்தியாவைப் படையெடுத்த வண்ணமாகவே இருந்தார்கள் என்று அறியலாம். சில நூற்றாண்டுகளுக்கு முன்பு கூட ஆங்கிலேயரும் பிரெஞ்சுக்காரரும் நம் நாட்டில் நுழைந்து, உள்நாட்டுக் கலகங்களைக் கிளப்பி, முடிவில் நிலையாக ஆள ஆரம்பித்தார்கள் என்றும் அறிவோம். அடிமை வாழ்வில் நாம் அடைந்த தீமைகள் பல. வெகு பாடுபட்டே சுதந்திரம் பெற்றிருக்கிறோம்.

பழைய சரித்திர நிகழ்ச்சிகளால் நமக்கு உலக அறிவு ஏற்பட்டிருக்கிறது. ஆகவே சண்டையை தவிர்க்கவும் சமாதானத்தை விரும்பியும், நமது அரசாங்கம் சில வகைப் படைகளை எப்பொழுதும் தாங்க வேண்டிய அவசியம் ஏற்பட்டுள்ளது. அவைகளைப் பற்றி சிறிது அறிவோம்.

உள் நாட்டுக்குக் குழப்பங்கள் சில சமயங்களில் ஏற்படலாம். சாதாரணப் படைகளைக் கொண்டே அவற்றை அடக்கி விடலாம். தற்காப்பை ஒட்டி அன்னியரை எதிர்க்க வேண்டியே சில படைகள் இருக்கின்றன. அவை பின் வருமாறு.

தரையில் சண்டை நடக்கும் போது பீரங்கி வண்டிகள், துப்பாக்கிகளைத் தாங்கி எப்பொழுதும் லட்சக் கணக்கில் வீரர்கள் தயாராக இருக்கின்றனர். அப் படையினர் பல பிரிவினராக இருப்பார். அவர்களுக்குப் படிப்படியாகத் தலைவர்கள் உண்டு. அரசாங்கம் அவர்களுக்கு உணவும் உடையும் பண



படையினர் அணிவகுத்துச் செல்வது

ஊதியமும் கொடுத்து நாட்டின் முக்கிய இடங்களில் அவர்களை நிறுத்தியிருக்கிறது. நடக்காக போர் எங்கு நிகழ்ந்தாலும் அவர்கள் அப்போர் முனைக்கு அனுப்பப் படுகிறார்கள்.

நமது நாட்டிற்கு மூன்று பக்கங்களில் கடல் சூழ்ந்து இருக்கிறது. கடல் வழியாகவும் எதிரிகள் நம்மைத் தாக்க வரலாம். அப்பொழுது கடலி

லேயே அவர்களை எதிர்த்துச் சண்டை செய்ய நேரிடும். அதற்கு உதவியாக பல போர்க் கப்பல்களையும் நம் அரசாங்கம் எப்பொழுதும் தயாராக வைத்திருக்கிறது. இவைகளும் பல பீரங்கிகளைத் தாங்கி யிருக்கும். ஆயிரக் கணக்கான வீரர்கள் நம் கடற் படையில் சேர்ந்து பயிற்சி பெற்றுத் தயாராக இருக்கிறார்கள்.



மாணவர் படையினர் பயிற்சி பெறுவது

ஆகாயத்திலும் எதிரிகள் வர வழி இருக்கிறது. விமானங்களின் உதவி கொண்டு எதிரிகள் குண்டுகளை வீசி நகரங்களைத் தாக்கலாம். அவர்களைச் சுட்டு வீழ்த்த வேண்டும். நம் விமானங்களைக்கொண்டு அவர்களை வானிலே துரத்தி

அடிக்கவேண்டும். தரைப்படைக்கு உதவியாகவும் சில வேலைகளில் விமானப்படை செல்லவேண்டும். இம்முறையிலும் நம் அரசாங்கம் பயிற்சி பெற்ற விமானப் படையினரை ஆயிரக் கணக்கில் தயாராக வைத்திருக்கிறது.

இவற்றிற்காக ஆண்டு தோறும் இந்திய அரசாங்கம் பல கோடி ரூபாய்களை செலவு செய்து வருகிறது. இன்னும் நம் படை பலம் பெருக வேண்டும். அதற்கு நாம் உதவி செய்ய வேண்டும்.

வல்லரசு நாடுகளில் கட்டாய இராணுவப் பயிற்சி என்பது உண்டு. வயது வந்த ஒவ்வொரு ஆண் மகனும் குறிப்பிட்ட கால அளவிற்கு இராணுவப் பயிற்சிபெற வேண்டும். போர் ஏற்பட்ட காலத்தில் அவர்கள் அவசியம் நேர்ந்தால் கட்டாய இராணுவ சேவை செய்யவேண்டும் என்றும் திட்டம் ஏற்பட்டிருக்கிறது. நம் அரசாங்கமும் மாணவர்களுக்கு குறிப்பிட்ட இடங்களில் இராணுவப் பயிற்சி அளிக்க ஏற்பாடு செய்திருக்கிறது. நாட்டின் எதிர்கால நன்மையை நோக்கமாக கொள்ளும் ஒவ்வொரு மாணவரும் வயது வந்த பொழுது இராணுவப் பயிற்சி பெறுவது அவசியமாகும்.

## கேள்விகள்

1. போர்ப் படை வகைகளை கூறுக ?
2. படையின் அவசியம் என்ன ?
3. நம் மாணவரின் கடமை என்ன ?

**பயிற்சி**

1. நாடுகள் அனைத்தும் நட்புடன் வாழவேண்டும். இல்லையேல் சண்டைகள் தோன்றும்.

ஒரு வாக்கியமாக எழுது.

2. ஆங்கிலேயரும், பிரெஞ்சுக்காரரும் நம் நாட்டில் நுழைந்து உள் நாட்டுக் கலகங்களைக் கிளப்பி, முடிவில் நிலையாக ஆள ஆரம்பித் தார்கள். பல வாக்கியங்களாகப் பிரித்து எழுது.

# 24. மனோன்மணி

நாடகம்

| | | |
|---|---|---|
| திருமணம் | மணமகன் | மணமகள் |
| மங்களம் | அமைச்சர் | அரண் |
| இருக்கை | நீடூழி | அருள் |
| இறைவன் | தூதன் | அறநெறி |

**இடம்** :—திருநெல்வேலி, அரண்மனை, கலியாண மண்டபம்.

**காலம்** :—அதிகாலை.

**பாத்திரர்** :—சீவகவழுதி, குடிலர், பலதேவன், புருஷோத்தமன், சுந்தர முனிவர், மனோன் மணி, வாணி, புரோகிதர், சோதிடர்.

[கலியாண மண்டபம் விரைவில் அமைகிறது. புரோகிதரும் சோதிடரும் திருமணத்திற்கு விரைந்து வருகிறார்கள். சீவகவழுதி வருகிறார்.]

**சீவகவழுதி** :—எல்லோரும் வாருங்கள். குழந்தை மனோன்மணியை இப்பொழுதே பலதேவனுக்கு மணம் செய்வித்து விரைவில் அயலிடத்திற்கு அனுப்ப வேண்டும். மணவினை நிகழ எல்லாம் தயாராக ஆயிற்றா ?

**புரோகிதர்** :—என்னால் ஆக வேண்டிய வேலைகளை தவக்கமின்றி முடித்து விட்டேன். இனி மணமகளும் மணமகனும் வரவேண்டும். உடனே திருமணம் நிகழலாம்.

**சோதிடர்** :—திருமணம் நடத்தவேண்டிய வேளை வந்து விட்டது. மணமக்கள் இன்னும் வர வில்லையா ?

**சீவகன்** :—இம் மணம் நடக்க வழி செய்து வைத்த மந்திரி குடிலரைக் காணவில்லை. அவர் வராமல் இந்த மங்கள காரியம் நடக்கலாமா ?

(பலதேவன் மணக் கோலத்தோடு வருகிறான். உடல் நலம் இல்லை என்பது அவன் நடையால் விளங்குகிறது.)

**புரோகிதர்** :—இதோ மணமகன் வந்து விட்டார். மணமகளை அழைத்தால் குறித்த வேளையில் மங்கள காரியத்தை நிறைவேற்றி விடுவோம்.

**சீவகன்** :—பலதேவா, உடம்பில் தளர்ச்சி இல்லையே, சிறிது பொழுது நிற்க இயலுமோ, இயலாதோ ? உன் தந்தை எங்கே ? இன்னும் வரக் காணோம் !

**பலதேவன்** :—இரவெல்லாம் உறக்கம் இல்லாது ஏதேதோ பேசிக் கொண்டிருந்தார். காலையிலே உலாவப் போனார்; வந்துவிடுவார். என் உடல் நிலை நன்றாகவே இருக்கிறது.

**புரோகிதர்** .—அமைச்சர் படைகளைத் திரட்டப் போயிருக்கலாம். இன்னும் போர் நிற்கவில்லையே! பகை அரசன் அரணுக்கு வெளியே நிற்கிறான். அமைச்சர் ஏதாவது நாட்டுப் பணி செய்யவே போயிருப்பார். அவருக்கு விருப்பமான இத் திருமணம் அவர் இல்லா விட்டாலும் குறித்த வேளை தவறாமல் நடப்பதே நல்லது.

**சோதிடர்** :—அப்படியே நானும் நினைக்கிறேன்.

**சீவகன்** :—பெண்ணை அழைக்கிறேன்.

[சேவகன் ஓடுகிறான். இரண்டு பெண்கள் மெல்ல பேசிக் கொண்டே நடந்து வருகிறார்கள்.]

**வாணி** :—மனோன்மணி! நேற்று முதல் ஒன்றும் பேசுவது இல்லை என்ற விரதமோ? உன் மனத்தில் உள்ள உணர்ச்சி உன்னோடு நெடு நாள் பழகிய எனக்கே விளங்கவில்லையே.

**மனோன்மணி** :—வாணி, என் தந்தை என் நலத்தையே கருதுவார் என்பதை நீ அறியவில்லை. உன் தந்தை உன் நலத்திற்காக எத்தனையோ முறை வாதாடியும் நீ பிடிவாதம் பிடித்ததை மறந்து விட்டாய்.

**வாணி** :—உனக்கு இந்த மணம் நடந்தால் நான் கன்னியாகவே இருந்து விடுகிறேன். எனக்கு மணமும் வேண்டாம்; வாழ்வும் வேண்டாம்.

(திருமண மண்டபத்தின் முன் வந்து மனோன்மணி வணங்குகிறாள். வாணி பக்கத்தில் நிற்கிறாள்.)

**ஜீவகன்** :—குழந்தைகளே, வாருங்கள்; இந்த இருக்கைகளில் அமருங்கள்.

**மனோன்மணி** :—தந்தையே இனி நான் என்ன செய்ய வேண்டும்?

**ஜீவகன்** :—பலதேவா! இந்தப் பலகையில் அமர்க. மனோன்மணி! நீயும் வா அம்மா.

**புரோகிதர்** :—மணமகன் மணமகள் இருவரும் என்றும் மணமக்களாய் இருக்க கடவுள் அருள்வாராக! மணமக்கள் நீடூழி வாழ்க!

(மாலை ஒன்றை எடுத்துப் பலதேவன் கையிலே கொடுத்து மனோன்மணிக்கு அணியச் சொல்லுகிறார். இசைக் கருவிகள் முழங்குகின்றன.)

**சோதிடர்** :—இறைவன் அருளால் இம் மணமக்கள் எல்லா நன்மைகளும் அடைக!

[ஒரு கதவு திறக்கிறது. புருஷோத்தமன் குடிலனை விலங்கிட்டு அழைத்துக்கொண்டு முன் வருகிறான். மாலையோடு நின்ற மனோன்மணி அவனைப் பார்க்கிறாள். ஜீவகனும் பார்க்கிறான்.)

**மனோன்மணி** :—என் கனவில் வந்த தெய்வ மன்றோ!

**புருஷோத்தமன்** :—என் கனவில் வந்த பெண் அன்றோ !

**சீவகன்** :—காலம் இடம் அறியாமல் இங்கு வந்த நீர் யார்.? உம்மை வரவேற்றவர் யார் ?

**புருஷோத்தமன்** :—அரசே, கோபம் வேண்டாம். என் விலங்கால் கட்டுப்பட்டிருக்கும் குடிலர் எல்லாம் சொல்வார். பிறகு நான் வந்தது பொருத்தமா இல்லையா என்பது விளங்கும்.

**சீவகன்** :—குடிலரே, என்ன கோலம் இது ! உமக்கு விலங்கிட்டவர் யார் ? அமைச்சருக்கு விலங்கிட அரச நீதி இடம் தருமா !

**புருஷோத்தமன்** :—அமைச்சரைச் சிறை செய்தல் அரச நீதி இல்லை. அமைச்சர் கையில் விலங்கு பூட்டுதல் அரச நீதி இல்லை. ஆனால் இவர் அமைச்சர் தானா என்பதை அறிந்து கொள்ளவேண்டும். அதன் பிறகு விலங்கைத் தறிப்போம்.

**புரோகிதர்** :—நல்லவேளை தவறுகிறதே ! மணமகன் எங்கே ? ஆகா ! மயங்கி விழுந்து விட்டாரே.

**சீவகன்** :—புருஷோத்தமரே என்ன கூறுகிறீர் ? குடிலர் அமைச்சர் இல்லையா ? எனது நாட்டின் நலத்திற்காகவே பல்லாண்டுகளாக உழைத்து வரும் இவரையோ இப்படிப் பழிக்கத் துணிந்தீர் !

**புருஷோத்தமன்** :—அரசே! உமது நாட்டின் நலத்திற்காக இவர் உண்மையில் உழைத்திருந்தால் இப் போர் விளைந்திராது. நானும் இப்பொழுது வந்திருக்க மாட்டேன். இந்த அரண்மனையில் நுழைய ஒரு வழி உண்டு என்பது எனக்கு எப்படித் தெரியும்?

**சீவகன்** :—குடிலரே. என்ன கதை இது? மௌன விரதமா? வாய் திறக்க மாட்டீரா?

(சுந்தர முனிவர் விரைந்து வருகிறார்.)

**மனோன்மணி** :—பெரியோரே! வருக, வருக!

(வணங்குகிறாள்)

**சுந்தர முனிவர்** :—வழுதியே, நான் எத்தனை முறை எடுத்துரைத்தும் கேளாமல் இதோ சிறைப்பட்டு வாய் திறக்கவும் அஞ்சி நிற்கும் குடிலன் சொற்படி பலதேவனுக்கு மனோன்மணியைக் கொடுக்கத் துணிந்தாய். குடிலன் சூழ்ச்சிகளை எல்லாம் நான் அறிவேன். என்றால் இயன்ற அளவு அச் சூழ்ச்சிகளின் பலனை மாற்றவும் முயன்றேன்.

**புருஷோத்தமன்** :—இந்த பலதேவன் தானே எங்கள் நாட்டிலே தூதனாக வந்து முறையறியாது பேசினான். இவன் தூது வராவிட்டால் இப் போர் மூண்டிருக்குமா?

**சுந்தர முனிவர்** :—சீவக வழுதியே, இன்னும் நான் என்ன சொல்லவேண்டும். குடிலன் இன்று காலையிலே புருஷோத்தமன் முன் சென்று

நாட்டையே கொடுப்பதாகச் சொன்னான். உன்னையும் சிறை செய்து ஒப்பிப்பதாய் உரைத்தான். அதற்குக் கைம்மாருக இந் நாட்டில் சேரரது பிரதிநிதியாக அரசாளும் உரிமை வேண்டியிருக்கிருன். புருஷோத்தமன் அறநெறி அறிந்தவன். ஆதலால் இவனைச் சிறையிட்டு இங்கு அழைத்து வந்திருக்கிருன்.

**சீவகன்** :—என்ன ஆச்சரியம்! இது உண்மை தானே?

**புருஷோத்தமன்** :—முனிவர் பொய்யும் உரைப்பாரா? இனி நான் குடிலரை விட்டு விடுகிறேன். எந்த வகையில் நடத்துவது தகுமோ அப்படி நடத்தலாம்.

(குடிலனும் பலதேவனும் சிறைப்பட்டு வெளியே போகிருர்கள்.)

**சோதிடர்** :—இப்பொழுதே நற்காலம்.

**மனோன்மணி** ;—என் மணம் உவந்த தலைவருக்கு நானே மாலை சூட்டுகிறேன்.

**புருஷோத்தமன்** :—தேடிக் கண்டு கொண்ட என் தலைவிக்கு நானும் மாலை சூட்டுகிறேன்.

**(காட்சி முடிகிறது)**

**கேள்விகள்**

1. மணமகனை முதலில் நின்றவன் யார்?
2. அமைச்சர் ஏன் வராதிருந்தார்?

3. புருஷோத்தமன் அங்கு வந்தது எப்படி?
4. மனோன்மணி அவனை எப்படி அறிந்தாள்?
5. குடிலர் நாட்டிற்கு இழைத்த கேடு என்ன?
6. மனோன்மணியின் மனம் உவந்த மணம் எது?

## பயிற்சி

I. 1. மணம் நிகழ்வதற்கு முன்பு வாணியும் மனோன்மணியும் தனியே பேசுவது போல ஐந்து வாக்கியங்கள் எழுதுக.

2. குடிலரும் புருஷோத்தமனும் கோட்டைப் புறத்தே முதலில் கண்டு கொண்டபோது உறையாடுவது போல பத்து வாக்கியங்கள் எழுதுக.

3. சீவகன் குடிலர் குற்றத்தை அறிந்த பிறகு அவரை இகழும் முறையிலே வாக்கியங்கள் எழுதுக.

II. 1. தன் நலம் நினைப்பவன் பிறர் வாழ்வு அழிப்பான்.

2. எவரையும் நம்புவோர் இடரே அடைவார்.

இந்த நீதிகள் விளங்க இக்கதையைத் துணை கொண்டு சிறு கட்டுரைகள் எழுதுக.

III. வழுதி, சோழன், அமைச்சர், புரோகிதர், முனிவர் என்ற பெயர்களை எழுவாயாகவும் செயப்படு பொருளாகவும் வைத்து இரு வேறு வாக்கிய வகைகள் எழுதுக.

# செய்யுட் பகுதி

## 1. மூதுரை

### காலம் வேண்டும்

1. அடுத்து முயன்றாலும் ஆகும் நாளன்றி
எடுத்த கருமங்கள் ஆகா—தொடுத்த
உருவத்தால் நீண்ட உயர் மரங்கள் எல்லாம்
பருவத்தால் அன்றிப் பழா.

### மானம் உள்ளவர்

2. உற்ற விடத்தில் உயிர் வழங்கும் தன்மையோர்
பற்றலரைக் கண்டாற் பணிவரோ—கற்றூண்
பிளந்திறுவ தல்லாற் பெரும் பாரம் தாங்கில்
தளர்ந்து வளையுமோ தான்.

### குலத்திற்கு ஏற்ற குணம்

3. நீரளவே யாகுமாம் நீராம்பல் தான்கற்ற
நூலளவே யாகுமாம் நுண்ணறிவு—மேலைத்
தவத்தளவே யாகுமாம் தான்பெற்ற செல்வம்
குலத்தளவே யாகும் குணம்.

### நல்லோர் நன்மை பிறருக்கும் உதவும்

4. நெல்லுக்கு இறைத்த நீர் வாய்க்கால் வழியோடிப்
புல்லுக்கும் ஆங்கே பொசியுமாம்—தொல்லுலகில்
நல்லார் ஒருவர் உளரேல் அவர் பொருட்டு
எல்லார்க்கும் பெய்யும் மழை.

## காலத்தால் முடியும்

5. பண்டு முளைப்பது அரிசியே யானாலும்
விண்டுமி போனால் முளையாதாம்—கொண்டபேர்
ஆற்றலுடையார்க்கும் ஆகா தளவின்றி
ஏற்ற கருமம் செயல்.

## உடம்பால் மதிப்பதில்லை

6. மடல் பெரிது தாழை மகிழினிது கந்தம்
உடல் சிறிய ரென்றிருக்க வேண்டா-கடல்பெரிது
மண்ணீரும் ஆகா அதனருகே சிற்றூரல்
உண்ணீரும் ஆகி விடும்.

## கல்லாதவன் மரமே

7. கவையாகிக் கொம்பாகிக் காட்டகத்தே நிற்கும்
அவையல்ல நல்ல மரங்கள்—சவை நடுவே
நீட்டோலை வாசியா நின்றான் குறிப்பறிய
மாட்டா தவன் நன் மரம்.

## தீயோர்க்கு உதவினால் தீங்கு வரும்

8. வேங்கை வரிப்புலி நோய்தீர்த்த விடதாரி
ஆங்கதனுக்கு ஆகாரம் ஆனாற்போல்—பாங்கறி
புல்லறி வாளர்க்குச் செய்த வுபகாரம் [யாப்
கல்லின்மேல் இட்ட கலம்.

## உண்மை உறவு

9. அற்ற குளத்தின் அறுநீர்ப் பறவைபோல்
உற்றுழித் தீர்வார் உறவல்லர்—அக்குளத்தில்
கொட்டியும் ஆம்பலும் நெய்தலும் போலவே
ஒட்டி யுறுவார் உறவு.

### உடன் பிறந்தார் சுற்றம் இல்லை

10. உடன் பிறந்தார் சுற்றத்தார் என்றிருக்கவேண்டா
உடன் பிறந்தே கொல்லும் வியாதி-உடன்பிறவா
மாமலையில் உள்ள மருந்தே பிணி தீர்க்கும்
அம்மருந்து போல்வாரும் உண்டு.

ஔவையார்.

### அரும் பதவுரை

பருவத்தால்-காலத்தால், பற்றலர்-பகைவர், ஆம்பல்-அல்லி, நுண்ணறிவு-நுட்பமான அறிவு, தொல்-பழமையாகிய, பண்டு முளைப்பது-முதலில் முளைப்பது, ஆற்றல்-வல்லமை, கந்தம்-வாசனை, கவை-கிளை, நீட்டோலை-நீட்டின ஓலை, குறிப்பு-கருத்து, விடதாரி-வைத்தியன், பாங்கு அறியா-செய் நன்றி அறியா, புல் அறிவாளர்-அற்ப புத்தியுள்ளவர், கலம்-மட் பாண்டம், உற்றுழி-துன்பம் நேர்ந்த இடம், மாமலை-பெரிய மலை, பிணி-நோய்.

## 2. நீதி வெண்பா

### நல்லோர் எங்கும் பிறக்கலாம்

1. தாமரை பொன்முத்துச் சவரங் கோரோசனை பால்
பூமருதேன் பட்டுப் புனுகு சவ்வாது-ஆமழல் மற்று
எங்கே பிறந்தாலும் எள்ளாரே நல்லோர்கள்
எங்கே பிறந்தாலும் என்?

### புல்லியர் புண்ணியர் ஆகார்

2. கற்பூரம் போலக் கடலுப்பு இருந்தாலும்
கற்பூரம் ஆமோ கடலுப்பு—பொற்பூரும்
புண்ணியரைப் போல இருந்தாலும் புல்லியர்தாம்
புண்ணிய ராவாரோ புகல்.

## நல்ல பிள்ளை ஒன்று போதும்

3. பொற்பறி வில்லாத பல புத்திரப்பே றெய்தலினுர்
நற்புதல்வனைப் பெறுதல் நன்ருமே—பொற்
பன்றி பல குட்டி பயந்ததனு லேதுபயன் [கொடியே
ஒன்றமையாதோ கரிக் கென் ருேது.

## உத்தமரை வருத்தியும் நற்குணம் தோன்றும்

4. பொன்னும் கரும்பும் புகழ்பாலும் சந்தனமும்
சின்னம் படவருத்தம் செய்தாலும்—முன்னிருந்த
நற்குணமே தோன்றும் நலிந்தாலும் உத்தமர்பால்
நற்குணமே தோன்றும் நயந்து.

## ஈயும் போது எப்படி இருப்பர் என்பது

5. உத்தமர்தாம் ஈயுமிடத் தோங்குபனை போல்வாரே
மத்திமர்தாம் தெங்குதனை மாறுவரே —முத்தலரும்
ஆங் கமுகு போல்வார் அதமர் அவர்களே
தேங் கதலியும் போல்வார் தேர்ந்து.

## பிறந்த இடத்தே பெருமை இல்லை

6. ஆனை மருப்பும் அருங் கவரி மான்மயிரும்
கான வரியுசிரும் கற் ருேரும்—மானே
பிறந்த விடத் தன்றிப் பிறிதொரு தேயத்தே
சிறந்த விடத்தன்ருே சிறப்பு.

## அரும் பதவுரை

சவரம்-வெண்கவரி, அழல்-நெருப்பு, எள்ளார்-இகழார், புல்லியர்-கீழானவர், பொற்ற-அழகு, சின்னம்-சிறுமை,

நலி-வருந்து, பனை-உதவி வேண்டாமல் உதவும் குணம் உள்ளது, கமுகு-கணக்கற்ற உதவியைப் பெற்றுச் சிறிது உதவுவது, கதலி-வாழை-மிக்க உதவிபெற்றுக் கொள்ளுமாறு செய்வது. மருப்பு-கொம்பு, கான வரி-காட்டுப்புலி, உகிர்-நகம்.

---

# 3. நல்வழி

## வராதவை வாரா வருபவை போகா

1. வருந்தி யழைத்தாலும் வாராத வாரா
பொருந்துவன போமினென்றாற் போகா—இருந்தேங்கி
நெஞ்சம் புண்ணாக நெடுந்தூரம் தாம் நினைந்து
துஞ்சுவதே மாந்தர் தொழில்.

## நல்லவர் எப்பொழுதும் கொடுப்பார்

2. ஆற்றுப் பெருக்கற் றடிசுடுமந் நாளுமவ்வாறு
ஊற்றுப் பெருக்கால் உலகூட்டும்—ஏற்றவர்க்கு
நல்ல குடிப்பிறந்தார் நல்கூர்ந்தா ரானாலும்
இல்லையென மாட்டார் இசைந்து.

## மாண்டார் மீள மாட்டார்

3. ஆண்டாண்டு தோறும் அழுது புரண்டாலும்
மாண்டார் வருவரோ மாநிலத்தீர்—வேண்டா
நமக்கும் அதுவழியே நாம்போ மளவும்
எமக்கென் னென்றிட்டுண் டிரும்.

## பாழாகும் இடம்

4. நீறில்லா நெற்றி பாழ் நெய்யில்லா உண்டி பாழ்
ஆறில்லா ஊருக்கு அழகு பாழ்—மாறில்
உடற்பிறப் பில்லா உடம்பு பாழ் பாழே
மடக்கொடி யில்லா மனை.

## இல்லாதவனை மனைவியும் மதியாள்

5. கல்லானே யானாலும் கைப்பொருளொன் றுண்டா [யின்
எல்லாருஞ் சென்றங் கெதிர்கொள்வர்—இல்லானை
இல்லாளும் வேண்டாள் மற்றீன்றெடுத்த தாய்வேண் [டாள்
செல்லா தவன் வாயிற் சொல்.

## கடவுள் செயல்

6. ஒன்றை நினைக்கின் அதுவொழிந்திட் டொன்றாகும்
அன்றி யதுவரினும் வந்தெய்தும்—ஒன்றை
நினையாத முன்வந்து நிற்பினும் நிற்கும்
எனையாளும் ஈசன் செயல்.

ஔவையார்.

## அரும் பதவுரை

போமின்-போங்கள், துஞ்சுவது-சாவது, பெருக்கு-வெள்ளம், நல்கூர்ந்தார்-ஏழையர், நீறு-திருநீறு, உடற்பிறப்பு-அண்ணன் தம்பி, மடக் கொடி-இளம்பெண், இல்லாள்-மனைவி.

---

# 4. பழமைப் பாட்டு

## தேசிங்கு ராஜன் கதை

பல்லைப் படபட வென்று கடித்துப் பதறி யெழுந் தானும்

கண்கள் நெருப்புப் பொறி பறக்கக் கனைத்தெழுந்தானும்
தாயைச் சுற்றி வலமாய் வந்து சரணம் செய்தானும்
கும்பிட் டெழுந்தே எதிரில் நின்று கூசாமற் சொல்வான்
எனக்கு நல்ல வரந்தர வேணும் என்னைப் பெற்ற தாயே
எட்டு நாளையில் இங்கே வருவேன் என்னைப்பெற்றதாயே
அனுப்புக என்ற செய்தி கேட்டே அலறி விழுந்தாளாம்
பூமியில் விழுந்த தாயைப்பார்த்துப் பின்னே நடந்தானும்
சங்கரா பரணியில் ஸ்நானம் செய்தே ஜல்தியோடிவந்து
அரங்கர் கோயில் புகந்தானையா ராஜா தேசிங்கு
கும் பிட்டெழுந்தே எதிரில் நின்றான் குழந்தை தேசிங்கு
சவாரி செய்ய டில்லிக்குப் போறேன் சாமி ரங்கநாதா
கூட விருந்து சவாரி செய்து கொண்டு திருப்புமையா
என்ற சொல்லைக் கேட்டு மகிழ்ந்தார் ரங்கநாதசுவாமி
போய்விட்டுவாடாபோய்விட்டுவாடாபுத்தியுள்ளமகனே
என்று சொல்லி விடையும் கொடுத்தார் ரங்கநாத சுவாமி
கும் பிட்டெழுந்து வெளியில் வந்தார் குழந்தை தேசிங்கு.

குறிப்பு:—வீரம் மிகுந்த தேசிங்கு மன்னனின் செயல்களைக் குறிக்கும் பாடல்களை தெருப் பாடகர் பாடுவது நாம் அறிந்ததே. ராஜா தேசிங்கு அல்லது தேசிங்கு ராஜன் செஞ்சி கோட்டையிலிருந்து சுயேச்சையாக பதினேழாம் நூற்றாண்டில் ஆண்டு வந்தார். இவர் இளமைப் பருவத்தில் டில்லிக்குச் சென்று முரட்டுக் குதிரையை அடக்கி, நவாபின் மதிப்பையும் பெற்று தன் தகப்பனாரைச் சிறை மீட்டு வந்தார்.

# 5. நாட்டுப் பாட்டு

(செந்தமிழ் நாடெனும் போதினிலே என்ற மெட்டு)

1. பாரத நாடென்று போற்றுகின்றோம்—அதன்
பண்டைப் பெருமையைச் சாற்றுகின்றோம்.
பாரத இந்திய நாட்டினையே—போற்றிப்
பாடுவோம் பைந்தமிழ்ப் பாட்டினையே.

2. இந்தியத் தாயென்று வாழ்த்துவமே— மனத்து
இன்ப மிக முடி தாழ்த்துவமே.
இந்திய பாரத மெந்திரு நாடென்று
யாவரும் கேட்கவே யோதுவமே.

3. வீரம் பிறந்த திருநாடு—கலை
மேன்மை சிறந்த பெரு நாடு.
ஈரம் நிறைந்த நன் மக்களே வாழ்வுறும்
இந்திய பாரதம் எம்மகமே.

4. மானம் பொலிந்த பெரு நாடு—கொண்ட
வண்மை மலிந்த வள நாடு.
ஞானம் நிறைந்த மெய்ஞ்ஞானியர் வாழ்ந்தது
நம்முடை யிந்திய நாடலவோ.

5. வான்மிகர் வாழ்ந்த திரு நாடு—கம்பர்
வள்ளுவர் வாழ்ந்த திரு நாடு.
மான்மியம் வாய்ந்த தலங்கள் பல கொண்ட
வாழ்வுரும் பாரத நாடலவோ.

6. வடக்கில் இமயம் உள நாடு—தெற்கில்
வாழ்ந்த குமரி வள நாடு.
குடக்கிற் குணக்கிற் கடலெல்லை கொண்டு
குலவுவது இந்திய நாடலவோ.

**அரும் பதவுரை**

பண்டை—பழைய, ஈரம்—அன்பு, வண்மை—மிகவும் கொடுக்கும் குணம், மான்மியம்—பெருமை.

# புதுமுறைத் தமிழ் வாசகம்

## ஐந்தாம் வகுப்பிற்குரியது

[1939-ல் வெளியிடப்பட்டுள்ள ஆரம்பப் பாடசாலைகளின் பாடத்திட்டத்தை அனுசரித்து எழுதப்பட்டுள்ளது]

ஆசிரியர் :
பண்டித N. கனகராஜையர்,
தமிழாசிரியர், மஹாராஜா கலாசாலை, புதுக்கோட்டை.



T. G. கோபால் பிள்ளை
பதிப்பாளர்

தெப்பக்குளம் | 2/27, பிராட்வே
திருச்சிராப்பள்ளி | ஜி. டி., சென்னை

[பதிப்புரிமை] 1952 [விலை அணா 9

*First Edition* 1939.
*Reprinted* 1940, *May* 1941, *August* 1941, 1942, 1943, 1944, 1945, 1946, 1947.
*Revised Edition April* 1948.
*Reprinted* 1949, *June* 1949, *August* 1949, *July* 1950, *July* 1951, *June* 1952.

APPROVED FOR CLASS USE
BY THE MADRAS TEXT-BOOK COMMITTEE
(*Vide Consolidated list Published in the Fort St. George Gazette, Supplement to part I-B, dated 7th May* 1952, *Pages* 27 & 100 *of Parts I & II respectively*)

**Kabeer Printing Works, Madras (1949)**

# முகவுரை

இளங்குழந்தைகள் கற்கும் கல்விமுறை புதுமை பெற வேண்டும் என்னும் கருத்தால், சென்னை அரசாங்கத்தார் 1939-ல் வெளியிட்ட புதிய பாடத்திட்டத்தை யொட்டி, இவ் வாசக வரிசைகள் இயற்றப் பெற்றுள்ளன. ஒவ்வொரு பாடத்திலும் புதுமுறை புகுத்தப் பெற்றிருத்தல், அவ்வப் பாடத்தின் பின்னுள்ள பயிற்சிகளால் நன்கு விளங்கும்.

கதைப் புத்தகங்களைத் தாமே படித்துப் பழகவும் பத்திரிகைகளைப் படித்துப் பொருள் அறியவும் சிறுவர்களுக்குப் பயிற்சி யளிக்கப்படவேண்டும் என்று சென்னை அரசாங்கத்தார் கருதுவதால், அம்முறைக்கு ஏற்ற பாடங்களும் இவ் வாசகங்களில் அமைக்கப்பட்டுள்ளன. நீதிகளை விளக்கும் பாட்டுக்களும், குழந்தைகள் மனத்தைக் கவரத் தக்க இசைப் பாட்டுக்களும், நாடக முறையில் இயன்ற பாடங்களும் போதிய அளவு இவ் வாசகங்களில் சேர்க்கப் பெற்றுள்ளன. இங்ஙனம் இயன்றுள்ள இப் **புதுமுறைத் தமிழ் வாசகங்கள்** நம் நாட்டுச் சிறுவர்களுக்கு நலந்தருவன ஆகும்.

கல்வி அதிகாரிகளும், கல்விச்சாலை ஆசிரியர்களும், கல்வி யபிமானிகளும் இவ்வாசகப் புத்தகங்களைத் தங்கள் பள்ளிக்கூடங்களில் பாடப்புத்தகமாக்கி ஆதரித்து, என்னை இப்பணியில் ஊக்கமுறச் செய்யுமாறு வேண்டுகிறேன்.

இங்ஙனம்,

N. கனகராஜையர், B.O.L

# பொருளடக்கம்

# புதுமுறைத் தமிழ் வாசகம்

## ஐந்தாம் வகுப்பிற்குரியது

### 1. பாடம் படித்தல்

பாடம் படித்தலிற் சில முறைகள் உண்டு. அவற்றை நன்ருய்த் தெரிந்து கொண்டால், நாம் நல்ல பயன் பெறுவோம். அவை பின் வருமாறு: நின்று




படித்தாலும், அமர்ந்து படித்தாலும் புத்தகம் முகத்தை மறைக்கக் கூடாது; மார்பிற்கு நேராக இருப்பது நல்லது. கண்ணுக்கும் புத்தகத்துக்கும் இடையில் சுமார் பத்து அங்குல தூரம் இருத்தல் வேண்டும். வெளிச்சம் புத்தகத்தில் விழும்படி விளக்கை வைத்துக்கொண்டு படிக்கவேண்டும்.

முதுகை வளைத்துக் குனிந்து படித்தல் கூடாது. நேராக நிமிர்ந்து நிற்பதே எப்பொழுதும் நல்லது.

எழுதும்போதும் இவ்விதியைக் கடைப்பிடிக்க வேண்டும். நடந்து கொண்டும், படுத்துக்கொண்டும் படிப்பதால் நன்மையைக் காட்டிலும் தீமையே அதிகமாம்.

ஒரே குரலில் ஏற்றத் தாழ்வு இல்லாமல் படித்தால், நாம் என்ன படிக்கிறேம் என்பது பிறருக்கு விளங்காது. நமக்கு விளங்குவதோடு, நம்முன் இருந்து கேட்பவருக்கும் விளங்கும்படி படிக்கவேண்டும். துக்கம், மகிழ்ச்சி, கோபம் முதலிய உணர்ச்சிகளை வெளியிடும் வாக்கியங்கள் வரும்போது, அந்தந்த உணர்ச்சி தோன்றும்படி படிக்கவேண்டும்.

சில பாடங்கள் நமக்குப் பழக்கமான விஷயங்களைச் சொல்லும்; அவை நமக்கு எளிதில் விளங்கும். சில நாம் அறியவேண்டிய புதுப்பொருள்களைப் பற்றிச் சொல்லும். எதுவாய் இருந்தாலும், நாம் மெல்ல நிறுத்திப் படித்தால், விஷயத்தைத் தெளிவாய்த் தெரிந்து கொள்ளலாம். ஒரு முறை படித்து அறிய இயலாததை இரண்டு மூன்று முறை படித்தால் தெளிவாகத் தெரிந்து கொள்ளலாம்.

எழுத்து எழுத்தாக நிறுத்தி, மெல்லப் படிப்பதும் கூடாது; ஒரே வேகமாக விரைந்து வாசிக்கவும் கூடாது. மெல்லப் படித்தால், நாம் படிக்கும் பொருளிலுள்ள சுவை கெடும். விரைந்து வாசித்தால் சுவையே தெரியாது. படிக்கும் குரல் மெல்லியதாக இருப்பதே நல்லது. பெருங்குரல் எடுத்துக் கத்துவதால், படிப்பவர்க்கும் கேட்பவர்க்கும் அருவருப்பு உண்டாகும்.

படிக்கும்போது, அறிவு படிப்பில் ஊன்றியிருக்க வேண்டும். வகுப்பில் ஒருவன் படிக்குங் காலத்தில் மற்றவர்கள் எல்லோரும் கவனித்துக் கொண்டிருந்தால் அல்லாமல், படிக்கும் [illegible]

கொள்ள முடியாது. கண் புத்தகத்திலும், வாய் வம்பு பேசுவதிலும், மனம் வேறு நினைவிலும் இருந்தால் படித்தது மனத்தில் பதியாது.

படிக்கும் வாக்கியங்களைச் சிற்சில இடங்களில் நிறுத்திப் பொருள் பொருந்துவதற்கு ஏற்றவாறு பார்த்து வார்த்தைகளைச் சேர்த்தும், பிரித்தும் வாசிக்க வேண்டும். இரண்டு மூன்று சொற்கள் சேர்ந்த தொடர்கள் வரும் இடங்களில், அவற்றின் பொருளை அறியும்படி நிறுத்திப் படிக்க வேண்டும்.

நிறுத்திப் படிக்கும் வழியைத் தெரிந்துகொள்வதற்காகச் சில **நிறுத்துக் குறிகள்** இருக்கின்றன. அச்சுப் புத்தகங்களில் அவைகளைப் பார்க்கலாம். அந்த நிறுத்துக் குறிகளைப் பற்றி நீங்கள் தெரிந்து கொள்வது அவசியம்.

, இது காற்புள்ளி. இதற்கு, '**காமா**' என்று பெயர். இது வரும் இடங்களில் ஒரு மாத்திரை நேரம் நிறுத்தவேண்டும்.

; இது அரைப் புள்ளி. இதற்கு '**செமிகோலன்**' என்று பெயர். இது வரும் இடங்களில் இரண்டு மாத்திரை நேரம் நிறுத்தவேண்டும்.

: இது முக்காற் புள்ளி. இதற்கு, '**கோலன்**' என்று பெயர். இது வரும் இடங்களில் இரண்டு மாத்திரை நேரம் நிறுத்தவேண்டும்.

இது முற்றுப்புள்ளி. இது '**புல்ஸ்டாப்**' எனப்படும். வாக்கியம் முடியுமிடத்தில் இது வரும். இங்கு நான்கு மாத்திரை நேரம் நிறுத்த வேண்டும்.

? இது **'கேள்விக் குறி'**. இது வரும்போது கேள்வி கேட்பது போலப் படிக்கவேண்டும்.

! இது **'ஆச்சரியக் குறி'**. ஆச்சரியம், துக்கம், சந்தோஷம் முதலிய உணர்ச்சிகளைத் தெரிவிக்கும் இடங்களில் இதை உபயோகிக்கவேண்டும்.

" " இவை **'மேற்கோட் குறிகள்'**. மற்றவர் சொல்லியவற்றை நாம் எடுத்துக் கூறும்போது இவற்றைக் குறிக்க வேண்டும்.

| | | |
|---|---|---|
| காமா | ஒரே குரல் | முதுகு நிமிர்ந்து |
| கோலன் | அரைப் புள்ளி | முதுகு வளைந்து |
| செமிகோலன் | பெருங்குரல் | மார்பிற்கு நேராய் |
| புல்ஸ்டாப் | புதுப்பொருள் | மனத்தில் பதியாது |
| கேள்விக்குறி | ஆச்சரியக்குறி | பொருந்துவதற்கு |
| முக்காற்புள்ளி | ஏற்றத்தாழ்வு | |

அரும்பதவுரை: குறி - அடையாளம். ஆச்சரியம் - வியப்பு. பொருந்துவதற்கு - அமைவதற்கு. ஏற்றத் தாழ்வு - அதிகம் குறைவு. மேற்கோள் - முன்னோர் சொல்லியதை எடுத்துக் கொள்ளுதல். பதியாது - ஊன்ருது, தங்காது. (ஏற்றம் + தாழ்வு=ஏற்றத்தாழ்வு.)

### பயிற்சி

I. இப்பாடத்தில உள்ள இரண்டாவது பாராவில் எத்தனை வாக்கியங்கள் இருக்கின்றன. ஒவ்வொரு வாக்கியத்திலும் உள்ள எழுவாய், பயனிலை, செயப்படுபொருள்களை எடுத்துக் கூறு.

II. முறை, விதி, குரல், பொருள், சுவை, அருவருப்பு, ஊன்றி, பதியாது, குறி, வம்பு—இவ்வார்த்தைகள் ஒவ்வொன்றையும் ஒவ்வொரு வாக்கியத்தில் அமைத்துக் கூறு.

### கேள்விகள்

1. படிக்கும் முறைகள் யாவை?
2. படிக்கும்போது வெளிச்சம் எப்படி வரவேண்டும்?
3. நிறுத்திப் படிப்பது எதற்காக?
4. நிறுத்துக் குறிகள் எவை?
5. மேற்கோள் குறிகளை எங்கே உபயோகிக்க வேண்டும்?

## 2. சோழ நாடு

முற்காலத்தில் தென்னிந்தியாவைச் சேரர் சோழர், பாண்டியர் என்ற மூன்று வமிசத்தார் அ சாண்டு வந்தனர். அவருடைய நாடுகள் முறைே சேர நாடு, சோழ நாடு, பாண்டிய நாடு என்று சொ லப்படும். இவைகளில் சோழநாடு கல்வி, செல்வ முதலியவற்றில் சிறந்து விளங்கியது.

இக் காலத்திலுள்ள தஞ்சாவூர், திருச்சிரா பள்ளி, தென் ஆற்காடு முதலிய ஜில்லாக்கள் அ காலத்தில் சோழ நாடாக இருந்தன. இந்த நா மிகவும் பழமையானது. காவிரி நதி சோழ நாடெ கும் பாய்ந்து, அதை நீர்வள முடையதாகச் செய் வருவதால், அது **புனல் நாடு** எனப்படும். காவ ரிக்குப் 'பொன்னி' என்ற பெயரும் உண்டு. ஆன யால், சோழ நாட்டுக்குப் **பொன்னி நாடு** என்னு மற்ெருரு பெயரும் வழங்கும். இந்த நாட்டில் நெ முதலிய தானியங்கள் நன்கு விளைவதால், மக்களுக்கு உணவுப் பொருள்கள் குறைவின்றிக் கிடைக்கின்றன அதனால் இந்நாடு '**சோழ வளநாடு சோறுடைத்து** என்று ஔவையாரால் புகழப் பெற்றது.

சோழ மன்னர்களுக்கு ஐந்து தலைநகரங்கள் இருந்தன. அவை கரூர், உறையூர், திருவாரூர் திருச்செய்ஞலூர், காவிரிப்பூம் பட்டினம் என்பவை ஆயினும் அவற்றுள் உறையூரிலும் காவிரி பூம்பட்டினத்திலுமே சோழ மன்னர்கள் பெரு பாலும் இருந்து அரசாட்சி செய்து வந்தார்கள் உறையூர் தற்போது திருச்சிராப்பள்ளி நகரை சார்ந்துள்ளது. தஞ்சை ஜில்லாவில் காவிரியாறு கடலோடு கலக்குமிடத்தில் காவிரிப்பூம் பட்டின

இருந்தது. அது அக்காலத்தில் சோழ நாட்டின் துறைமுகப் பட்டினமாகவும் இருந்தது. வர்த்தகத்தின் பொருட்டு அத்துறைமுகத்தில் வந்து தங்கும் கலங்கள் மிகப் பல. காவிரிப்பூம் பட்டினம் எல்லாப் பொருள்களும் நிரம்பியிருந்த ஒரு பெரிய நகரமாயிருந்தது. இப்பொழுது அந்நகரமில்லை; கடலால் கொள்ளப்பட்டது. ஆயினும், இப்பொழுது காவிரி கடலில் சேருமிடத்திற்குச் சமீபத்தில் காவிரிப்பூம் பட்டினம் என்னும் பெயருள்ள ஒரு சிறு கிராமம் உள்ளது.

மிகப் பழைய காலத்திலிருந்து கி. பி. மூன்றும் நூற்றுண்டு வரையில் சோழ மன்னர்கள் பராக்கிரமம் உடையவர்களாய் இருந்தார்கள். அவர்களுக்கு அதிகாரமும், செல்வமும், சிறப்பும் மிகுந்திருந்தன. பிறகு அவர்களுடைய பலம் குன்றினமையால், பல்லவர் என்ற ஓர் அரச மரபினர் அவர்களை வென்று சோழ நாட்டைத் தம் வசப்படுத்தி ஆண்டுவந்தனர். ஒன்பதாம் நூற்றுண்டு வரையில் பல்லவர் ஆட்சி ஓங்கி யிருந்தமையால், அக் காலத்துச் சோழர்களைப் பற்றி யாதொன்றும் தெரியவில்லை.

பத்தாம் நூற்றுண்டில் மீண்டும் சோழவம்சம் தலையெடுத்துப் பதின்மூன்றும் நூற்றுண்டு வரையில் சிறப்புடன் விளங்கிற்று. சோழ நாட்டில் பற்பல அரசர் தோன்றினுர்கள். அவர்கள் பல்லவர்களையும் பாண்டியர்களையும் வென்று கீர்த்தி பெற்றுர்கள். அக்காலத்தில் சோழ நாடு பெரிதாயிற்று. அது வடக்கே நெல்லூர் முதல் தெற்கே கன்னியாகுமரி வரையிலும் பரவியிருந்தது.

பிற்காலத்துச் சோழ அரசர்களில் மிக்க கீர்த்தி

பெற்றவன் **பராந்தகன்** என்பவன். அவன் ஒரு சிறந்த வீரன். பாண்டிய அரசர்களை வென்றவன் அவனே. அவன் இலங்கைத் தீவின்மீது படை யெடுத்துச் சென்று அதையும் கைப்பற்றினன். அவன் சைவ சமயத்தைச் சார்ந்தவன். சிதம்பரத்திலுள்ள நடராஜர் கோவிலின் விமானத்திற்குப் பொன் தகடு வேய்ந்தவன் அவனே.

பராந்தகனுடைய சந்ததியில் **இராஜராஜன்** என்ற பெயருள்ள ஓர் அரசன் தோன்றினன். அவ னும் மிக்க புகழ்பெற்றவன். அவன் பல சிவாலயங்



பிரகதீசுவரர் ஆலயம்—தஞ்சாவூர்

களைக் கட்டினன். தஞ்சாவூரில் **இராஜராஜேசுவர** என்னும் சிவன் கோவில் ஒன்று கட்டுவித்தான்

அதற்கு இக்காலத்தில் **பிரகதீசுவரர்** ஆலயம் என்று பெயர் வழங்குகிறது. அதை உங்களிற் சிலர் பார்த்திருக்கலாம். அவன் அரசாளத் தொடங்கிப் பதின்மூன்று வருஷங்களாவதற்குள், தென்னிந்தியா முழுவதையும் வென்றான்; வடக்கில் வேங்கி நாட்டையும் கலிங்க நாட்டையும் கைப்பற்றினான். அவன் காலத்தில் சோழநாடு முன்னிருந்ததைவிடப் பெரியதாயிற்று. அவன் தானடைந்த வெற்றிக்கு அடையாளமாகவே பிரகதீசுவரர் ஆலயத்தைக் கட்டினான்.

இராஜராஜன் மிகுந்த சிவபக்தி உடையவன்; சிவாலயங்களுக்கு மிகுந்த பொருள் கொடுத்தான். சிதம்பரத்திலுள்ள நடராஜர் கோவிலுக்குத் தங்கத் தட்டுகளையும் பாத்திரங்களையும் ஏராளமாகத் தானம் செய்தான். தில்லை நடராஜர் கோவிலை மூவாயிரம் அந்தணர் அதிகாரிகளாயிருந்து கண்காணித்து வந்தனர். அவர்களுக்குத் **தில்லை வாழ் அந்தணர்** என்று பெயர். இவ்வரசனுடைய சிறந்த பக்தியைக் கண்டு மகிழ்ந்து, அவர்கள் இவனுக்கு **இராஜராஜன் சிவபாத சேகரன்** என்ற சிறப்புப் பெயர் வழங்கினார்கள்.

இராஜராஜனுடைய காலத்தில் சோழநாடு மிக்க சிறப்படைந்து, உயர்ந்த நிலையில் இருந்தது; குடிகள் இன்பமாய் வாழ்ந்து வந்தார்கள். பயிர்கள் நன்றாய் விளைய, நாடு செழிப்புற்றிருந்தது. ஆகையால், சோழநாடு அக்காலத்தில் எவ்வகையிலும் குறைவில்லாத நாடாக விளங்கிற்று. அவன் இருபத்தொன்பது வருஷம் அரசு செலுத்தினான்.

அவனுக்கு மூன்று தலைமுறைகளுக்குப் பின் வந்த அரசர்கள் திறமையுடையவர்களல்லர்; பலமற்ற

வர்கள். சோழர்களுக்கு உட்பட்ட பல சிற்றரசர் ஒருவரோடு ஒருவர் சண்டையிடத் தலைப்பட்டனர் நாட்டில் கலகமும் சண்டையும் தோன்றின. சோழ ருக்கு அடங்கியிருந்த சில சிற்றரசர் சுவாதீனப் அடைந்தனர். சோழருடைய ஆதிக்கம் குறைந்தது அக்காலத்தில் வடக்கே ஓர் இராஜ்யம் மிக்க பிரசித்தி பெற்று விளங்கிற்று. அதற்கு **விஜயநகர இராஜ் யம்** என்று பெயர். விஜயநகரத்தரசன் சோழர்களை வென்று, அவர்களது இராஜ்யத்தையும் தன் வசப் படுத்திக் கொண்டான். ஆகையால், ஒரு காலத்தில் மிக்க புகழ் பெற்று விளங்கிய சோழ இராஜ்யம் மறைந்து போயிற்று. பல்லாண்டுகளாகச் சோழநாடு மாத்திரமன்றி, இந்தியா முழுவதுமே ஆங்கிலேயர் ஆளுகையில் இருந்தது.

| | | |
|---|---|---|
| புனல் | சமீபமாக | கைப்பற்றினன் |
| பொன்னி | ஆதிக்கம் | பழமையானது |
| மீண்டும் | சுவாதீனம் | துறைமுகப்பட்டினம் |
| தலைமுறை | இலங்கை | கடலோடு கலக்கும் |
| பல்லவர் | கண்காணித்து | கடலால் கொள்ளப்பட்டது |
| மரபினர் | கன்னியாகுமரி | சிறந்து விளங்கிற்று. |

அரும்பதவுரை : மரபு - வம்சம், குலம். சுவாதீனம் - சொந்தம், தன்னிஷ்டம். ஆதிக்கம் - மேன்மை, தலைமை முதன்மை. கண்காணித்து - மேல் விசாரணை செய்து. பட்டினம் துறைமுகம் உள்ள ஊர். பட்டணம் - நகரம், பெரிய ஊர் (பொன் + சபை = பொற்சபை. மூன்று + ஆயிரம் = மூவாயிரம்.)

பயிற்சி

I. பின்வரும் வாக்கியங்களிலுள்ள ஒவ்வொரு வார்த்தையும் என்ன சொல் என்று கூறுக :

(1) காவிரிக்குப் பொன்னி என்ற பெயரும் உண்டு.
(2) சோழ மன்னர்களுக்கு ஐந்து தலைநகரங்கள் இருந்தன
(3) மரத்தில் ஏறிப் பழத்தைப் பறி.

II. (1) துறை, துரை; பட்டினம், பட்டணம்; நிரம்பி, நிரப்பி; கலங்கு, கலக்கு—இவ்வார்த்தைகள் ஒவ்வொன்றையும் ஒவ்வொரு வாக்கியத்தில் அமைத்துக் கூறு.

(2) பாய், புனல், விமானம்—இவ்வார்த்தைகளுக்கு இரு பொருள்கள் கூறு.

(3) வென்று, மகிழ்ந்து, தோன்றி, விளைந்து—இவ்வார்த்தைகளைப் பெயர்ச்சொற்களாக மாற்றிக் கூறு.

**கேள்விகள்**

1. முன்னாளில் தமிழ்நாட்டை ஆண்ட அரசர்கள் யார்?
2. சோழ நாட்டின் சிறப்பிற்குக் காரணம் என்ன?
3. இராஜராஜனுடைய ஆட்சியைக் கூறு.
4. சோழர் ஆட்சி எவ்வாறு மறைந்து ஒழிந்தது?
5. சோழர்களுக்குப் பிறகு தமிழ் நாடு யாருடைய வசம் ஆயிற்று?

# 3. நடுநிலைமை குன்றாமை

நமது தேசத்திற்கு வடமேற்கில் வெகு தூரத்தில் **துருக்கி** என்ற தேசமிருக்கிறது. அது முஸ்லிம்கள் வசிக்கும் தேசம். துருக்கி தேசத்து அரசருக்குச் **சுல்தான்** என்று பெயர். அவரும் ஒரு முஸ்லிமே.

துருக்கி தேசத்தில் திமிர்ஞ என்னும் பெயருள்ள ஒரு சிறிய பட்டணமிருந்தது. அங்கு **முகம்மது கான்** என்ற பெயருள்ள ஒரு வர்த்தகன் இருந்தான். அவன் மளிகைக் கடையொன்று வைத்து ஜீவனம் செய்து வந்தான்.

முகம்மதுகான் பேராசைக்காரன். மிக விரைவில் அதிகப் பொருள் சம்பாதிக்க வேண்டுமென்பது அவனுடைய ஆசை. ஆகையால், அவன் தன் வர்த்தகத்தைத் தவறான முறையில் நடத்தி வந்தான். அவனுடைய கடையிலிருந்த படி, தராசு, படிக்கல் முதலியவை சரியான அளவைகளல்ல. இவ்விதமாய் அவன்

கள்ள அளவைகளை வைத்துக் கொண்டு, மக்களை ஏமாற்றி ஏராளமான பணம் சம்பாதித்தான்.

அவனுக்கு **ஆமெட்** என்னும் பெயருள்ள ஒரு குமாரன் இருந்தான். ஆமெட் சிறு வயது முதல் நற்குணமுடையவனாக விளங்கினான். அவன் பொய் சொல்லான் ; பிறர் பொருளை விரும்பான் ; நீதிநெறியினின்றும் தவறான். அவன் எல்லா விஷயங்களிலும்




நேர்மையாகவே நடந்து வந்தான். அனைவரும் அவனை நீதிமான் என்று புகழ்ந்து கொண்டாடினார்கள்.

ஆமெட் குணங்களை யறிந்த சுல்தான் அவனை

பரவழைத்துத் தன்னிடத்தில் ஓர் உத்தியோகத்தில் அமர்த்திக்கொண்டான். கடை வீதிக்குச் சென்று பியாபாரிகள் வைத்திருக்கும் படிகள், தராசுகள் முதலியவை சரியாக இருக்கின்றனவா என்று சோதனை செய்வது அவன் வேலை. அவன் மூன்று சேவகர்களை அழைத்துக்கொண்டு, குதிரையின் மேலேறிச் சென்று, தினந்தோறும் அப்பட்டணத்திலுள்ள கடைகளைச் சோதனை செய்வது வழக்கம்.

ஒரு நாள் அவன் தன் தகப்பனுருடைய கடையைச் சோதனை செய்வதற்காக அங்குச் சென்றான். தூரத்தில் தன் மகன் வருவதைக்கண்ட தகப்பன், சிறிதும் அஞ்சாது, தன் மகன் தன்னுடைய திருட்டுத்தனத்தை வெளிப்படுத்த மாட்டானென்று எண்ணிக் கடையின் வாயிலில் தைரியமாக நின்று கொண்டிருந்தான்.

ஆமெட் கடையின் வாயிலுக்குச் சென்று, குதிரையை விட்டு இறங்கிச் சோதனை செய்யத் தொடங்கினான். முகம்மதுகான் தன் மகனே சோதனை செய்யும் உத்தியோகஸ்தன் என்று எண்ணித் தான் வைத்திருந்த அளவைகளை மறைக்கவில்லை.

ஆமெட் அவைகளைச் சோதனை செய்து, அவை கள்ள அளவைகளென்று தெரிந்துகொண்டான். உடனே அவன் தன் தகப்பனுருக்கு விலங்கிட்டு, நியாயாதிபதியிடம் கொண்டு போகும்படிச் சேவகர்களுக்குக் கட்டளையிட்டான். அவ்வண்ணமே சேவகர்கள் அவனை நீதிபதியிடம் அழைத்துச் சென்றார்கள்.

மறு நாள் விசாரணை நடந்தது. ஆமெட் நியாயஸ்தலத்துக்குச் சென்றான். அங்குத் தன் தகப்பனுரைக் கண்டவுடன் அவன் சாஷ்டாங்கமாகப்

பணிந்தெழுந்து, "தந்தையே, நான் நமத சுல்தானுக்கும், தேசத்துக்கும், எனக்கும், கடவுளுக் கும் சம்மதமாகுமாறு என் கடமையைச் செய்தேன் செல்வரென்றும், தாய் தந்தைய ரென்றும், மற்ற உறவினரென்றும் கருதி நியாய முறை தவறி நடத்தல் ஏற்றதன்று. ஆகையால், நான் என் கடமையை நடு நிலை குன்ருது நிறைவேற்றினேன். என்னை மன்னிக்கவேண்டும்," என்று பிரார்த்தித்தான் தகப்பன் தான் செய்த இழிவான செயலை நினைத்து நினைத்துக் கண்ணீர்விட்டு அழுதான்.

நீதிபதி அவனுக்கு இருபது மோகர் அபராதமும் உள்ளங் காலில் இருபது அடியும் தண்டனையாக விதித்தார். அவன் அபராதத் தொகையைச் செலுத்தி விட்டான். சேவகர்கள் அவனைத் தரையில் படுக்க வைத்து உள்ளங் காலில் சாட்டையினுல் இருபதும் அடித்தார்கள்.

மறுநாள் சுல்தான் இதை அறிந்து, ஆமெட்டி னுடைய நேர்மையை மெச்சி, அவனுக்கு நியாயா பதி உத்தியோகம் கொடுத்தார். முகம்மதுகானும் அது முதல் தன் வர்த்தகத்தை நியாயமாய் நடத்தி வந்தான். தன் குமாரன் உயர்ந்த உத்தியோகம் அடைந்ததைக் குறித்துப் பெரு மகிழ்ச்சி அடைந் தான்.

| | | | |
|---|---|---|---|
| தொகை | நேர்மை | சம்மதம் | முறைதவருத |
| செலுல் | நீதிமான் | இழிவான | வெளிப்படுத்த |
| செல்வர் | சுல்தான் | ஏற்றதன்று | பிரார்த்தித்தான் |
| மோகர் | அபராதம் | உள்ளங்கால் | சாஷ்டாங்கமாக |
| சாட்டை | நீதிநெறி | அவ்வண்ணமே | கள்ள அளவு |

அரும்பதவுரை : அபராதம் - தண்டனைக் கட்டணம். குற்றம் - பிழை. நீதி நெறி - ஒழுங்கு முறை. பிரார்த்தித்தான் - வேண்டினான். சாஷ்டாங்கமாக - உடல் முழுவதும் நிலத்தில் படும்படி. நேர்மை - ஒழுங்கு. (நல் + குணம் = நற்குணம். இருபது + அடி = இருபதடி.)

## பயிற்சி

I. (1) பின்வரும் பெயர்ச்சொற்கள் ஒவ்வொன்றும் இன்ன வகையைச் சேர்ந்தது என்று குறிப்பிடு : பட்டணம், வர்த்தகம், ஆசை, படிக்கல், பணம், நேர்மை, மூன்று, தைரியம்.

(2) முகம்மதுகான், மக்கள், குதிரை, காவிரி, புனல், ஆலயங்கள் - இப்பெயர்ச் சொற்களுக்குத் திணையும் பாலும் கூறு.

(3) இருக்கிறது, சொன்னார்கள், செய்வேன், கொண்டாடுகிறான், அடித்தான் - இவ்வினைச் சொற்களுக்கு மற்றக் காலங்களைத் தெரிவி.

II. நேர்மை, கள்ள அளவு, தவறான, ஏராளமான, சோதனை, நடுநிலை, நிறைவேற்றினான்—இவ்வார்த்தைகளைப் பின்வரும் வாக்கியங்களில் ஏற்றவாறு அமைத்துக் கூறு.

(1) ஆமெட் நீதிநெறியினின்றும்———.

(2) அவன் எல்லா விஷயங்களிலும்———உடையவன்.

(3) முகம்மதுகான்———வைத்துக்கொண்டு——— பொருள் சம்பாதித்தான்.

(4) ஆமெட் கடைகளை———செய்தான்.

(5) ஆமெட் தன் கடமையை———குன்றாது———.

## கேள்விகள்

1. முகம்மதுகான் எப்படிப்பட்டவன் ?
2. முகம்மதுகான் எவ்வித குணமுடையவன் ?
3. முகம்மதுகான் செய்த குற்றம் என்ன ?
4. ஆமெட் நேர்மை எதனால் வெளியாகின்றது ?
5. இக் கதையால் நீங்கள் அறியும் நீதி என்ன ?

# 4. கைத்தொழில்

உழவுத் தொழிலுக்கு அடுத்த நிலைமையில் இருப்பது கைத்தொழிலேயாகும். இந்நாளில் கைத்தொழிலால் பல தேசங்கள் பெருஞ் செல்வம் படைத்துள்ளன. உழவு ஒன்றையே பல நூற்றாண்டுகளாக நம்பி யிருப்பதால், இந்தியாவில் இப்பொழுது செல்வம் குறைந்து போயிருக்கிறது. உழவோடு கைத்தொழிலையும் வளர்த்த அமெரிக்கா, ஜெர்மனி, இங்கிலாந்து, ஜப்பான் முதலிய நாடுகள் இந்நாளிற் பெருஞ் செல்வம் கொழிக்கின்றன.

ஒரு நாடு புகழாற் சிறந்து பிற நாடுகளுக்கு வணங்காதிருப்பதற்குச் செல்வமே பெருந்துணையாம். சீன தேசம் இந்தியாவைக் காட்டிலும் மிகவும் பெரியதாய் இருந்தும் கைத்தொழில் வளர்ச்சி குறைவாய் இருப்பதால், பிறர் கைபார்த்துப் பிழைக்க வேண்டியிருக்கிறது. நம் நாட்டின் பெருமையை உலகம் அறியவும், நம் முன்னோர் நமக்கு வைத்த செல்வத்தின் சிறப்பை நாம் அடையவும் வேண்டுமானால், நாம் கைத்தொழில்களை விருத்திசெய்ய வேண்டும்.

கைத்தொழில் இக்காலத்தில் இருவகையாக நடைபெறுகிறது. ஒன்று கையாலேயே பழைய முறைகளையொட்டி நடைபெறும் தொழிலாம். இத்தொழிலுக்குப் பெரிய தொழிற்சாலைகள் அவசியமில்லை. மக்கள் பலர் வேண்டுமென்பதில்லை ; குடிசையில் இருவர் மூவர் இருந்து செய்யலாம். ஆனால் இப்படித் தொழில் செய்வதால் வரும் ஊதியம் ஒரு சிறு குடும்பத்துக்கே போதியதாயிருக்கும். ஆயிரக்கணக்கில் மனிதர் சேர்ந்து பெரிய தொழிற்சாலைகளில் நடைபெறும் தொழில்கள் உண்டு. இதற்கு எந்திரங்கள் அவசிய

மாகும். பல மனிதர் பல நாள் முயன்று செய்யும்
வேலையை, ஒரு மனிதன் ஒரு எந்திரத்தின் உதவியால்
ஒரு மணியில் நிறைவேற்றலாம். குடிசைத் தொழிலுக்
குக் கேடு நேராத வழியில் இத்தொழில் நடைபெற
வேண்டும். உலகம் எங்கும் எந்திரக் கைத்தொழில்
மிகுந்து, கோடீசுவரர்களும் லக்ஷாதிபதிகளும் பெருகி
வரும் இக்காலத்தில், இந்தியா தேசத்தில் வாழும்
மக்கள் நூதனமான கைத்தொழிலைப் பெருக்காது
வாளாவிருந்து பழைய வழியே பெருவழி என்று இருப்
பது அறிவீனமல்லவா? பழமையோடு புதுமை கலப்
பதே நன்மையாம்.

பழைய முறைப்படி கற்றுவந்த கல்வியே போதும்
என்று இருந்தால், வயிற்றுப் பிழைப்புக்கே வருந்த
நேரிடும். நம் முன்னோர் எழுதப் படிக்கப் பனையோலைச்
சுவடிகள் வைத்திருந்தது நமக்கு நன்றாய்த் தெரியும்.
வித்தியாரம்பம் நடக்கும்போது, ஓலைச்சுவடிகளைக்
கொண்டே எழுத்துக் கற்கும் வழக்கம் இன்றும் நம்
நாட்டில் பல இடங்களில் உண்டு. இந்நாளில் காகித
மும் அச்சுத் தொழிலும் வளர்ந்து, ஒரு நாளில் ஆயிரக்
கணக்கான புத்தகங்கள் வெளிவந்து, கல்விச் செல்
வத்தை வளர்க்க உதவுகின்றன. நாங்கள் முன்பு
இருந்தபடியே ஏட்டுச் சுவடியைத்தான் படித்துக்
கொண்டிருப்போம் என்று இப்பொழுது சொல்வது
நன்றாயிருக்குமா?

நமக்கு அவசியமான பொருள்கள் எவை?
அவைகளை நாம் விலைகொடுத்து வாங்குவதால், எவ்
வளவு பணம் அயல்நாடுகளுக்குப் போகிறது? நம்
நாட்டில் அப்பொருள்களைப் பெரிய தொழிற்சாலைகளிற்
செய்து முடிக்க எவ்வாறு முயற்சி செய்ய வேண்டும்?

அப்பொருளைச் செய்வதற்கு வேண்டிய மூலப்பொருள் கள் நம் நாட்டில் அதிகமாய் அகப்படுமா? மூலப் பொருள்களை அயல் நாடுகளிலிருந்து வாங்கி, இங்கே நாம் தொழில் செய்து பொருள்களை விற்றால் தக்க ஊதியம் கிடைக்குமா? இத் தொழில்கள் அயல் நாடு களில் எப்படி நடைபெறுகின்றன? அந்நாட்டார் பல வகைப் பொருள்களைத் தம் ஊரில் செய்து, கப்பலில் ஏற்றி நம் நாடுகளுக்கு அனுப்பி மிகவும் மலிவாக விற்பது எப்படி? நாமும் அவ்வளவு மலிவாகக் கிடைக் கும்படி இங்கே செய்துகொள்ள முடியுமா? தொழில் தொடங்குமுன்பு இவ்வாறு பல விஞக்கள் எழுகின்றன.

ஆடை வகைகள் அயல்நாடுகளிலிருந்து கோடிக் கணக்கான ரூபாய்களுக்கு நம் நாட்டுக்கு வந்து வியா பாரம் ஆகின்றன. நாட்டில் பல நூற்சாலைகளும் நெசவுச்சாலைகளும் நன்றாய் நடந்தால், இந்த வியா பாரத்தில் வரும் ஊதியம் நம் நாட்டிலேயே இருக்கும். நாமும் பல நூற்றாண்டுகளாகப் பட்டு நெசவு செய்கி ரோம். ஆனால் அயல் நாட்டார் அனுப்பும் பட்டுத் துணிகளைப்போல நேர்த்தியாக நெசவு செய்யக் கூடிய நிலைக்கு நாம் இன்னும் வரவில்லை. அவர்கள் தங் களுக்கு வேண்டிய அளவு வைத்துக்கொண்டு, நமக்கு அனுப்பக் கூடுமென்றால் நாம் ஏன் நமக்கு வேண்டிய அளவாவது நெய்துகொள்ளக் கூடாது? ஜப்பான், சீனா, பிரான்ஸ் முதலிய நாடுகளில் வளரும் பட்டுப் பூச்சிகள் நம் நாட்டில் வளராவோ?

குழந்தைகளின் விளையாட்டுப் பொருள்களும், பொம்மைகளும் வகைவகையாகக் கடைகளில் விற்கக் காணலாம். இவை எல்லாம் ஜப்பானிலிருந்து நமக்கு [redacted]ன்றன. குழந்தைகளுக்கு இந்தப் பொருள்கள்

அவசியம் என்று நாம் எண்ணினால் இவைகளை நம் நாட்டிலேயே நாம் செய்ய வேண்டும். செய்யமுடியாது என்று எண்ணினால், இந்த வியாபாரத்தை அடியோடு நிறுத்திவிடவேண்டும்.

காகிதம், எழுதும் கருவிகள், மை வகைகள், அச்சுத் தொழிலுக்கு உரிய அச்சுகள், எந்திரங்கள் முதலியவை இல்லாவிட்டால் புத்தகங்களையும் பத்திரிகைகளையும் பார்க்க முடியுமா? புத்தகமும் பத்திரிகையும் நமக்கு அவசியமாக இருப்பதால், அவை கிடைப்பதற்கு வேண்டிய தொழில்களை யெல்லாம் நாமே செய்ய வேண்டும். மண்ணெண்ணெய் பூமியின் அடிப்பாகத்திலிருந்து எடுக்கப்படுகிறது. அது நம் நாட்டில் கிடைப்பது அருமை. பலவிதமான மண்ணெண்ணெய் விளக்குகளை நாம் ஏன் செய்துகொள்ளக்கூடாது? அருவிகளின் உதவியால் மின்சாரத்தை மலிவாகப் பெற்றுக் கொள்ளும் நாம், மின்சாரக் கருவிகளை யெல்லாம் இங்கேயே செய்து ஊதியம் பெறவேண்டும். நாம் இப்படி ஒவ்வொரு பொருளாகச் செய்யத் தொடங்கினால், விரைவிலே நம் நாட்டில் செல்வம் பெருகி வளரும்.

| | | |
|---|---|---|
| நிலைமை | எழுகின்றன | அயல் நாட்டார் |
| முயன்று | ஏட்டுச்சுவடி | படைத்துள்ள |
| ஊதியம் | வகைவகையாக | வாளாவிருந்து |
| மின்சாரம் | நேர்த்தியாக | வயிற்றுப் பிழைப்பு |
| அடிப்பாகம் | லக்ஷாதிபதி | வித்தியாரம்பம் |
| நூதனமான | மண்ணெண்ணெய் | கல்விச் செல்வம் |
| நூற்சாலை | விளக்கெண்ணெய் | ஓயாது உழைத்து |
| மூலப்பொருள் | நெசவுச் சாலை | பிறர் கைபார்த்து |

**அரும்பதவுரை :** ஊதியம் - சம்பளம். நூதனமான - புதிய. வித்தியாரம்பம் - படிப்பு ஆரம்பம். நிலைமை - இடம். (வயிற்றுப்

பிழைப்பு=வயிற்றுப்பிழைப்பு. லக்ஷம்+அதிபதி=லக்ஷாதிபதி நூல்+சாலை=நூற்சாலை.)

## பயிற்சி

I. (1) பின்வரும் வார்த்தைகளில் ஒருமைக்குப் பன்மையும் பன்மைக்கு ஒருமையும் கூறு: நாடு, கை, மனிதர், அவை, நா கள், சாலை, ரூபாய், துணிகள், ஊர், இது.

(2) பின்வரும் பெயர்ச் சொற்களில் ஆண்பாலுக்கு பெண்பாலும், பெண்பாலுக்கு ஆண்பாலும் கூறு: தகப்பன் மகன், அவள், அரசன், சிறுமி, அண்ணன், தங்கை பையன்.

II. (1) உழவுத் தொழிலுக்கு அடுத்த நிலைமையில் இருப்ப கைத்தொழிலாகும்:—கைத்தொழில் என்ற சொல்லை எழுவாயா வைத்து இவ்வாக்கியத்தை மாற்று.

(2) ஒரு நாடு புகழாற் சிறந்து பிற நாடுகளுக்கு வணங் திருப்பதற்குச் செல்வமே பெருந்துணையாம். 'வணங்காது என்று முடியும்படி இவ்வாக்கியத்தை மாற்றியமைக்க.

(3). சீனதேசம் இந்தியாவைக் காட்டிலும் பெரிதா யிருந்து கைத்தொழில் வளர்ச்சி குறைவாக இருப்பதால், பிறர் கைபார்த்து பிழைக்க வேண்டியிருக்கிறது:—இவ்வாக்கியத்தை மூன்று வா கியங்களாகப் பிரித்துக் கூறு.

(4) விளையாட்டுப் பொருள்களும் பொம்மைகளும் வ வகையாகக் கடைகளில் விற்கக் காணலாம். இவையெல்லா ஜப்பானிலிருந்து நமக்கு வருகின்றன:—இவ்விரண்டு வாக்கிய களையும் ஒரே வாக்கியமாகச் சேர்த்துக் கூறு.

## கேள்விகள்

1. கைத்தொழிலின் இரண்டு வகைகள் எவை?
2. குடிசைத் தொழிலின் வகைகள் சில கூறுக.
3. இக்காலத்தில் நாம் எந்தத் தொழில்களை அவசிய செய்ய வேண்டும்?
4. ஜப்பான் தேசத்தாரிடமிருந்து நாம் தெரிந்து கொள்வ என்ன?
5. செல்வ வளர்ச்சிக்கும் கைத்தொழிலுக்கும் உள் சம்பந்தம் என்ன?

## 5. ரவீந்திர நாத தாகூர்

உலகப் பிரசித்திபெற்ற வங்காளக் கவிஞரான ரவீந்திர நாத தாகூர் கல்கத்தாவில் 1861-ஆம் வருஷம் பிறந்தார். அவர் தந்தையார் பெயர் **மஹரிஷி தேவேந்திரநாத தாகூர்** என்பது. தாகூர் வமிசத்தார் தொன்றுதொட்டுச் செல்வர்கள் ஆவார்கள். வங்காளத்திலே பெரிய பூஸ்திதி உடைய பழமையான குடும்பங்களில் தாகூரின் குடும்பமும் ஒன்ருகும். ரவீந்திரருடைய சகோதரர் அனைவரும் சித்திரம், சிற்பம் முதலிய நற்கலைகளில் சிறந்த தேர்ச்சி உடையவர்கள் என்று உலகம் அறியும்.

ரவீந்திரர் மிகவும் சிறு பருவத்திலேயே தம் தாயை இழந்தார். அவர் தமது புத்தகங்களுள் ஒன்றில், தம் தாயை இழந்த பிறகே உலகத்தில் அன்பின் செல்வத்தைத் தாம் நாடத் தொடங்கியதாகக் கூறுகின்ருர். அந்நாளிலேயே அவர் விண்ணில் அங்குமிங்கும் காற்ருல் அலைப்புண்டு செல்லும் மேகங்களையும், இளங்காற்ருல் அசைந்தாடும் தளிர்களையும், மலர்ந்து மணங்கமழ்ந்து மனத்தைக் கவரும் செடிகளையும், நீர்ப்பெருக்கையும், மாலைக்காட்சியையும், வயலிலே உழவர் உழும் காட்சியையும், பிற இயற்கைக் காட்சிகளையும் கண்டு மனமகிழ்வதுண்டு.

ரவீந்திரர் கல்விப் பயிற்சியை மற்றவர் பெறுவது போல உரிய முறையாற் பெருதிருந்தும், தமது பதினெட்டாம் வயதிலேயே வங்காளி பாஷையில் முதன் முதலாகக் கவிகள் இயற்றலானர். இவர் முதன் முதல் பாடிய பாடல்கள் சூரியோதய அஸ்தமனத்தைப் பற்றிய வங்காளிப் பாட்டுக்களாம். அனுபவம் மிகப் பெருத அக்காலத்தில் பாடிய பாடல்களிலிருந்தே

இவரது இயற்கையறிவும், கவிச் செல்வமும் நன்
விளங்குகின்றன. இவர் இருபத்து மூன்றும் வயதி
மணம் புரிந்துகொண்டு, தம் பூஸ்திதியை மே
பார்க்கத்தொடங்கினர்.



குடும்பப் பொறுப்பை வகித்துக்கொண்டிருந்
அக்காலத்திலும் நம் கவிஞர் வங்காளி பாஷையிலே
பல நாடகங்களையும், கதைகளையும், பாடல்களையு
இயற்றி வெளியிட்டார். இந்நாளில் வங்காள நாடெ
கும் பிரியத்தோடு எல்லோராலும் பாடப்பெறும் பாட
கள் பெரும்பாலும் தாகூரின் பாடல்களே. **கீதாஞ்சலி**
**தோட்டக்காரன்** என்ற செய்யுள் தொகுதிகள் அ

காலத்திலேதான் அவரால் பாடப்பெற்றன. இவை பின்னுளில் ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்பட்டன. ஆங்கில மொழியின் வாயிலாக இச்செய்யுட்கள் உலக மெங்கும் பரவலாயின. ஆங்கிலப் புலவர்களாலும், பிறநாட்டு அறிஞர்களாலும் இச்செய்யுட்கள் மிகவும் பாராட்டப் பட்டமையால், மகாகவிகளுக்கு அபூர்வ மாக அளிக்கப்படுகின்ற **நோபல் பரிசு** நம் புலவருக் குக் கிடைத்தது. அன்று முதல் வங்க நாட்டுப் புதல்வ ராகிய தாகூர் உலகப் பெரும்புலவருள் ஒருவரானர். எல்லா நாடுகளும் அவரை ' நான் முன், நான் முன் ' என்று அழைக்கவும் வரவேற்கவும் தொடங்கின. அந்த முதிய பருவத்திலும் அவர் அவகாசம் கிடைத்த போதெல்லாம், தம் தேக சிரமத்தையும் பொருட்படுத் தாது பல நாடுகளுக்கும் போய்வந்து கொண்டிருந்தார்.

தாகூர் புலவருட் சிறந்த புலவர்; சித்திரம் வல்லாருட் சிறப்புப் படைத்தவர்; நாவன்மை படைத் தாருள் நிகரற்றவர்; ஆங்கில மொழியில் அழகுபெற அமைத்து அருங்கவி பாடும் ஆற்றல் படைத்தாருள் ஒருவர். உலகிலுள்ள மதங்களின் உண்மைக் கொள்கைகளை உணர்ந்து, அவற்றைப் பிறர்க்குரைக்க வல்ல அறிஞருள் தலைவர்; கலைப் பயிற்சியைப் புது முறையிலேயே உலகப் பொதுச் செல்வமாக யாவரும் கருதி ஏற்றுப் போற்றுமாறு செய்யத் துணிந்த சீரியோர்; பெருங் குணங்கட்கெல்லாம் உறையுளாக விளங்கியவர்.

அவரது நூல்களும் செயல்களும் அவர் புகழை வளர்ப்பது ஒருபுறமிருக்கச் சமீப காலத்தில் போல் பூரில் **சாந்திநிகேதனம்** என்ற தம் இடத்திலே, அவர் ஸ்தாபித்த **விசுவபாரதி** என்ற சகல தேச வித்தியா

பீடம் இந்தியாவுக்கே பெரும்புகழ் விளைவிப்பத யுள்ளது. அதன் பெருமையை என்னென்று புகழ வோம்! அத்தகையப் பெரியார் முதுமைப் பருவ அடைந்து, சில ஆண்டுகளுக்கு முன் இறைவன் திருவடிகளை எய்தினர். இவர் புகழ் நிலைத் நிற்பதாக!

| | | |
|---|---|---|
| அறிஞர் | நிகரற்றவர் | உலகப்பிரசித்தி |
| கவிஞர் | ஸ்தாபித்த | மனங்கமழ்ந்து |
| ஆற்றல் | விசுவபாரதி | தொன்றுதொட்டு |
| நாடகம் | வாயிலாக | மனத்தைக் கவரும் |
| பூஸ்திதி | அலைப்புண்டு | உரியமுறையால் |
| உறையுள் | அபூர்வமாக | குடும்பப்பொறுப்பு |
| அவகாசம் | கலைப்பயிற்சி | சாந்திநிகேதனம் |
| நாவன்மை | இயற்றலானர் | வித்தியா பீடம் |
| மஹரிஷி | வரவேற்கவும் | அன்பின் செல்வம் |
| பரவலாயின | நோபல் பரிசு | மொழிபெயர்க்கப்பட்ட |
| தேகசிரமம் | | |

அரும்பதவுரை: ரிஷி - முனிவர், துறவி. உறையுள் இருப்பிடம். அவகாசம் - ஓய்வு, ஒழிவு. நிகரற்றவர் - ஒ இல்லாதவர். நிகர் - ஒப்பு, சமம். ஸ்தாபித்த - நிறுவிய, நாட்டி ஏற்படுத்திய. அபூர்வமாக - அருமையாக. ஆற்றல் - திறை சக்தி. தொன்றுதொட்டு - பழமை தொடங்கி. வெகு காலமா நாவன்மை - பேசுந்திறமை. (நிகர் + அற்றவர் = நிகரற்றவ மனம் + கமழ்ந்து = மனங்கமழ்ந்து. நல் + கலை = நற்கலை.)

1. (1) பின்வரும் வாக்கியங்களிலுள்ள தன்மை, முன்னி படர்க்கைப் பெயர்ச்சொற்களை எடுத்துக் கூறு:

நான் உன்னைக் கூப்பிடவில்லை.

நீ என்னுடன் வராதே.

அவன் எங்களோடு பேசுவதில்லை.

(2) தன்மை, முன்னிலை, படர்க்கை இம்மூன் வகை இடங்கள் என்று சொல்லப்படும். தன்மைச் சொற்க

ன்மை இடத்தையும், முன்னிலைச் சொற்கள் முன்னிலை இடத்தை ம், படர்க்கைச் சொற்கள் படர்க்கை இடத்தையும் குறிக்கும்.

(3) காற்று, வேகம், விண், கல்கத்தா, செடி, தாம், இவர், ந்தை, சகோதரன், அவர்—இப்பெயர்ச்சொற்களுக்குத் திணை, ால், எண், இடம், இவற்றைக் கூறுக.

II. தொன்றுதொட்டு, அவகாசம் கிடைத்தபோது, உறையுளா ிருப்பவர், ஆற்றல் படைத்தவர், மனமகிழ்வதுண்டு—இத்தொடர் மாழிகளைப் பின்வரும் வாக்கியங்களில் ஏற்றவாறு அமைக்க.

(1) ரவீந்திரர் அருங்கவி பாடும் ———.

(2) அவர் பெருங்குணங்கட்கெல்லாம் ———.

(3) அவர் இயற்கைக் காட்சிகளைக் கண்டு ———.

(4) அவர் ——— பல நாடுகளுக்கும் போய்வந்தார்.

(5) தாகூர் வமிசத்தார் ——— செல்வர்கள் ஆவார்கள்.

**கேள்விகள்**

1. தாகூர் எந்தெந்த விஷயங்களில் ஆற்றல் படைத்தவர்?

2. அவர் பெற்ற பரிசு யாது? அஃது எதற்காக அளிக்கப் டுவது?

3. அவர் தம் நாட்டிற்குச் செய்துள்ள பெருந்தொண் ாது?

# 6. தேனீ வளர்த்தல்

பலவகை மலர்களில் உள்ள மதுவை எடுத்துத் னது கூட்டில் தேனாக்கி வைக்கும் இயல்புள்ள யைத் தேனீ என்கிறோம். குப்பை கூளங்களில் ழுக்குப் பொருள்களின் மேல் மொய்க்கும் ஈய்க்கும், தனீக்கும் மிகுந்த வேறுபாடு உண்டு. ஈ நமக்கு நாய்களையே வருவிக்கிறது. தேனீயோ தேன்—மழுகு தேன் முதலிய பொருள்களை தயாரித்துக் காடுத்து நமக்குப் பல வகைகளில் உதவுகிறது.

மலைகளில் உயர்ந்த மரங்களில் தேனீக்கள் கூடு கட்டி வாழும். உயர்ந்த மரங்களில் உள்ள கொம்புத் தேன் மிகவும் சுவையுள்ளதாய் இருக்கும். தேனைக் கருதியே நாம் தேனீக்களை நாடுகிறோம். தேனீயில் மூன்று வகைகள் உண்டு. சிறு தேனீ ஒரு வகை; மலைத்தேனீ மற்றொரு வகை; காட்டுத் தேனீ வேறொருவகையாம். காட்டுத் தேனீ மிகக் கொடிய விஷமுள்ளது. அதைப் பிடித்துப் பழக்குவது அருமை. அது தன்னை நெருங்கிய மனிதரைக் கொட்டிப் பெருந்துன்பம் விளைவிக்கும். தப்பி ஓடித் தண்ணீரில் விழுந்தாலும், அங்கும் பறந்து வந்து கொட்டும். நாம் பிடித்து வளர்க்கத் தக்கது சிறு தேனீ ஒன்றே. மலைத் தேனீ தேன் நிறைய கொடுக்கும். மலைகளில் வாழ்வோர் அந்தத் தேனை விற்றுப் பிழைக்கிறார்கள்.



தேனீ மலர்களில் தேன் சேகரித்தல்

சிறு தேனீ கொட்டுவதில்லை என்று எண்ணக் கூடாது. தேள் கொட்டியதுபோலக் கடுக்கும்படி இந்தத் தேனீயும் கொட்டும். தேனீக்கள் கோபத்தோடு கொட்டினால் உடம்பெல்லாம் வீங்கிப்போகும். சிலருக்கு

யக்கமும் வருவதுண்டு. ஆகையால் இவைகளை நெருங்கும் போது மிகவும் ஜாக்கிரதையா யிருக்க வேண்டும்.

தேன் உயர்ந்த பொருளாய் இருப்பதால், நாம் மிகவும் பாடுபட்டுத் தேனீக்களை வளர்க்கவேண்டும். நல்ல தேன் வெகுநாள் வரையில் கெடாது. நீண்ட நாள் இருக்கத் தக்க மருந்துகளைச் செய்ய இது உதவு கிறது. நம் உணவோடு சிறிதளவு தேனைக் கலந்து உண்டால், விரைவிலே உணவு ஜீரணம் ஆகும். பல வகையிலும் நமக்கு அவசியமாய் இருக்கின்ற தேனின் பொருட்டு நாம் தேனீக்களை வளர்க்கிறோம்.

இயற்கையில் சுயேச்சையாக வளரும் பூச்சி யாகிய தேனீயை நாம் பிடித்து வளர்ப்பது சிரமமே



தேன் எடுத்தல்

ஆயினும், அதைப் பிடிப்பதற்குச் சில சுலபமான வழி கள் உண்டு. அவ்வழிகளை அறிந்து அவ்வாறு செய்ய வேண்டும். ஒரு சட்டியில் கொஞ்சம் தேன் மெழுகைத் நடவிக் காடுகளில் வைத்தால், தேனீ தானாகவே வந்து

அதில் கூடு கட்டும். அதை எடுத்துவந்து நாம் வளர்க்கலாம். இருபுறமும் துளையுள்ள பனந்துண்டங்களும் இதற்கு உதவும். நாம் அடிக்கடி நடமாடும் இடத்தில், ஒரு பெரிய மரத்தின் உச்சியில் தேன்கூடு ஒன்று தொங்கினால், நாம் எப்படி அதை வீட்டுக்குக் கொண்டு போவது என்பதைப் பற்றி யோசிக்க வேண்டும். முகத்தைப் பத்திரமாக மூடிக்கொண்டு, காலை வேளையில் மரத்தின்மேல் ஏறிக் கத்தியின் உதவியால் கூட்டைக் கிழித்துவிடாமல் மெல்ல அறுக்க வேண்டும். தேனீக்கள் அங்கும் இங்கும் ஓடும். அவை ஓடுமுன்பு அக்கூட்டத்தில் மிகவும் பெரியதாயும் வனப்புள்ளதாயும் இருக்கும் தேனீயைப் பிடித்து வைத்துக்கொள்ள வேண்டும். இதற்கு **இராணி ஈ** என்று பெயர். பின்பு கூட்டை நமக்கு விருப்பமான இடத்தில் வைத்து இராணித் தேனீயை அதற்குள் விடவேண்டும். மற்றத் தேனீக்கள் எல்லாம் உடனே அதற்குள் வந்து புகும்.



அரசித் தேனீ

தேனீக்களின் குடும்பத்தை ஒரு பெரிய அரசாங்கம் என்னலாம். அங்கு ஆண் தேனீ அதிகம் இல்லை. பெரிய அழகிய பெண் தேனீ, ஆண் தேனீயோடு ஒருமுறை வெளியே பறந்து பழகும். அரசித் தேனீ அன்று முதல் தன் உயிருள்ளவரையில் ஆயிரக் கணக்கான முட்டைகளை இட்டுக்கொண்டே யிருக்கும். தாய்த் தேனீக்குத் தகுந்த உணவுப் பொருள்களை

வேலை செய்யும் தேனீக்கள் தேடிக் கொடுக்கும். கூட்டில் எவ்விதக் குஞ்சுகள் அதிகமாக வேண்டுமோ, அதற்கு ஏற்ற உணவைத் தாய்த் தேனீக்குக்



ஆண் தேனீ



வேலைக்காரத் தேனீ

கொடுத்து, அது இடும் முட்டைகளை வேலைக்காரத் தேனீக்கள் சேர்த்து வைக்கும்.



தற்காலத் தேன் கூடு

தேனீக்கள் குஞ்சுகளையும் முட்டைகளையும் கீழ் அறைகளில் வைத்துத் தேனை மேல் அறைகளில் சேர்க்கும். ஆகையால் தேன் எடுக்க விரும்புவோர்,

மேல் அறைகளை வேருக எடுத்துத் தகரத்தால் செய்த சுழலும் எந்திரத்தில் வைத்துச் சுற்றித் தேன் திரட்டலாம். அப்படிச் சுற்றுவதால் அறைகள் கெட்டுப் போவதில்லை; திரும்பவும் அவற்றைக் கூட்டில் வைத்துவிடலாம்.

தேனீக்களைப் புகையிட்டுக் கொன்று குஞ்சுகளோடும் முட்டைகளோடும் கசக்கிப் பிழிந்து தேன் எடுக்கும் பழைய வழக்கம் மிகவும் கொடியது. அப்படி எடுக்கப்பட்ட தேனில் தேனீக்களும் புழுக்களும் மிதக்கும். மரச்சட்டங்களால் அமைத்த கூட்டில் வளர்க்கப்படும் தேனீக்களைக்கொண்டு அடிக்கடி தேன் பெறலாம். அரசித் தேனீ சில மாதங்களில் வேருேர் அரசியைக் கூட்டில் வைத்து விட்டு வெளியேறும். அந்தச் சமயம் பார்த்து நாம் அதைப் பிடித்து, மற்ருெரு கூட்டில் வைக்கவேண்டும். இப்படியே தேனீக்களைக் கவனமாய் வளர்த்தால், அவை நம்மைக் கொட்டாமல் தேன் கொடுக்கும்.

| | | | |
|---|---|---|---|
| மது | மயக்கம் | திரட்டலாம் | அரசாங்கம் |
| தேன் | கொட்டும் | பனந்துண்டம் | கசக்கிப் பிழிந்து |
| தேனீ | இயல்பு | நீண்டநாள் | ஜாக்கிரதையாய் |
| அரசி | மொய்க்கும் | சுயேச்சையாக | உணவுப் பொருள் |
| குஞ்சு | வேறுபாடு | கடிக்கும் | உயிருள்ளவரையில் |
| மெழுகு | இயற்கையில் | வருவிக்கிறது | புகையிட்டுக்கொன்று |

அரும்பதவுரை: மது - தேன். இயல்பு - தன்மை, குணம். வனப்பு - அழகு. கொம்புத்தேன் - மரத்திலுள்ள கூட்டுத்தேன். சுயேச்சையாக - தன் இஷ்டப்படி.

### பயிற்சி

I. பேசினேன், பேசுகிருய், பேசுவான்—இச்சொற்களைக் கவனி. இவைகளெல்லாம் பேசு என்ற சொல்லிலிருந்து பிறந்தவை. [illegible] வரும் சொற்களின் பகுதிகளைக் கூறு:

நடந்தன, ஓடிற்று, நிற்கிறேன், வருவார்கள், போனால்.

II. தேனீக்களின் குடும்ப ஒற்றுமையைப்பற்றிச் சில வாக்கியங்கள் எழுது.

**கேள்விகள்**

1. தேனீ எத்தனை வகைப்படும்?
2. தேனீக்கும் சாதாரண ஈக்குமுள்ள பேதமென்ன?
3. தேனீயைப் பிடிப்பது எப்படி?
4. அரசித் தேனீயை ஏன் பிடிக்க வேண்டும்?
5. தேன் எடுப்பதில் நல்ல முறை எது?

## 7. உருளைக் கிழங்கு

உருளைக் கிழங்கு என்பது ஒருவகையான செடியின் கிழங்கு. சுமார் ஐம்பது வருஷங்களுக்கு முன்னேதான் உருளைக்கிழங்கை நமது நாட்டினர் உணவுப் பொருளாக உபயோகிக்கத் தொடங்கினர். ஆயினும், இக்காலத்தில் அது நமக்கு மிகச் சாதாரணமான உணவாகிவிட்டது. கோதுமை, நெல், சோளம் முதலிய தானியங்கள் மனிதருக்கு முக்கியமா[ன] உணவுப் பொருள்கள். நமது உடலுக்குப் பலத்தையும் புஷ்டியையும் கொடுப்பதில் உருளைக்கிழங்கை தானியங்களுக்கு அடுத்தபடியாகச் சொல்லலாம். உருளைக்கிழங்குச் செடி ஆதியில் அமெரிக்கா தேசத்தில் பயிரிடப்பட்டது. பின் அங்கிருந்து அதை ஸ்பெயின் தேசத்துக்குக் கொண்டு போய்ப் பயிரிட்டார்கள். பிறகு அது ஐரோப்பாவிலுள்ள பல நாடுகளிலும் பரவிற்று. இப்பொழுது அதை எல்லாத் தேசங்களிலும் பயிரிடுகிறார்கள்.

உருளைக்கிழங்குச் செடி, சுமார் இரண்டடி உயரம் வளரும். அதன் பூ ஊதா நிறமாயும், பழங்கள் நீல நிறமாயும் இருக்கும். அதன் கிழங்குதான் நமக்கு ஆகாரமாக உபயோகப்படுகின்றது. அதை [illegible]

வைத்துத் தோலை உரித்துவிட்டுப் பக்குவப்படுத்தி உட்கொள்வார்கள். நமது உண்டியுடன் உருளைக் கிழங்குக் கறியும் சம்பந்தப்பட்டிருத்தல் இக்காலத்தில் சிறப்பாகக் கருதப்படுகின்றது.

உருளைக் கிழங்குச் செடியை அதன் கிழங்கிலிருந்து உற்பத்தியாக்குகின்றூர்கள் ; கிழங்கில் பல கண்கள் உண்டு. ஒவ்வொரு கண்ணிலும் ஒரு முளை இருக்கும். உருளைக்கிழங்கை ஒவ்வொரு துண்டிலும்



முளை இருக்குமாறு பல துண்டுகளாக்கி, அத்துண்டுகளை ஏறக்குறைய மூன்றடிக்கு ஒன்ருக வரிசையாக நடுவார்கள். செடி வளர வளர வேரில் கிழங்குகள் தோன்றிப் பருக்கும். பிறகு செடியைப் பக்குவமாகப் பிடுங்கி வேரிலுள்ள கிழங்கைப் பறித்தெடுத்துக்கொள்

வார்கள். இச்செடி பீடபூமியிலும் மலை நாடுகளிலும் ஏராளமாகப் பயிராகின்றது. மலை நாடுகளில் உண்டாகும் கிழங்குகள் பெரியவையாவும், மிகுந்த சுவையுள்ளவையாயும் இருக்கும். நமது சென்னை இராஜதானியிலும் உருளைக்கிழங்கைப் பயிரிடுகிறார்கள். நீலகிரியில் விளையும் கிழங்கு மிக உயர்ந்தது.

ஐரோப்பாவிலுள்ள ஏழைகளும் செல்வர்களும் உருளைக்கிழங்கு இல்லாமல் உண்பதில்லை. அயர்லாந்து தேசத்திலுள்ள ஏழைகளுக்கும் உருளைக் கிழங்கே முக்கியமான ஆகாரம். ஐரோப்பியர், உருளைக்கிழங்கி லிருந்து ஒருவிதப் பசையை உண்டாக்கி, அதைத் துணிகளைச் சலவை செய்யும்போது கஞ்சிக்குப் பதிலாக உபயோகிக்கிறார்கள்.

உருளைக்கிழங்கை முதன்முதலில் ஆங்கிலேயர் உண்ணத்தொடங்கியதைக் குறித்து ஒரு கதையுண்டு.

உருளைக்கிழங்கு அமெரிக்காவில் பயிராகிவந்த காலத்தில், அமெரிக்காவிற்குச் சென்ற ஆங்கில மாலுமியொருவன் சில கிழங்குகளை இங்கிலாந்துக்குக் கொண்டுவந்தான். அவன் அவைகளைத் தன் நண்பன் ஒருவனிடம் கொடுத்துப் பயிரிடச் செய்தான். அவை நன்றாகப் பயிராகிக் காய்க்க ஆரம்பித்தன. அவனுக்குச் செடியின் எந்தப் பாகத்தை உண்பதென்று தெரியவில்லை. ஆயினும் அவன் காய்களைப் பறித்துச் சமையல் செய்து சாப்பிட்டான். அவை சுவையாய் இருக்கவில்லை. ஆகையால் அவன் அச் செடிகளை வேரோடு பிடுங்கிக் குப்பையில் எறிந்துவிட்டான்; வேர்களில் கிழங்குகள் தொங்கிக்கொண்டிருந்தன. சில நாட்கள் சென்றபின் வேலைக்காரர்கள் தோட்டத்தில் உள்ள குப்பைகளை எல்லாம் ஒன்றாய்ச் சேர்த்து

தீ மூட்டி எரித்தார்கள். அப்பொழுது குப்பையில் அகப்பட்டு வெந்த உருளைகிழங்கிலிருந்து மணம் வீசிற்று. அச்சமயத்தில் தோட்டத்தின் தலைவன் அந்த நன் மணத்திற்கு உருளைக்கிழங்குகளே காரண மென்று அறிந்து, அவற்றை எடுத்து உண்டான். அவை மிகவும் சுவையாய் இருந்தன. அதுமுதல் ஆங்கிலேயர் அதை உண்ணத் தொடங்கினார்கள்.

| | | | |
|---|---|---|---|
| முளை | மாலுமி | வேகவைத்து | பக்குவப்படுத்து |
| உண்டி | தலைவன் | கருதப்படும் | தோலை உரித்து |
| புஷ்டி | பீடபூமி | உருளைக்கிழங்கு | உற்பத்தியாகும் |
| சலவை | சிறப்பாக | சாதாரணமாக | உட்கொள்ளுவார்கள் |
| ஆதியில் | கோதுமை | அடுத்தபடியாக | முக்கியமான ஆகாரம் |

அரும்பதவுரை : ஆதியில் - முதலில். மாலுமி - கப்பலோட்டி. புஷ்டி - பலம். பீடபூமி - மலையை அடுத்துள்ள உயரமான இடம். உற்பத்தியாக்கு - உண்டாக்கு.

பயிற்சி

I. (1) உண் என்ற பகுதியிலிருந்து பிறக்கும் வினை முற்றுக்களில் ஐந்து கூறு.

(2) நான், நாங்கள், நீர், நீங்கள், அவன் அவள், அவர்கள், அது, அவை என்ற சொற்களை முறையே எழுவாயாக அமைத்து மாதிரியிற் கண்டவாறு தனித்தனி வாக்கியம் கூறு.

மாதிரி : நான் குளித்தேன். (இறந்தகாலம்)
நான் குளிக்கிறேன். (நிகழ்காலம்)
நான் குளிப்பேன். (எதிர்காலம்.)

II. (1) ஐரோப்பாவிலுள்ள ஏழைகளும் செல்வர்களும் உருளைக்கிழங்கு இல்லாமல் உண்பதில்லை—'முக்கிய உணவு' என்று முடியும்படி இவ்வாக்கியத்தை மாற்றி அமைக்க.

(2) ஐரோப்பியர், உருளைக்கிழங்கிலிருந்து ஒருவிதப் பசையை உண்டாக்கி, அதைத் துணிகளைச் சலவை செய்யும் போது கஞ்சிக்குப் பதிலாக உபயோகிக்கிறார்கள் : 'பசை' என்பதை எழுவாயாக வைத்து, இவ்வாக்கியத்தை இரண்டு வாக்கியங்களாகப் பிரித்து எழுது.

**கேள்விகள்**

1. உருளைக்கிழங்கு ஆதியில் எங்கே பயிராகி வந்தது?
2. அது இங்கிலாந்துக்குக் கொண்டுவரப்பட்ட வரலாற்றினைக் கூறுக.
3. உருளைக்கிழங்கு எந்தெந்த வகைகளிற் பயன்படுகிறது?
4. அது எப்படிப்பட்ட இடத்தில் நன்கு பயிராகும்?
5. உருளைகிழங்கைப் பயிர் செய்யும் முறை யாது?

## 8. மீன்

உலகத்தில் வசிக்கும் பிராணிகளை நடப்பன, பறப்பன, ஊர்வன, நீர் வாழ்வன என நால்வகையாகப் பிரிக்கலாம். இவற்றுள் மீன், நீர் வாழ்வனவற்றைச் சேர்ந்தது. மீனை நீரிலிருந்து எடுத்துத் தரையில் போட்டால், சில நிமிஷங்களுக்குள் இறந்துவிடும்.

மீனின் தேக அமைப்பு அது நீரில் வாழ்வதற்கு ஏற்றதாக இருக்கிறது. அதன் உடல் நீண்டு சிறிது உருட்சியான தட்டை வடிவமுள்ளதாய் இருக்கும். அன்றியும், அது மத்தியில் அகன்றும் முன் புறத்திலும் பின் புறத்திலும் ஒடுங்கியும் இருக்கும். மீனின் உடல் இங்ஙனம் அமைந்திருப்பதால், அது தண்ணீரை ஊடறுத்துக்கொண்டு வேகமாய் நீந்திச் செல்லுகிறது.

மீன் முதுகெலும்புள்ள பிராணி. அதன் முதுகெலும்பு பல சிறிய எலும்புகளால் ஆகியது; அவை ஒன்றோடொன்று இணைக்கப்பட்டிருக்கும். ஆகையால், மீன் நீந்தும்பொழுது எளிதாக உடலை வளைத்து, எத்திசையிலும் செல்லுகிறது. மீனின் உடல் முழுவதும் அழகான செதில்கள், வீடுகளில் வேய்ந்திருக்கும் ஓடுகள் போல, ஒன்றின்மேல் ஒன்

ருக அமைந்திருக்கும். அவை பளபளப்பாயும், வழு
வழுப்பாயும் இருக்கும். அச் செதில்களின் கீழ் மீனுக
குத் தோலுண்டு. அத்தோலிலிருந்து கசியும் ஒருவித
எண்ணெய் செதில்களுக்கு வழுவழுப்பைக் கொடுக
கிறது. ஆகையால், மீன் நீரில் வசித்த போதிலும்
அதனுடலில் நீர் ஒட்டிக் கொள்ளுவதில்லை. மீன்
தண்ணீரில் வேகமாய்ச் செல்லுவதற்கும் செதில்
களின் வழுவழுப்பு சாதகமாயிருக்கிறது.




மீன் நீரில் நீந்துவதற்கு உதவியாகச் சிறகுகள்
அமைந்திருக்கின்றன. அவை முதுகில் இரண்டும்
மார்பில் இரண்டும், வயிற்றின் கீழ் இரண்டுமாக
இருக்கும். அவற்றின் சகாயத்தால் மீன்கள் நீரை
பின்புறமாகத் தள்ளி விரைவாக நீந்தும். மீனின்
வாலும் இரண்டு சிறகுகளால் அமைந்ததே. இ
சிறகுகள் அடிப்பக்கத்தில் ஒன்றாக இணைந்திருக்கும்
இச்சிறகுகளே மீன் திசைமாறிச் செல்வதற்கு உத
கின்றன.

சில மீன்களுக்கு உடலின் இருபுறத்திலும் இரண்டு நீண்ட சிறகுகள் உண்டு. அவற்ருல் அவை நீரிலிருந்து கிளம்பிச் சிறிது தூரம் பறந்து மீண்டும் ஜலத்தில் விழும். அவைகளுக்குப் பறக்கும் மீன்கள் என்று பெயர். மீனுக்கு இரண்டு வட்டமான கண்கள் தலையின் இருபுறத்திலும் அமைந்துள்ளன. அவை பெரும்பாலும் சிவப்பாகவும் பளபளப்பாகவும் இருக்கும். விழிகளைக் கண்ணுடி போன்ற பிரகாசமான ஒரு பொருள் மூடிக்கொண்டிருக்கிறது. மீனின் வாய் அகலமானது. அதன் வாயில் மிகவும் கூர்மையான ஊசி போன்ற சிறிய பற்களுண்டு. அவற்றின் உதவியால் மீன் ஆகாரத்தைக் கௌவிப் பிடித்து அப்படியே விழுங்கிவிடும். நீரில் வசிக்கும் மிகச் சிறிய பூச்சி புழுக்களும், கடலிலுண்டாகும் பாசிகளும் மீன்களுக்கு முக்கியமான உணவாம். பெரிய மீன்கள் சிறிய மீன்களையும், முட்டைகளையும் தின்பதுண்டு.

மற்றப் பிராணிகள் உயிரோடிருப்பதற்குக் காற்று அவசியமானதுபோல, மீன் உயிர் வாழ்வதற்கும் காற்று இன்றியமையாதது. மீன் காற்றைச் சுவாசிப்பது மிக்க வியப்பாயிருக்கும். அது நீரில் இருந்துகொண்டே அதில் கலந்திருக்கும் காற்றைச் சுவாசிக்கின்றது. அது எப்படி? மீனுக்கு வாயின் உட்புறத்தில் இரு பக்கங்களிலும் இரண்டு சுவாச உறுப்புக்கள் உண்டு. அவைகளுக்குச் செவுள்கள் என்று பெயர். மீன் சுவாசிக்கும்போது நீரை வாயால் உட்கொள்ளும். அப்போது செவுள்கள் அந்த நீரில் கலந்திருக்கும் காற்றைக் கிரகித்துக் கொள்ளும். நீர் செவுள்களிலுள்ள இரு பிளவுகளின் வழியே வெளிவந்துவிடும்.

இதனுல்தான் மீன் நீரில் சஞ்சரிக்கும்போது இப் பிளவுகள் அடிக்கடி திறக்கப்படுகின்றன.

மீன் பறவைகளைப்போலவே முட்டையிடுகின் றது. ஒரு மீன் பலநூறு முட்டைகளிடும். ஆயி னும் அது பறவைகளைப் போல அடைகாப்பதில்லை. முட்டைகள் நீரில் மிதந்து சூரிய வெப்பத்தால் வெடிக்கும். அவற்றினின்றும் குஞ்சுகள் வெளிப் படும். குஞ்சுகள் வெளிப்பட்டவுடனே, அவை தங் கள் இஷ்டப்படி நீந்தவும் ஆகாரம் தேடவும் தொடங் கும். மீன் குஞ்சுக்கு நீந்தப் பழக்க வேண்டுவ தில்லை. அது தானுகவே நீந்தக் கற்றுக்கொள்ளும்.

மீன்களில் பலவகை உண்டு. சில மீன்கள் படகைப்போல் மிகப் பெரியனவா யிருக்கும். அவை சில சமயங்களில் மனிதனையும் விழுங்கிவிடும். சில மீன்கள் நமது சுண்டு விரலினும் சிறியவை. சில மீன்கள் வட்டவடிவமாய் இருக்கும். சில மீன்கள் வாலைப் போல், நீண்டிருக்கும். சில மீன்கள் சிவப்பு, ஊதா, முதலிய பலவகையான நிறமுடையவை. அவை பார்வைக்கு மிக்க அழகாயிருக்கும். சுருமீன் என்ற ஒரு வகை மீன் உண்டு. இச்சுருமீனிலும் பலவகையுண்டு. ஒருவிதமான சுருவுக்குப் பலமான கொம்பு தலையில் முளைத்திருக்கும். அதற்குக் 'கொம் பன் சுரு' என்று பெயர். அது தன் கொம்பினுல் பெரிய படகுகளையும் குத்திக் கவிழ்த்துவிடும்.

மீன்களை மனிதர்களில் சிலர் ஆகாரமாக உப யோகிக்கிருர்கள். சில மீன்களிலிருந்து ஒருவகை யான எண்ணெய் எடுக்கிருர்கள். அந்த எண் ணெய் மருந்தாக உபயோகிக்கப்படும். மனிதர் மீன் களைப் பிடித்து விற்று ஏராளமான பணம் சம்பாதிக்

கிருர்கள். மீன்களினுல் நமது துரைத்தனத்தாருக்கு மிகுந்த வருமானம் கிடைக்கிறது.

| | | |
|---|---|---|
| நடப்பன | நீர்வாழ்வன | தட்டைவடிவம் |
| பறப்பன | நால்வகை | எத்திசையிலும் |
| ஊர்வன | உருட்சியான | வேய்ந்திருக்கும் |
| சுருமீன் | சாதகமாய் | மீனெண்ணெய் |
| செவுள்கள் | சகாயத்தால் | அடைகாப்பதில்லை |
| செதில்கள் | முதுகெலும்பு | துரைத்தனத்தார் |
| திசைமாறி | இணைக்கப்பட்டு | சம்பாதிக்கிருர்கள் |
| ஊடறுத்து | தேக அமைப்பு | அமைந்திருக்கின்றன |
| ஒடுங்கியும் | மெழுகுவர்த்தி | கௌவிப்பிடித்தும் |
| வழுவழுப்பு | கவிழ்ந்துவிடும் | கிரகித்துக்கொள்ளும் |
| கொம்பன் சுரு | ஒன்ருேடொன்று | |

அரும்பதவுரை: ஊடறுத்து - நடுவே அறுத்து. சாதகமாய் - உதவியாய். சகாயத்தால் - உதவியால், துணையால். இணைக்கப்பட்டு - சேர்க்கப்பட்டு. கிரகித்துக்கொள்ளும் - இழுத்துக்கொள்ளும், ஏற்றுக்கொள்ளும்.

### பயிற்சி

I. (1) நான் என்பது எழுவாயாக வந்தால், வினைமுற்று ஏன் என்று முடிகிறது. இம்மாதிரியே நாங்கள், நீ, நீங்கள், அவன் அவள், அவர்கள் என்பன எழுவாயாக வரும்போது வினைமுற்றுக்கள் முறையே ஓம், ஆய், ஈர், ஈர்கள், ஆன், ஆள், ஆர், ஆர்கள் என்று முடிகின்றன. அது என்பது எழுவாயாக வந்தால், வினைமுற்று து, உம் என்று முடிகின்றது. அவைகள் என்பது எழுவாயாக வந்தால், வினைமுற்று அ, உம் என்று முடிகிறது.

மேற்கூறிய ஏன், ஓம், ஆள், முதலியவற்றிற்கு விகுதிகள் என்று பெயர். விகுதி என்பது சொற்களின் ஈற்றில் உள்ள உறுப்பு ஆகும்.

(2) பின்வரும் வார்த்தை ஒவ்வொன்றும் என்ன சொல்? அவற்றின் பகுதி, விகுதிகளை அறிந்து சொல்லு.

எடுத்தேன், இறந்துவிடும், பார்த்தான், இருந்தால், சென்ருர்கள், அறிந்தேன், செய்தன.

II. கோடுகள் உள்ள இடங்களில் ஏற்ற சொற்களை அமைத்து கூறு :

(1) மீனின் தேக அமைப்பு——————————ஏற்றதாக————.

(2) மீன் குஞ்சுக்கு நீந்தப்————.

(3) சில மீன்கள்————பெரியவையா யிருக்கும்.

(4) சில மீன்கள் நமது————சிறியவை.

(5) சில மீன்கள்————முதலிய————நிறமுடையவை.

(6) மீன்களினால் துரைத்தனத்தாருக்கு————கிடைக்கிறது.

**கேள்விகள்**

1. உலகத்தில் வாழும் பிராணிகளை என்னென்ன வகையாகப் பிரிக்கலாம் ?

2. மீன் தண்ணீரில் வேகமாய் நீந்த முடிவது எதனால் ?

3. அதன் முதுகெலும்பு எவ்வாறு அமைந்திருக்கிறது அதனால் அதற்கு என்ன பயன் ?

4. மீனின் உடம்பில் ஏன் நீர் ஒட்டிக்கொள்வதில்லை ? சிறகுகளால் மீனுக்கு என்ன பயன் ?

5. மீன் சுவாசிப்பது எப்படி ? மீன் மனிதருக்கு எந்தெந்த வகையில் பயன்படுகிறது ?

## 9. பூமி

பிள்ளைகளே, நீங்கள் ஒரு பெரிய தேசத்தில் வசிக்கின்றீர்கள். அதன் பெயர் இந்தியா. அது கிழக்கு, தெற்கு, மேற்கு ஆகிய மூன்று பாகங்களில் கடலால் சூழப்பட்டிருக்கிறது. இந்தியாவைப்போல இன்னும் பல நாடுகள் உண்டு. இந்தியாவை அடுத்துள்ள கடல்களைப் போல் இன்னும் பல கடல்களும் உண்டு. இத்தேசங்களும் சமுத்திரங்களும் சேர்ந்தது பூமி என்பது.

பூமியை நாம் பார்க்கும்போது அது தட்டையாய்த் தோன்றுகிறது அல்லவா ? ஆயினும் உண்

மையில் அது தட்டையானதல்ல. அது ஓர் ஆரஞ்சுப்பழத்தைப் போல் உருண்டையானது. பூமி உருண்டையானது என்பதற்குப் பல சான்றுகள் உண்டு. நீங்கள் சமுத்திரக்கரைக்குச் சென்று, கரையை நோக்கி வரும் கப்பலைக் கவனித்துப் பாருங்கள்.



கப்பல் தூரத்தில் வரும்போது முதலில் பாய் மரம் தெரிகிறது; பிறகு பாய்களும் புகைக்குழாய் முதலியவைகளும் தெரிகின்றன. கப்பல் சமீபத்தில் வந்தபின் அடித்தட்டோடு கப்பல் முழுவதும் தெளிவாய் நமக்குத் தெரிகிறது. பூமி உருண்டையாய் இருப்பதால்தான் நமக்குக் கப்பல் இவ்விதமாகத் தோன்றுகிறது. பூமி தட்டையாய் இருந்தால் கப்பலின் முழு உருவமும் தூரத்தில் சிறிதாகவும், நெருங்கி வர வரப் பெரிதாகவும் தோன்றுமே ஒழிய மேற்கூறியவாறு தோன்ருது.

கப்பல் கரையிலிருந்து சமுத்திரத்தில் செல்லும் பொழுது முதலில் அதன் அடிப்பாகம் மறையும்; பின்பு நடுப் பாகம் மறையும்; கடைசியாக நுனிப் பாகத்தோடு கப்பல் முழுவதும் மறைந்துவிடும். பூமி உருண்டையா யிருப்பதால்தான் கரையிலிருந்து செல்லும் கப்பல் இவ்வாறு படிப்படியாய் மறைகிறது.

எறும்பு ஒன்று ஒரு கிச்சிலிப் பழத்தின்மேல் ஏறி ஓர் இடத்திலிருந்து பக்கங்களில் விலகாமல்

நேராய் ஊர்ந்து செல்லுமானால், முன் புறப்பட்ட இடத்துக்கே வந்து சேருமல்லவா? ஏன்? கிச்சிலிப் பழம் உருண்டையாய் இருப்பதனால்தானே; அது போலவே நாமும் பூமியில் ஓர் இடத்திலிருந்து புறப் பட்டு எத்திசையையாவது நோக்கி நேராகச் சென்று கொண்டே இருந்தால், கடைசியில் நாம் புறப்பட்ட இடத்துக்கே வந்து சேருவோம். இதனாலும் பூமி உருண்டை யென்று தெரிகிறது.

இந்த உருண்டையான பூமியின் மேற்பரப்பில் சில பாகம் நிலமாயும், சில பாகம் நீராயும் இருக்கின் றன. நிலமாக இருக்கும் பகுதி தேசம், கண்டம் முதலிய பெயர்களால் வழங்கப்படும். நீராக இருக் கும் பகுதி கடல், சமுத்திரம் என்னும் பெயர்களால் வழங்கப்படும். நிலப் பகுதி ஒரு பங்கும், நீர்ப் பகுதி மூன்று பங்குமாகப் பூமி அமைந்துள்ளது. ஆகை யால், பூமி என்பது நிலமும் நீரும் சேர்ந்த மிகப் பெரிதான ஓர் உருண்டை யென்பதை நீங்கள் நினை வில் வைத்துக்கொள்ள வேண்டும்.

பூமி மிகவும் பெரியதாய் இருப்பதாலும், நாம் பார்ப்பது அதில் மிகச் சிறிய பாகமாதலாலும், அது நமக்குத் தட்டையாய்த் தோன்றுகிறது. இன்னும் அது அசையாமல் இருப்பதாக நமக்குத் தோன்றுகிற தாயினும், உள்ளபடி பூமி அசைந்து கொண்டேதான் இருக்கிறது. பூமி இரண்டு விதமாக அசைகிறது. அந்த அசைவுக்குச் **சலனம்** என்று பெயர்.

பூமியானது ஒரு பம்பரம் சுழல்வதுபோல் தன்னைத்தானே சுற்றிக்கொள்ளுகிறது. தன்னைத் தானே ஒரு முறை சுற்றுவதற்கு இருபத்துநான்கு மணிநேரம் வேண்டும். இந்தச் சலனத்தால் இரவும்

பகலும் உண்டாகின்றன. பூமி ஒரு முறை தன்னைத் தானே சுற்றிக் கொள்கிற கால அளவைத்தான் நாம் ஒரு நாள் என்கிறோம். இப்படிப் பூமி தன்னைத்தானே சுற்றுவதோடு சூரியனையும் சுற்றி வருகிறது. இந்தச் சலனத்தால் **பருவ காலங்கள்** உண்டாகின்றன. பூமி சூரியனை ஒரு தரம் சுற்றி வருவதற்கு முந்நூற்று அறுபத்தைந்தேகால் நாட்கள் செல்லும். இந்தக் கால அளவைத்தான் நாம் ஒரு வருஷம் என்கிறோம்.

இப்பொழுது நீங்கள் பூமியைப்பற்றிக் கவனிக்க வேண்டிய விஷயங்களாவன :

(1) பூமி நீரும் நிலமும் சேர்ந்த ஒரு பெரிய உருண்டை ; அது நம் கண்ணுக்குப் புலப்படுவது போலத் தட்டையானதன்று. (2) அது 24 மணி நேரத்திற் கொருதடவை தன்னைத்தானே சுற்றிக் கொள்ளுகிறது. அதனால் இரவும் பகலும் உண்டாகின்றன. (3) அது ஒரு வருஷத்திற்கு ஒரு முறை சூரியனைச் சுற்றுகிறது. அதனால் பருவ காலங்கள் உண்டாகின்றன.

| | | | |
|---|---|---|---|
| பகுதி | பாய்மரம் | சமுத்திரம் | அடுத்துள்ள |
| கண்டம் | சுழல்வது | கூறியது | சூழப்பட்டுள்ள |
| ஞாபகம் | அடித்தட்டு | படிப்படியாய் | பருவகாலங்கள் |
| சலனம் | விலகாமல் | கிச்சிலிப்பழம் | நெருங்கிவரவர |
| சான்று | நுனிப்பாகம் | புகைக்குழாய் | ஆரஞ்சுப்பழம் |

**அரும்பதவுரை :** சலனம் – அசைவு. சமுத்திரம் – கடல். கண்டம் – பூமியின் நிலப்பகுதியில் ஒரு பெரும் பிரிவு, துண்டு. பகுதி – பாகம். சான்று – சாக்ஷி, உதாரணம்.

**பயிற்சி**

I. (1) பெயர்ச் சொற்களுக்குத் திணை, பால், எண், இடம் இவை கூறுவதுபோலவே, வினைமுற்றுக்களுக்கும் அவை கூறப்படும்.

(உ - ம்.) பூமி தட்டையாகத் தோன்றுகிறது. பூமி என்பது அஃறிணை, ஒன்றன்பால், ஒருமைப் படர்க்கைப் பெயர்ச்சொல். அதுபோலவே, தோன்றுகிறது என்பது அஃறிணை, ஒன்றன்பால், ஒருமை, படர்க்கை, நிகழ்காலம் இவைகளைத் தெரிவிக்கிறது. இவ் வாக்கியத்தில் 'பூமி' என்பது எழுவாய். 'தோன்றுகிறது' என்பது பயனிலை. இதனால் ஒரு வாக்கியத்தில் உள்ள எழுவாயும் பயனிலையும் திணை, பால், எண் இடங்களில் ஒத்து வரும் என்று அறிந்து கொள்க.

(2) பின்வரும் அட்டவணையில் கண்டவற்றைக் கேட்டவாறு முடித்துக் கூறு :

| பகுதி | எழுவாய் | வினைமுற்று | காலம் |
|---|---|---|---|
| நட | மாடு | நடக்கும் | எதிர்காலம் |
| நட | குழந்தை | | நிகழ்காலம் |
| நில் | அவர்கள் | | நிகழ்காலம் |
| நில் | அவைகள் | | எதிர்காலம் |
| வா | யார் | | இறந்தகாலம் |
| வா | நீ | | நிகழ்காலம் |
| போ | நான் | | இறந்தகாலம் |
| போ | பையன்கள் | | எதிர்காலம் |

II. பின்வரும் வாக்கியங்களில் கோடுகள் உள்ள இடங்களில் ஏற்ற சொற்களை அமைத்துக் கூறு.

பூமி உருண்டை வடிவம் ——.
பூமி தட்டை வடிவமுடையது ——.
சூரியன் சுற்றுவதுபோல் ——.
ஆனால் உண்மையில் சூரியன் ——.
பூமி தான் சூரியனைச் —— வருகிறது.
கடற்கரையை நோக்கி வரும் கப்பலின் மேற்பாகம் முத
லில் ——. முதலில் முழுமையும் ——.
கடற்கரையில் இருந்து செல்லும் கப்பலின் அடிப்பாகம்
முதலில் ——. மேற்பாகம் முதலில் ——.

**கேள்விகள்**

1. பூமியின் மேற்பரப்பு எவ்வாறு அமைந்திருக்கிறது?

2. பூமியின் வடிவம் என்ன? அதை விளக்க இரண்டு சான்று ள் கூறு.

3. பூமியின் இரண்டு சலனங்கள் யாவை? இரவும் பகலும் தனுல் உண்டாகின்றன? பருவகாலங்கள் எதனுல் உண்டா கின்றன?

4. பூமி கண்ணுக்குத் தட்டையாகத் தோன்றுவதற்குக் கார ணம் என்ன?

5. கடல் என்பது யாது? கண்டம் என்பது என்ன?

# 10. பருத்திச் செடி

நமது வாழ்க்கைக்கு இன்றியமையாத பொருள் களில் ஆடை ஒன்று. நாம் பெரும்பாலும் பருத்தி ஆடையை உபயோகிக்கிறோம். பஞ்சை நூலாக நூற்று, அந்நூலால் பருத்தியாடை நெய்யப்படு கின்றது. பஞ்சு ஒருவகைச் செடியில் உண்டாகிறது. அச்செடிக்குப் பருத்திச் செடி என்று பெயர்.

பருத்திச் செடி நமது தேசத்தில் மிகுதியாகப் பயிராகின்றது. நமது சென்னை இராஜதானியில் திருநெல்வேலி, இராமநாதபுரம், கடப்பை, கர்நூல், கோதாவரி, கிருஷ்ணா முதலிய ஜில்லாக்களில் அதை அதிகமாகப் பயிரிடுகிறார்கள். இன்னும் அது பம்பாய் இராஜ்யத்தின் பல பாகங்களிலும், குஜராத்திலும், பீஹார் இராஜ்யத்திலும் ஏராளமாகப் பயிரிடப்படு கிறது. ஆயினும் திருநெல்வேலி ஜில்லாவில் விளையும் பருத்தியே மிகச் சிறந்தது. எகிப்து, அமெரிக்கா, ஆஸ்திரேலியா முதலிய தேசங்களிலும் பருத்தி பயிராகிறது.

பருத்தியில் இரண்டு வகையுண்டு. ஒரு வகைக்குச் செடிப் பருத்தி என்று பெயர். ...

ஏறக்குறைய நான்கடி உயரம் வளரும்; பிற படர்ந்து விசாலித்து ஒரு புதர்போல் ஆகும். இந்த செடிப்பருத்தியில் உண்டாகும் பஞ்சுதான் ஆடைக நெய்வதற்கு மிகுதியாக உபயோகப்படுகிறது.

இன்னொரு விதமான பருத்தி மரமாக வள கிறது. அது இந்தியாவிலும், சீன தேசத்திலு காணப்படும். அதற்கு **மரப்பருத்தி** என்று பெயர் அது சுமார் இருபதடி உயரம் வளரும். அதை பயிரிடுகிறவர்கள், அது உயரமாய் வளர்ந்தபி கிளைகளைத் தறித்து விடுவார்கள். அது நன்றாய் காய்க்கும். காய்களுக்குள் பஞ்சும் கொட்டையு நிறைந்திருக்கும். இப் பருத்தி மரங்கள் பல வருஷ கள் நிலைத்து நின்று ஆண்டுதோறும் காய்த்து கொண்டிருக்கும்.

ஆயினும், செடிப்பருத்தியே எங்கும் மிகுதியாக பயிரிடப்படுகின்றது. அதைப் பயிரிடுவதற்குக் கரிச நிலமே ஏற்றது. ஆடி, ஆவணி மாதங்களில் கோடை மழை பெய்தபின், நிலத்தை நன்றாக உழுது, ஆட்டு பிழுக்கை, மாட்டுச்சாணம் முதலியவற்றை எருவா இடுவார்கள். எலும்புத்தூள், பிண்ணாக்கு முதலி வற்றையும் எருவாக உபயோகிப்பதுண்டு. விதை பதற்கு வேண்டிய பருத்தி விதையைத் தே தெடுத்து, அதில் ஒட்டிக்கொண்டிருக்கும் பஞ் போகும்படிச் சாண நீரில் ஊறவைத்து உலர்த் வைத்துக் கொள்வார்கள்.

ஆவணி, புரட்டாசி மாதங்களில் மீண்டு நிலத்தை உழுது படைச்சாலில் விதையை விதை பார்கள். சிலர் பருத்தி விதைகளைத் தெளித் விதைத்து, அவை முளைத்து ஓரடி உயரம் வளர்

பின் அவற்றைப் பிடுங்கி இரண்டு மூன்றடிக்கு ஒன்ருக வரிசையாய் நடுவார்கள். பருத்தி விதையிலிருந்து முளை கிளம்பும்போது மழை மிகுதியாகப் பெய்தல் கூடாது. செடி வளரும்போது நல்ல மழையாக மாதத்திற்கொருமுறை இரண்டு மூன்று தடவை பெய்தால், அதுவே செடியின் வளர்ச்சிக்குப் போதுமானது. கரிசல் நிலத்தில் ஒரு தடவை மழை



பெய்தால், அந்நிலத்தில் சுவறும் ஈரம் பல நாட்கள் வரையில் காய்ந்து போகாதிருக்கும். அதனுல்தான் நெல் முதலிய பயிர்களுக்கு வேண்டிய அவ்வளவு நீர் பருத்திக்கு வேண்டியதில்லை. பருத்தி பலன் கொடுக்கும் பருவத்தில் மழை பெய்யாதிருத்தல் நல்லது.

பருத்திச் செடிகள் நன்ருய் வளர்ந்தால், அவை மிகுந்த பலனைத் தரும். பருத்திப்பூ மஞ்சள் நிறமுடையது. காய்கள் பச்சை நிறமாயிருக்கும்; காயில்




1. பருத்திக் காய்களைப் பறித்தல் 2. பஞ்சு எந்திர சாலை
3. கொட்டை வேறாகவும் பஞ்சு வேறாகவும் பிரிக்கும் எந்திரம்
4. நூல் நூற்கும் எந்திரம் 5. நெசவு செய்யும் எந்திரம்

மூன்று அல்லது நான்கு அறைகள் இருக்கும். ஒவ்வோர் அறையிலும் பஞ்சும் விதைகளும் நிறைந்திருக்கும். காய் முற்றி நெற்றுனவுடன் வெடிக்கும். அப்போது பருத்தி வெளிப்படும். அது மிக்க வெண்மையாய் இருக்கும். ஆதலால் வெடிக்கும் காலத்தில் பருத்திக் கொல்லையைப் பார்த்தால் அது மிக அழகாய்த் தோன்றும். அக்காலத்தில் ஆண்களும் பெண்களுமாகப் பல கூலியாட்கள் சென்று வெடித்த பருத்தியைப் பறித்துக் கூடைகளில் சேர்ப்பார்கள். இவ்வாறு சேகரிக்கப்பட்ட பருத்தியில் விதைகள் கலந்திருக்கும் அல்லவா? அவ்விதைகளை எந்திரங்களின் உதவியைக் கொண்டு வேறு பிரித்துப் பஞ்சைப் பொதிகளாகக் கட்டி வியாபாரத்துக்கு அனுப்புவார்கள். மேற்கூறிய வண்ணம் தயாரிக்கப்படும் பஞ்சே நூலாக நூற்று ஆடைகளாக நெய்யப்படுகிறது.

நமது நாட்டுப் பஞ்சில் பெரும்பகுதி வெளி நாடுகளுக்கு அனுப்பப்படுகின்றது. இங்கிலாந்தில் பருத்திச்செடி பயிராகிறதில்லை ; ஆகையால் இந்தியாவில் விளையும் பஞ்சு முக்கியமாய் இங்கிலாந்திற்கே அனுப்பப்படுகிறது. அங்குள்ள தொழிலாளர் பெரிய எந்திரங்களின் உதவியால் அதை நூலாகவும் துணியாகவும் செய்து மீண்டும் இந்தியாவிற்கே அனுப்புகின்றனர்.

முற்காலத்தில் நமது நாட்டில் மிகவும்சிறந்த துணிகள் நெய்யப்பட்டு வந்தன; தொழிலாளர்கள் தாங்களே பஞ்சிலிருந்து நூல் நூற்று நெய்து வந்தார்கள். இக்காலத்திலோ நெசவுக்கு வேண்டிய நூல் முழுவதும் சீமையிலிருந்தே வந்துவிடுகின்றது. ஆயினும் இப்பொழுது நமது தேசத்திலேயே நூல் நூற்று வஸ்திரங்கள் நெய்ய வேண்டுமென்னும் ஒரு கிளர்ச்சி உண்டாயிருக்கின்றது. அவ்வண்ணமே பலவிடங்களை ...

களும் நெய்யப்படுகின்றன. அவைகள் இன்னும் நல்ல முறையில் மிகவும் அதிகமாக நெய்யப்பட்டால், நம்மவர்கட்கு மிகுந்த பயன் உண்டாகும். வெளி நாட்டுத் துணிகள் எந்திர சகாயத்தால் மிகக் குறைந்த நேரத்தில் மிக அதிகமாக நெசவு செய்யப்படுகின்றன. ஆகையால் அவை குறைந்த விலைக்குக் கிடைக் கின்றன. நமது நாட்டில் நெசவு செய்யும் பெரிய எந்திரசாலைகள் மிகுதியாக இல்லை. இதனால் நம்மவர் கள் கைத்தறிகளைக்கொண்டே இன்றும் நெசவு செய்து வருகிறார்கள். ஆதலின், நாம் நமது நாட் டுத் துணிக்குச் சீமைத் துணியைவிட விலை அதிக மாகக் கொடுக்க வேண்டியவர்களாகிறோம்.

மனிதருக்கு முதலில் உணவும், இரண்டாவதாக உடையும் அவசியமானவை. இவ்வுடைக்கு மிகுதியும் பயன்படுவது பஞ்சு. ஆட்டு மயிரினாலும் பட்டி னாலும் நெய்யப்படும் ஆடைகளைவிடப் பருத்தி நூலி னால் நெய்யப்படும் ஆடையே மிகவும் உபயோகமாக இருக்கின்றது. ஆகையால் பருத்திச் செடியை நமக் குக் கடவுளால் கொடுக்கப்பட்ட ஒரு பெரும் பாக்கிய மென்றே நாம் கருதவேண்டும். பருத்திக்கொட்டை கால்நடைகளுக்கு உணவாகிறது. பருத்திக்கொட் டையிலிருந்து ஒருவிதமான எண்ணெய் இறக்குகிறார் கள்; அது சோப்பு என்னும் **சவர்க்காரம்** செய்ய உதவுகிறது. பருத்தியின் வேர் மருந்தாகவும் உப யோகப்படுகிறது.

| | | | |
|---|---|---|---|
| ஊற்று | வாழ்க்கை | மரப்பருத்தி | பெரும்பகுதி |
| கைத்தறி | வஸ்திரங்கள் | செடிப்பருத்தி | நல்லமுறையில் |
| தறித்து | பொதிகளாக | கரிசல்நிலம் | சீமையிலிருந்து |
| ஏற்பாடு | புதர்போல | எலும்புத்தூள் | தொழிலாளர்கள் |
| சாணநீர் | மிகுதியாக | விசாலித்து | சேகரிக்கப்பட்ட |

அரும்பதவுரை : தறித்து - வெட்டி. விசாலித்து - விரித்து. சேகரிக்கப்பட்ட - சேர்க்கப்பட்ட. கரிசல் நிலம் - கறுப்பு மண் நிலம். இன்றியமையாத - இல்லாமல் முடியாத, அவசியமான. (செம்மை + பருத்தி = செம்பருத்தி. சாணம் + நீர் = சாணநீர். மரம் + பருத்தி = மரப்பருத்தி.)

### பயிற்சி

வினைமுற்றுக்கள் ஐம்பால் மூவிடங்களில் பயின்று வருதல்

| வினைமுற்றுக்கள் | இறந்தகாலம் | நிகழ்காலம் | எதிர்காலம் |
|---|---|---|---|
| தன்மை ஒருமை | செய்தேன் | செய்கிறேன் | செய்வேன் |
| தன்மைப் பன்மை | செய்தோம் | செய்கிறோம் | செய்வோம் |
| முன்னிலை ஒருமை | செய்தாய் | செய்கிறாய் | செய்வாய் |
| முன்னிலைப் பன்மை | செய்தீர்கள் | செய்கிறீர்கள் | செய்வீர்கள் |
| படர்க்கை ஆண்பால் | செய்தான் | செய்கிறான் | செய்வான் |
| படர்க்கை பெண்பால் | செய்தாள் | செய்கிறாள் | செய்வாள் |
| படர்க்கைப் பலர்பால் | செய்தார்கள் | செய்கிறார்கள் | செய்வார்கள் |
| படர்க்கை ஒன்றன்பால் | செய்தது | செய்கிறது | செய்யும் |
| படர்க்கைப் பலவின்பால் | செய்தன | செய்கின்றன | செய்யும் |

மேற்கூறிய அட்டவணையில் உள்ளதுபோலவே குடி, ஓடு, இரு என்ற பகுதிகளிலிருந்து பிறக்கும் வினைமுற்றுக்களைக் கூறு.

II. (1) செம்மண், வெண்பஞ்சு, மரக்கிளை, மரவேர், காட்டாறு, நாட்டுப்பஞ்சு, நான்கடி, நிறமுடையது, செடிப் பருத்தி—இச்சொற்களைப் பிரித்துக் கூறு.

(2) தறி, நாடு, அறை, நூல், ஆடை, துணி, சடை—இவ்வார்த்தைகள் ஒவ்வொன்றுக்கும் இரு பொருள் கூறு.

(3) ஏறக்குறைய, இன்றியமையாத, சீமை, எந்திரம், பொதி—இவ்வார்த்தைகள் ஒவ்வொன்றையும் ஒவ்வொரு வாக்கியத்தில் அமைத்துக் கூறு.

### கேள்விகள்

1. இரண்டு விதப் பருத்திகள் எவை? துணி நெய்வதற்கு எந்தப் பருத்தி அதிகமாகப் பயன்படுகிறது?

2. பருத்திப் பயிருக்கு ஏற்ற நிலம் யாது? அதற்கு என்னென்ன எருக்களை இடவேண்டும்?

3. பருத்தியை எப்படிப் பயிரிடுவது? எப்போது பயிரிடுவது? அதற்கு மழை எவ்வாறு பெய்யவேண்டும்?

4. பருத்திக்காயின் உட்புறம் எப்படியிருக்கும்?

## 11. செந்தமிழ் நாடு

1. செந்தமிழ் நாடெனும் போதினிலே—இன்பத்
தேன்வந்து பாயுது காதினிலே—எங்கள்
தந்தையர் நாடென்ற பேச்சினிலே—ஒரு
சக்தி பிறக்குது மூச்சினிலே.

2. காவிரி தென் பெண்ணை பாலாறு—தமிழ்
கண்டதோர் வையை பொருனைநதி—யென
மேவிய யாறு பலவோடத்—திரு
மேனி செழித்த தமிழ்நாடு.

3. முத்தமிழ் மாமுனி நீள்வரையே—நின்று
மொய்ம்புறக் காக்குந் தமிழ்நாடு—செல்வம்
எத்தனை யுண்டு புவிமீதே—அவை
யாவும் படைத்த தமிழ்நாடு.

4. நீலத் திரைக்கட லோரத்திலே—நின்று
நித்தந் தவஞ்செய் குமரியெல்லை—வட
மாலவன் குன்றம் இவற்றிடையே புகழ்
மண்டிக் கிடக்குந் தமிழ்நாடு.

கல்வி சிறந்த தமிழ்நாடு—புகழ்க்
கம்பன் பிறந்த தமிழ்நாடு—நல்ல
பல்வித மாயின சாத்திரத்தின் மணம்
பாரெங்கும் வீசும் தமிழ்நாடு.

வள்ளுவன் தன்னை உலகினுக்கே—தந்து
வான்புகழ் கொண்ட தமிழ்நாடு—நெஞ்சை
அள்ளுஞ் சிலப்பதி காரமென் றோர்—மணி
யாரம் படைத்த தமிழ்நாடு.

—பாரதியார்

| | | | |
|---|---|---|---|
| வி | மேவிய | சாத்திரம் | மொய்ம்புற |
| ரு | கம்பன் | பாரெங்கும் | போதினிலே |
| வம் | அள்ளும் | வான்புகழ் | சிலப்பதிகாரம் |
| மரி | வள்ளுவன் | மணியாரம் | முத்தமிழ் மாமுனி |
| ல்லை | திரைக்கடல் | நீள்வரை | வடமாலவன் குன்றம் |

அரும்பதவுரை : போது - பூ, காலம். மேவிய - பொருந்திய. ரை - மலை. மொய்ம்பு - வலிமை. புவி - உலகம். திரை - அலை. டமாலவன் குன்றம் - திருப்பதி மலை. மண்டி - நிறைந்து. ர் - பூமி. மா - பெரிய. முத்தமிழ் - இயல், இசை, நாடகம் ன்னும் மூன்றுவகைத் தமிழ். வான்புகழ் - பெரும்புகழ். (மணி+ ரம்=மணியாரம்.)

## பயிற்சி

I. (1) செய்கிறான், செய்கின்றான்—இவை நிகழ்கால வினை ற்றுக்கள். இவற்றின் இடையில் கிறு, கின்று என்று வருவதைக் வனி.

பார்த்தோம், உண்டான், கூடிற்று, போயின—இவை இறந்த ல வினைமுற்றுக்கள். இவற்றின் இடையில் த், ட், ற், இன் ன்று வருவதைக் கவனி.

நடப்பேன், செய்வேன்—இவை எதிர்கால வினைமுற்றுக்கள். வற்றின் இடையில் ப், வ், என்று வருவதைக் கவனி.

(2) மேற்கூறிய கிறு, கின்று; த், ட், ற், இன்; ப், வ், என்பவை இடைநிலைகள் எனப்படும். வினைச்சொற்களில் இந்த இடைநிலைகள் காலத்தைக் காட்டி நிற்கும்.

மேலேகூறிய இடைநிலைகளுள் இறந்த காலத்தைக் காட்டும் இடைநிலைகள் எவை? நிகழ்காலத்தைக் காட்டும் இடை நிலைகள் எவை? எதிர் காலத்தைக் காட்டும் இடைநிலைகள் எவை?

(3) பின்வரும் வினைச்சொற்களில் உள்ள இடைநிலைகளை எடுத்துக் கூறு:

போயின, செய்தாய், போகின்றார், வருகிறேன், பேசுவான், உண்பேன், கண்டேன், ஓடின, தின்றான், நடப்பாய், கூறுவாய், போவான்.

II. (1) வீசும், புடைத்தார். பிறக்குது, தமிழ்நாடு, பாய்கிறது என்று முடியும்படியாகத் தனித்தனி வாக்கியங்கள் கூறு.

(2) திரை, பார், வான், போது, பாய்—இச்சொற்களுக்கு இரு பொருள் கூறு.

(3) தமிழ்நாட்டின் சிறப்பைப் பற்றி மூன்று வாக்கியங்கள் கூறு.

### கேள்விகள்

1. தமிழ்நாட்டில் ஓடும் ஆறுகள் எவை?
2. முற்காலத்தில் தமிழ்நாட்டின் வடக்கு எல்லை எது? தெற்கு எல்லை எது?
3. தமிழ்நாட்டில் விளங்கிய சில புலவர்களைக் கூறு.



## 12. மண்ணெண்ணெய்

மண்ணெண்ணெய் என்பது பூமியிலிருந்து எடுக்கப்படும் எண்ணெய் என்று பொருள்படும். இக்காலத்தில் நமது வீடுகளில் விளக்கெரிப்பதற்குப் பெரும்பாலும் இந்த எண்ணெயையே உபயோகிக்கிறோம். ஆகையால் இந்த எண்ணெயை அறியாதவர் ஒருவரும் இரார்.

எண்ணெய் என்ற பதம் எள், நெய் என்னும் இரு சொற்களால் ஆகியது. எண்ணெய் என்பதற்கு எள்ளினின்று உண்டாகிய நெய் என்பது பொருளாகும். தைலம் என்பதற்கும் இதுவே பொருள்; திலம் என்பது எள்; அதினின்று உண்டாகியது தைலம். முற்காலத்தில் எள்ளினின்று எடுக்கப்படும் நெய்யே எண்ணெய் அல்லது தைலம் என்னும் பெயரால் வழங்கப்பெற்றுவந்தது. பின்னர்

ஆமணக்கு, தேங்காய் முதலியவற்றிலிருந்து எடு கப்படும் நெய்களும் எண்ணெய் என்ற பெயராலே வழங்கப்படலாயின. ஆயினும், எள்ளினின்று எடு கப்படுவது நல்லெண்ணெய் என்றும், ஆமணக் லிருந்து எடுக்கப்படுவது விளக்கெண்ணெய் என்று தேங்காயினின்று எடுக்கப்படுவது தேங்காய் என ணெய் என்றும் வழங்கப்பட்டன. இவைகளைப்போ மண்ணிலிருந்து எடுக்கப்படுவது மண்ணெண்ணெ எனப்படுகிறது.

முற்காலத்தில் ஆமணக்கு நெய்யே விளக்கெரி பதற்கு உபயோகப்பட்டு வந்தது. அதனால்தா அதற்கு விளக்கெண்ணெய் எனப் பெயர் வழங்கல யிற்று. இப்பொழுது மண்ணெண்ணெயே விளக்கெரி பதற்கு மிகுதியும் உபயோகப்படுகிறது. சில இடங் ளில் இது **சீமை எண்ணெய்** என்றும் வழங்குகிற

மண்ணெண்ணெயைப் பல தேசங்களில் பூமி குள்ளிருந்து எடுக்கிறார்கள். பூமியின் அதிர்ச் யினாலும், எரிமலைகள் பொங்கி வழிவதனாலும் நா நகரங்கள் முதலியவை அழிந்துபோவதுண்டு. அ பொழுது மரம் செடிகளெல்லாம் பூமிக்குள் புதைந் விடும். அவை அப்படியே நிலத்தில் நெடுங்கால கிடந்தால் கரியாக மாறும். அதுதான் நிலக்கரி என் சொல்லப்படுகிறது. நிலக்கரி இருக்கு மிடங்களி ஒருவிதமான தைலம் ஊறும். அவ்விடங்களைக் கண் பிடித்துக் கிணறுகள் தோண்டினால், மண்ணெ ணெய் அகப்படும்.

விளக்கெண்ணெய் முதலியவற்றைப்போல ம ணெண்ணெய் தடிப்பானதன்று. அது ஏறக்குறை தண்ணீரைப் போலவே இருக்கும். ஆயினும் அ

ரைவிட இலேசானது; தண்ணீரில் மிதக்கும் தன்மை டையது. அதனைத் தீ மிக விரைவில் பற்றிவிடும்.

சுமார் ஐம்பது ஆண்டுகளுக்கு முன்னேதான் ந்த எண்ணெய் கண்டுபிடிக்கப்பட்டது. மண் ணண்ணெய் கிடைக்கும் நிலத்துக்கு அருகிலுள்ள ளம், குட்டைகளில் இருக்கும் நீர் மண்ணெண் ணய் சம்பந்தப்பட்டதாக இருக்கிறது. சில சமய ளில் அந்தத் தண்ணீரில் மண்ணெண்ணெ தந்துகொண்டிருக்கும். இக்குறிகளால் மண்ணெண் ணய் அந்த இடத்தில் அகப்படும் என்று தெரிந்து காள்ளலாம். பூமி நூல் வல்லோர் மண்ணைச் சாதித்து இன்ன இன்ன இடத்தில் மண்ணெண் ணய் இருக்குமென்று சொல்லுவார்கள். அவ்விடங் ளில் பள்ளம் தோண்டியாவது அல்லது பெரிய ரும்புக் குழாய்களை பூமிக்குள் இறக்கியாவது ணற்றிலிருந்து தண்ணீர் எடுப்பது போல மண் ணண்ணெயை எடுப்பார்கள்.

மண்ணெண்ணெய் முதன் முதலில் வட அமெரிக் விலுள்ள ஐக்கிய நாட்டில் அகப்பட்டது. அதைக் ண்டுபிடித்தவுடன் அந்நாட்டார் அதனால் விளக்கு ளை எரிக்கலாம் என்று அறிந்து மிக்க வியப்படைந் னர். இப்பொழுது அது ருஷியா, பாரசீகம், பர்மா தலிய தேசங்களிலும் மிகுதியாக எடுக்கப்படுகிறது. வ்விடங்களில் வரிசையாய் அநேக மண்ணெண் ணய்க் கிணறுகள் இருப்பது மிக்க வியப்பைத் ரும். அவற்றில் ஆயிரக் கணக்கான மனிதர்கள் வேலை செய்து ஜீவனம் செய்கிறார்கள்.

கிணறுகளிலிருந்து எடுக்கும்போது மண்ணெண் ணயில் பலவகையான அழுக்குகள் கலந்திருக்குமாத

லின், அதைச் சுத்தப்படுத்தவேண்டும். சுத்த படுத்தின மண்ணெண்ணெய் தெளிவான நீரை போலிருக்கும். இந்தத் தூய்மையான எண்ணெ வெளியூர்களுக்கு விற்பனைக்காக அனுப்பப்படுகிறது

மண்ணெண்ணெய் எரிவதால் உண்டாகு வெளிச்சம் மிகவும் பிரகாசமானது. அது மிகுதியாக பல்விடங்களில் அகப்படுவதனால் மற்ற எண்ணெ களைவிட விலை குறைவாக உள்ளது. ஆதலா அதையே உலகமெங்கும் ஜனங்கள் விளக்கெரி பதற்கு உபயோகிக்கிறார்கள். சமையல் செய்வதற் அந்த எண்ணெய் விறகு போல உபயோகப்படுகிற அதற்கென ஒருவிதமான அடுப்பு உண்டு. அதி மண்ணெண்ணெயை விட்டு எரித்து அந்த அனலி சமையல் செய்கிறார்கள். மண்ணெண்ணெ மிகவும் நன்றாகச் சுத்தம் செய்வதால், அது தூ நீரைப் போன்று இருக்கும். இவ்விதமாகச் சுத்த செய்யப்பட்ட எண்ணெய்க்குப் '**பெட்ரோல்**' என் பெயர். மோட்டார் வண்டிகளையும் ஆகாய விமான களையும் வேறு சில எந்திரங்களையும் இயக்குவதற்கு பெட்ரோலையே உபயோகிக்கிறார்கள். தற்காலத்தி மக்களுக்கு மிகவும் பயன்படும் பொருள்களில் மண ணெண்ணெய் ஒன்று.

| | | |
|---|---|---|
| சீமை | அதிர்ச்சி | தடிப்பானது |
| திலம் | பூமிநூல் | இலேசானது |
| தைலம் | தூய்மை | பெட்ரோல் |
| எருமலை | தெளிவான | பற்றிவிடும் |
| பொங்கி | வல்லார் | இயக்குவதற்கு |
| விற்பனை | ஆமணக்கு | புதைந்துவிடும் |
| தேங்காய் | பொருள்படும் | இரும்புக்குழாய் |
| இலுக்கரி | வழிவதனாலும் | அழிந்துபோவது |

அரும்பதவுரை : தூய்மை - சுத்தம். இயக்குவதற்கு - செலுத்துவதற்கு. பற்றிவிடும் - பிடித்துக் கொள்ளும்? புதைந்துவிடும் - ...டப்பட்டுவிடும். அதிர்ச்சி - அசைவு, குமுறல். (மண் + எண்ணெய் = மண்ணெண்ணெய். இரும்பு + குழாய் = இரும்புக் ...ழாய். நிலம் + கரி = நிலக்கரி.)

பயிற்சி

I. (1) இந்தப் பெண் மிக நல்லவள். பெண்ணே, உன் பெயர் ...என்ன ?—இவற்றுள் முதல் வாக்கியத்தில் பெண் என்பது இய...ான பெயர். இரண்டாவதில் பெண் என்பதோடு ஏ என்ற உருபு சேர்ந்துள்ளது. அதனால் கூப்பிடும் பொருள் விளங்குகிறது. ...ம்மாதிரியே பெயர்ச்சொற்களின் ஈற்றில் சில உருபுகள் சேர்ந்து ...ாருளை வேறுபடுத்தும். இவ்வாறு பொருள் வேறுபடுவது ...வற்றுமை எனப்படும்.

(2) இயல்பான பெயரே முதல் வேற்றுமை எனப்படும். ...யர்ச் சொல்லின் ஈற்றில் ஐ என்னும் உருபு சேர்ந்தால் இரண்...ாம் வேற்றுமை ஆகும்.

இராமன் கண்டான்—இதில் இராமன் முதல் வேற்றுமை. ...ராமனைக் கண்டான்—இதில் இராமனை இரண்டாம் வேற்றுமை.

(3) பின்வரும் வாக்கியங்களில் எந்தெந்தப் பெயர்ச்சொற்கள் ...தல் வேற்றுமை ஏற்றன ? எந்தெந்தப் பெயர்ச்சொற்கள் இரண்...ாம் வேற்றுமை ஏற்றன ?

I. (1) எள்ளிலிருந்து எடுக்கப்படுவது எண்ணெய்—இவ் ...க்கியத்தை எண்ணெய் என்பது எழுவாயாக வரும்படி மாற்று.

(2) விளக்கெண்ணெய் முதலியவற்றைப்போல் மண்ணெண்...ணய் தடிப்பானது அன்று—மெல்லியது என்று முடியும்படி இவ் ...க்கியத்தை மாற்றிப் படி.

(3) மண்ணெண்ணெய் மற்ற எண்ணெய்களைவிட விலை ...றைவாக உள்ளது. தடித்த எழுத்துக்களாலான வார்த்தை...ை எடுத்துவிட்டு வேறு ஒரே வார்த்தையை அமைத்துக் கூறு.

(4) குறி, விளக்கு, ஆண்டு, தோண்டி, பிடி—இவ்வார்த்தை... ஒவ்வொன்றும் பெயர்ச்சொல்லாகவும், வினைச்சொல்லாகவும் ...ரும்படி வெவ்வேறு வாக்கியங்கள் எழுது.

**கேள்விகள்**

1. மண்ணெண்ணெய் முதலில் எங்கே அகப்பட்டது? இப்போது எங்கெங்கே அகப்படுகிறது?
2. மண்ணெண்ணெயின் தன்மைகள் எவை?
3. மண்ணெண்ணெய் எவ்வாறு உண்டாகிறது? பெட்ரோல் என்பது என்ன?

# 13. ஒட்டகம்

மாடு, குதிரை முதலிய மிருகங்களைப் போலவே ஒட்டகமும் மனிதருக்கு மிகவும் உபயோகமான மிருகம். அது பாலைவனத்தில் சஞ்சரிக்கும் இயல்புள்ளது. அது அரேபியா, ஆப்பிரிக்கா, பாரசீகம், இந்தியா முதலிய இடங்களிலுள்ள பாலைவனங்களில் காணப்படும். நமது தென்னிந்தியாவில் பெரிய கோவில்களிலும் மடங்களிலும் ஒட்டகம் யானையைப் போலவே அலங்காரத்தின் பொருட்டாகவும் கௌரவத்திற்காகவும் வளர்க்கப்படுகிறது. ஜமீன்தார்களும் சிற்றரசர்களும் ஒட்டகத்தைத் தங்கள் பரிவாரங்களில் ஒன்றாக வைத்து வளர்க்கிறார்கள்.

ஒட்டகம் நெடிய மிருகம். அது பாதம் முதல் தலைவரையில் சுமார் பத்தடி உயரமுள்ளது. அது பார்வைக்கு விகாரமாய் இருக்கும். அதன் தலை சிறியது; செவிகள் குறுகலானவை. அதன் கால்கள் மிகவும் நீண்டு மெலிந்திருக்கும்; ஆதலால், அது மரங்களிலுள்ள இலைகளைக் கடித்து இழுக்கவும், தரையில் இருக்கும் புல் பூண்டுகளைச் சுலபமாய் மேயவும் கூடும்.

அதன் கண்கள் சிறியவை. அவற்றின்மேல்

புருவங்கள் தொங்கிக் கொண்டிருப்பதால் சூரியனுடைய வெப்பம் அதன் கண்களைத் தாக்குவதில்லை. ஒட்டகம் தன் இஷ்டப்படி மூடவும் திறக்கவும் கூடிய ஜவ்வுகள் அதன் மூக்குத் துவாரங்களில் அமைந்திருக்கின்றன. ஆகையால் காற்று வீசும்போது மூக்குத் துவாரத்தில் மணல் பிரவேசியாதபடி அது காத்துக் கொள்ளும்.

ஒட்டகத்தின் வாய் மிகவும் விசாலமானது. அதற்கு மேல்வாயில் பதினாறு பற்களும், கீழ்வாயில் பதினெட்டுப் பற்களும் உண்டு. அவை அகன்று



கூர்மையாய் இருப்பதால் உண்ணும் ஆகாரத்தை அது நன்றாய்க் கடித்து அரைத்துத் தின்னும். ஒட்டகத்தின் வால் மிகவும் குட்டையானது. அதன் நுனியில் குஞ்சம்போல் சிறிது மயிர் உண்டு. அதன் பாதம் அகல

மாயும் பிளவுபட்டுமிருக்கும். ஒவ்வொரு பிளவிலும் ஒரு குளம்பு உண்டு. அதன் உள்ளங்கால் மிக்க பல முடையது ; அது அகலவும் சுருங்கவும் கூடிய ஒரு வகைத் தோலினுல் ஆகியது. பாதம் அகன்று கடற் பஞ்சுபோல் மிருதுவாய் இருப்பதால் ஒட்டகம் மண லில் நடக்கும்போது கால் புதைந்து போகிறதில்லை.

பெரிய பாலைவனங்களில் பல நூறு மைல் தூரம் மணல் நிறைந்திருக்கும் ; சூரிய வெப்பத்தால் மணல் நெருப்பைப்போல் சுடும் ; சில சமயங்களில் சுழல் காற்று வீசிச் சூடான மணலை நாற்புறமும் வாரி இறைக்கும். மனிதரேனும் வேறு மிருகங்களேனும் அந்த மணல் வெளிகளில் கால் நடையாகப் பிரயாணம் செய்தல் முடியாது. ஆனுல் ஒட்டகம் மாத்திரம் அவ் வனங்களில் யாதொரு வருத்தமுமின்றிப் பிரயாணம் செய்யும். ஏனெனில் பாலைவனங்களில் பிரயாணம் செய்ய ஏற்றதாக, அதன் தேக அமைப்பு மேற்கூறிய படி அமைந்துள்ளது. சமுத்திரத்தைக் கப்பல் மூல மாய் கடந்து செல்வதுபோல், பாலைவனத்தைக் கடப்ப தற்கு ஒட்டகம் உபயோகப்படுகிறது. அதனுல் அதற் குப் '**பாலைவனக் கப்பல்**' என்ற பெயர் வழங்கி வருகிறது.

ஒட்டகத்தின் உடல் முழுவதும் பழுப்பு நிறமான உரோமம் அடர்ந்திருக்கும். ஒட்டகங்களில் இரண்டு வகையுண்டு. ஒருவகையான ஒட்டகத்திற்கு முதுகின் மத்தியில் ஒரு திமில் உண்டு ; மற்றொரு வகையான ஒட்டகத்திற்கு முதுகில் முன்னும் பின்னுமாக இரண்டு திமில்கள் இருக்கும். திமில் என்பது கொழுப்பு நிறைந்த சதையே. ஒட்டகம் அழகற்ற

பிராணியாய்த் தோன்றினும் சுமை சுமப்பதற்கு அதைப்போல உபயோகமான மிருகம் வேறில்லை.

ஆடு மாடுகளைப்போல ஒட்டகமும் சாகபட்சணி. ஆயினும் வேறெந்த மிருகமும் விரும்பாத வேப்பிலையைத் தின்பதில் ஒட்டகத்திற்கு விருப்பம் அதிகம். ஒட்டகம் உண்ணும் ஆகாரம் ஜீரணமாக நெடுநேரம் ஆகும். அது ஒரு மணி நேரத்தில் உட்கொள்ளும் இரை அதற்கு ஒரு நாளைக்குப் போதுமானது. ஒட்டகம் ஒருமுறை வயிரார உணவு கொண்டால் அவ்வுணவு ஐந்து நாட்களுக்குப் போதுமானது. ஆதலின் சில நாட்கள் ஒட்டகம் உணவில்லாதிருப்பினும் அதற்குப் பலங்குறையாது. உணவில்லாத காலத்தில் அதன் திமிலிலுள்ள கொழுப்பு கரைந்து அதற்குப் பலத்தைக் கொடுக்கும்.

அது தண்ணீரையும் பல நாட்களுக்கு வேண்டிய அளவு ஒரே முறையில் பருகக் கூடும். இரைப்பையின் ஒரு பக்கத்திலுள்ள பல அறைகளிலும் அது தண்ணீரை நிரப்பிக்கொள்ளும். இங்ஙனம் ஆகாரத்தையும் ஜலத்தையும் சேகரித்து வைத்துக்கொள்ளும் சக்தி அதற்கிருப்பதால் சுமார் ஒரு வாரம் வரையிலும் உணவும் நீரும் இல்லாவிட்டாலும், அது சிறிதும் சோர்வடையாமல், ஒரே நடையாய் நடந்து பிரயாணம் செய்யும்.

ஒட்டகம் மனிதர்களையும் பாரமான சுமைகளையும் முதுகின்மேல் சுமந்து செல்வதற்கு மிகவும் ஏற்ற பிராணி. அது மிகவும் உயரமாக இருப்பதால் மனிதர் ஏறும்போதும் பாரம் ஏற்றும்போதும் தன் கால்களை மடக்கிப் படுத்துக்கொள்ளும். சில ஒட்டகங்களைச் சவாரி செய்வதற்கு மாத்திரம் [illegible]

வார்கள் ; பாரம் சுமக்கும் ஒட்டகம் நாள் ஒன்றுக்குச் சுமார் முப்பது மைல் வீதமும், மனிதர் ஏறிச் சவாரி செய்யும் ஒட்டகம் ஒரு நாளைக்கு ஐம்பது மைல் வீதமும் பிரயாணம் செய்யும். பெண் ஒட்டகம் ஒரு தடவைக்கு ஒரே குட்டிதான் போடும். குட்டி ஏறக் குறைய மூன்றடி உயரம் இருக்கும். மூன்று வருஷம் வரையில் அதற்கு ஒரு வேலையும் கொடுக்க மாட்டார்கள். நான்காவது வருஷம் முதல் அதை வேலைக்குப் பழக்குவார்கள். ஒட்டகம் ஐம்பது வருஷங்கள் வரையில் உயிர் வாழ்ந்திருக்கும்.

அராபியருக்கு ஒட்டகம் மிகவும் பயன்படுகிறது. நாம் ஆடுமாடுகளை வளர்ப்பதுபோல், அவர்கள் ஒட்டகத்தை வளர்க்கிறார்கள். அராபியர் பாலைவனங்களைக் கடந்து சென்று வியாபாரம் செய்வதற்கு ஒட்டகத்தையே உபயோகிக்கிறார்கள். பல அராபிய வியாபாரிகள் தம்தம் ஒட்டகங்களின்மேல் சரக்குகளை ஏற்றிக்கொண்டு, கூட்டமாகப் பாலைவனங்களில் பிரயாணம் செய்வார்கள். அராபியர் ஒட்டகத்தின் மாமிசத்தைப் புசிப்பார்கள். அதன் பாலை அவர்கள் மிகவும் விரும்பிப் பருகுவார்கள். அதன் மயிர் ஓவியம் எழுதும் தூரிகைக் கோல் செய்ய உதவும். அதன் உரோமத்தினால் அழகான கம்பளங்களும் செய்கிறார்கள்.

| | | | |
|---|---|---|---|
| மடம் | புருவம் | கௌரவம் | புசிப்பார்கள் |
| சுடும் | தூரிகை | பரிவாரம் | பொருட்டாக |
| தி[illegible] | ஜவ்வுகள் | ஜமீன்தார் | நிரப்பிக்கொள்ளு[illegible] |
| கோவில் | பாரமான | பிளவுபட்டு | காத்துக்கொள்ளு[illegible] |
| பாதம் | இரைப்பை | கடற்பஞ்சு | மூக்குத்துவாரம் |
| மடக்கி | வேப்பிலை | சுழல்காற்று | பாலைவனக்கப்பல் |
| | | [illegible] | [illegible] |

அரும்பதவுரை : பரிவாரம் - படை. கௌரவம் - பெருமை. பொருட்டாக - காரணமாக. பருகு - குடி. தூரிகை - எழுதுகோல். ஜவ்வு - தசை.

### பயிற்சி

I. (1) அவன் என்னைப் பிரம்பால் அடித்தான். நல்லவர்களோடு சிநேகம் செய். இராமனுடன் கிருஷ்ணனும் வந்தான் :—இவ்வாக்கியங்களிலுள்ள பிரம்பால், நல்லவர்களோடு, இராமனுடன் என்ற பெயர்ச்சொற்கள் முறையே ஆல், ஒடு, உடன் என்ற உருபுகளை ஏற்று வந்தன. இவை மூன்றும் வேற்றுமை உருபுகள் ஆகும். அவ்வுருபுகள் ஏற்று வரும் பெயர்ச்சொற்கள் மூன்றும் வேற்றுமை ஆகும்.

(2) ஏழைக்குத் தருமம் கொடு. தாகத்துக்குத் தண்ணீர் கொடு :—இவ்வாக்கியங்களில் உள்ள ஏழைக்கு, தாகத்துக்கு என்ற பெயர்ச்சொற்கள் கு என்ற உருபை ஏற்று வந்தன. கு என்பது நான்காம் வேற்றுமை உருபு ஆகும். இவ்வுருபை ஏற்றுவரும் பெயர்ச்சொற்கள் நான்காம் வேற்றுமை ஏற்றவை ஆகும்.

(3) பின்வரும் வாக்கியங்களிலுள்ள பெயர்ச்சொற்களில் எவை எவை மூன்றும் வேற்றுமை ஏற்றன ? எவை எவை நான்காம் வேற்றுமை ஏற்றன ?

கருடன் பாம்புக்குப் பகை. காற்றுடன் மழையும் பெய்கிறது. துஷ்டர்களோடு சேராதே. பசிக்குச் சோறு போடு. பென்சிலால் எழுது.

II. தடித்த எழுத்துக்களிலுள்ள வார்த்தைகளுக்குப் பதிலாக வேறு வார்த்தைகளை அமைக்க.

(1) ஒட்டகம் **பாலைவனத்தில் சஞ்சரிக்கும்.**

(2) கோவில்களிலும் மடங்களிலும் ஒட்டகத்தை **அலங்காரத்துக்காகவும் கௌரவத்துக்காகவும்** வளர்க்கிறார்கள்.

(3) ஒட்டகத்தின் வாய் **விசாலமானது.**

III. ஒட்டகத்தைப் பற்றி ஒரு வியாசம் எழுது.

### கேள்விகள்

1. ஒட்டகம் எந்தத் தேசங்களில் காணப்படுகிறது ?
2. ஒட்டகத்தினிடம் உள்ள அதிசயமான குணம் என்ன ?
3. ஒட்டகம் பாலைவனக்கப்பல் என்று கூறப்படுவது எதனால்?
4. ஒட்டகத்திற்கு ஆகாரமாக [illegible]

# 14. கீரிப்பிள்ளையைக் கொன்ற கதை

கௌடதேச மன்னனுக்குப் புரோகிதனாய் அமைந்திருந்த தேவசன்மா என்னும் ஒரு பிராமணன் தனக்குப் பிள்ளை இல்லாமையால், ஒரு கீரிப்பிள்ளையை வளர்த்து வந்தான். பின்பு கடவுளருளால் அவன் மனைவி ஓர் ஆண்மகவைப் பெற்றாள். பிராமணனும் அவன் மனைவியும் தாம் பெற்ற பிள்ளையோடு கீரிப் பிள்ளையையும் அன்போடு போற்றி வளர்த்து வந்தார்கள். ஒருநாள் பார்ப்பனி தன் கணவனை வீட்டில் வைத்துவிட்டு நீராடுவதற்கு ஒரு குளத்திற்குச் சென்றாள்.

ஆயிழை போகை யாலே
    ஆரணம் முழுதும் வல்லோன்
சேயினைக் காத்தி ருந்தான் ;
    சிரார்த்தமென் றரசன் தூதர்
நீ அவண் வருக என்றார் ;
    நேரமும் சென்று போனால்
போய் அதை யெல்லாம் வேறு
    புரோகிதர் கொண்டு போவார், 1

என்று நன் மனத்தில் எண்ணி
    இன்பமாய் வளர்த்த கீரி
தன் துணை யாக அந்தத்
    தனயனை வைத்து நீங்கிச்
சென்றனன் ; அரசன் வீட்டில்
    சிரார்த்தமும் முடித்துப் பெற்ற
பொன் துகில் அரிசி யெல்லாம்
    பொதிகளில் ஏற்றிக் கொண்டே. 2

வருமுனே சேயைக் கிட்டி
வந்ததோர் நாகம்! அந்தக்
கரியநா கத்தைக் கீரி
கடித்திரு துண்ட மாக்கிக்
குருதிவாய் எங்கு மாகக்
கொண்டுசந் தோஷம் காட்ட
அருமறை யோன்முன் சென்ற(து)
ஆகெடுத் தாயே என்றே, 3

தண்டினுல் அடித்துக் கொன்ருன் ;
தளர்வொடு வீட்டில்வந்தான்;
கண்டனன் பிள்ளை முன்னே,
கரியபாம் போ இரண்டு
துண்டமாய்க் கடிக்கப் பட்டுத்
தூரவே கிடக்கக் கண்டான் ;
மண்டிய துயர மாகி
வயிற்றினில் அடித்துக் கொண்டான் ; 4

வாயிலும் அடித்துக் கொண்டான்;
மண்ணையும் போட்டுக் கொண்டான்;
சேயிலும் அதிக மான
சேயை நான் கொன்றேன் என்ருன் ;
நீஎனக் கெதிரே வந்து
நின்றெனைக் கெடுத்தாய் என்று
போய் அதன் மேல் விழுந்து
புரண்டுருண் டரற்றி ருனே. 5

தேவியும் மூழ்கி வந்தாள் ;
தேவசன் மாவை நோக்கிப்
பாவிஇங் கேது கீரிப்
பாலகன் இறந்த தென்றே

ஔஎன அலறி நின்ருள் ;
உற்றவா றவனும் சொன்ருன் ;
காவியங் கண்ணி தானும்
கனலிடு மெழுகொத் தாளே.

—பஞ்சதந்திரம்

| | | | |
|---|---|---|---|
| துகில் | சேய் | ஆயிழை | புரோகிதர் |
| குருதி | அலறி | ஆரணம் | அரற்றினுன் |
| [illegible]வண் | தண்டு | பாலகன் | புரண்டுருண்டு |
| தூதர் | நாகம் | சிரார்த்தம் | அருமறையோன் |
| கனல் | துயரம் | தளர்வொடு | காவியங்கண்ணி |

அரும்பதவுரை : அம் - அழகிய. காவி - கருங்குவளை கண்ணி - கண்ணையுடையவள். ஆயிழை - பெண். ஆரணம் வேதம். சேய் - குழந்தை. தனயன் - மகன். துகில் - துணி குருதி - இரத்தம். மறையோன் - பிராமணன். அரற்றினுன் அழுதான்.

### பயிற்சி

I. (1) கிணற்றிலிருந்து நீர் இறை. எறும்பு உருவத்தி சிறியது. இவனின் அவன் பெரியவன் - இவ்வாக்கியங்களிலுள் [illegible]ணற்றிலிருந்து, உருவத்தில், இவனின் என்ற பெயர்ச்சொற்க முறையே இருந்து, இல், இன் என்ற உருபுகளை ஏற்று வ துள்ளன. இவைகள் ஐந்தாம் வேற்றுமை உருபுகள் ஆகும். இ வுருபுகளை ஏற்றுவரும் பெயர்ச் சொற்கள் ஐந்தாம் வேற்றுமை ஏற்றவை ஆகும்.

(2) கிணறு, பேச்சு, வீடு, மிருகம், இவ்வார்த்தைக ஐந்தாம் வேற்றுமையில் வரும்படி ஒவ்வொரு வாக்கியம் கூறு.

### கேள்விகள்

1. புரோகித மறையோன் ஒருநாள் எங்கே சென்றிருந்தான்
2. அப்போது கீரி செய்த உதவி என்ன ?
3. பிறகு அது என்ன செய்தது ?
4. அவன் ஏன் அதைக் கொன்ருன் ?
5. இக்கதையால் விளங்கும் நீதி என்ன ?

## 15. விவேக சிந்தாமணி

ஆபத்துக் குதவாப் பிள்ளை
அரும்பசிக் குதவா அன்னம்
தாபத்தைத் தீராத் தண்ணீர்
தரித்திர மறியாப் பெண்டிர்
கோபத்தை அடக்கா வேந்தன்
குருமொழி கொள்ளாச் சீடன்
பாபத்தைத் தீராத் தீர்த்தம்
பயனிலை ஏழுந் தானே. (1)

ஒப்புடன் முக மலர்ந்தே
உபசரித் துண்மை பேசி
உப்பிலாக் கூழிட் டாலும்
உண்பதே அமிர்த மாகும் ;
முப்பழ மொடுபா லன்னம்
முகங்கடுத் திடுவா ராயின்
கப்பிய பசியி னோடு
கடும்பசி யாகுந் தானே. (2)

கதிர்பெறு செந்நெல் வாடக்
கார்க்குலம் கண்டு சென்று
கொதி திரை கடலிற் பெய்யும்
கொள்கைபோற் குவலயத்தே
மதிதனம் படைத்த பேர்கள்
வாடினோர் முகத்தைப் பாரார் ;
நிதிமிகப் படைத்தோர்க் கீவார் ;
நிலையிலார்க் கீய மாட்டார். (3)

தண்டாமரையினுடன் பிறந்துந்
தண்டே னுகரா மண்டுகம் ;
வண்டே கானத் திடையிருந்து
வந்தே கமல மதுவுண்ணும் ;

# ஐந்தாம் வகுப்பு

பண்டே பழகி இருந்தாலும்
அறியார் புல்லோர் நல்லோரை ;
கண்டே களித்தங் குறவாடித்
தம்மிற் கலப்பர் கற்ருரே. (4

புத்திமான் பலவா ஞவான் ;
பலமுளான் புத்தியற்ருல்
எத்தனை விதத்தி ஞலும்
இடரது வந்தே தீரும் ;
மற்ருெரு சிங்கந் தன்னை
வருமுயல் கூட்டிச் சென்றே
உற்றதோர் கிணற்றின் சாயல்
காட்டிய வுவமை போன்றே. (5

பொருளிலார்க் கின்ப மில்லை ;
புண்ணியமும் இல்லை, என்றும்
மருவிய கீர்த்தி இல்லை,
மைந்தரிற் பெருமை யில்லை.
கருதிய கரும மில்லை,
கதிபெற வழியு மில்லை,
பெருநிலந் தனிற்சஞ் சாரப்
பிரேதமாய்த் திரிவர் அன்றே. (6

| | | | |
|---|---|---|---|
| இடர் | உவமை | ஒப்புடன் | குருமொழி |
| தாபம் | மருவிய | தீர்த்தம் | கார்க்குலம் |
| கமலம் | ஆபத்து | தரித்திரம் | தண்டாமரை |
| கானம் | நுகரா | புல்லோர் | முகம் கடுத்து |
| பண்டே | கருமம் | கொதிதிரை | இடுவாராயின் |
| [illegible]ர் | தண்டேன் | உபசரித்து | உதவாப்பிள்ளை |
| கப்பிய | மைந்தர் | மண்டூகம் | சஞ்சாரப் பிரேத |
| சாயல் | அமிர்தம் | அரும்பசி | |

அரும்பதவுரை : பண்டே - முதலிலேயே. நுகரா - அநுபவிக்க மாட்டா. உபசரித்து - மரியாதை செய்து. தாபம் - தாகம். கார்க்குலம் - மேகங்களின் கூட்டம். ஈவார் - கொடுப்பார். இடர் - துன்பம். மண்டூகம் - தவளை. கமலம் - தாமரை. முப்பழம் - வாழைப்பழம், மாம்பழம், பலாப்பழம். தண்மை - குளிர்ச்சி. தண்மை + தேன் = தண்டேன்.)

## பயிற்சி

I. (1) இது அவளுடைய பொம்மை. நமது தாய்மொழி தமிழ்.—இவ்வாக்கியங்களில் உள்ள அவளுடைய, நமது என்ற பெயர்ச்சொற்கள் முறையே உடைய, அது என்ற உருபுகளை ஏற்று வந்தன. இவை ஆறும் வேற்றுமை உருபுகள் ஆகும். இவ்வுருபுகளை ஏற்றுவரும் பெயர்ச் சொற்கள் ஆறும் வேற்றுமை ஏற்றவை ஆகும்.

(2) ஆறும் வேற்றுமைப் பெயர்ச்சொற்கள் வரும்படியாக மூன்று வாக்கியங்கள் கூறு.

II. (1) கோபம், தாபம், பாபம், நிதி, மதி, கதி, வண்டு, மண்டு, கண்டு—இச்சொற்களைத் தனித்தனியே ஒவ்வொரு வாக்கியத்தில் அமைத்துக் கூறு.

(2) புல்லோர், தனம் படைத்தோர், கற்றோர் இவர்களின் தன்மையைப்பற்றி ஒவ்வொரு வாக்கியம் எழுது.

## கேள்விகள்

1. எவை எவை பயனில்லை ?
2. சஞ்சாரப் பிரேதமென்றது யாரை ? என் ?
3. புத்திமான் பலவானாவான் என்பதை விளக்க ஒரு கதை

# 16. கிராமச் சீர்திருத்தம்

'நாடெங்கும் வாழக் கேடொன்றும் இல்லை' என்று நம் முன்னோர் நினைத்தார்கள். வயல்களையும், வாய்க்கால்களையும், தோட்டங்களையும், காடுகளையும் நம்பி உழைத்துப் பிழைக்கும் குடிகள் கிராமங்களில் வாழ்கிறார்கள். இந்நாளில் வியாபாரம், கைத்தொழில் முதலிய காரணங்களால் நகரங்கள் செழிப்புற்றிருக்கின்றன. நூறு வீடுகளோடு செழித்திருந்த கிராமங்கள் பத்து இருபது வீடுகளோடு மங்கியுள்ளன.

கிராமத்தில் வாழ்ந்திருந்த பரம்பரைப் பிரபுக்கள் மாட மாளிகைகள் அமைத்துக்கொண்டு நகரங்களுக்கு வந்துவிட்டார்கள். பண்ணையாட்கள் அவர்களது நிலங்களை உழுது வேளாண்மை செய்து தானியங்களை வண்டிகளில் ஏற்றிக்கொண்டு வந்து அவர்களுக்குக் கொடுக்கின்றனர். சில மிராசுதாரர்களுக்குத் தங்கள் பூமி எங்கே இருக்கிறது என்பதே தெரியாது. அறுவடைக்காலத்தில் யாராவது குமாஸ்தாவை அனுப்பித் தானியங்கள் வாங்கிவரச் செய்கிறார்கள்.

நகரங்களுக்கு வந்ததால் பிரபுக்களுக்கு ஆடம்பரச் செலவுகள் மிகுந்துவிட்டன. கிராமங்களுக்குத் திரும்பவும் போவோம் என்ற எண்ணமும் சில சமயங்களில் வருவதுண்டு. மோட்டார்கார், கிராமபோன், டெலிபோன், ரேடியோ முதலிய ஆடம்பரங்களோடு நகரங்களில் வாழ்ந்தவர்களுக்கு, கிராமங்களுக்குப் போய் இருக்க மனம் வருமோ? போனாலும் இருப்பதற்குக் குடிசையும் இல்லையே! குட்டிச்சுவர்தானே இருக்கிறது?

கிராமத்தின் செல்வத்தைக் காப்பாற்றக் கூடிய பிரபுக்கள் இப்படி வெளியேறிவிட்டதால், மிஞ்

ிருக்கும் ஜனங்கள் ஒற்றுமை இல்லாமல் வாழ்கிறர் ள். அடிக்கடி சிறு கலகங்கள் விளைகின்றன. பொது ாக, ஒற்றுமையோடு நடக்கவேண்டிய தரும காரி ங்கள் நின்றுவிடுகின்றன.

சிறிதளவு நிலம் உள்ளவர்கள் கொஞ்சம்கொஞ்ச ாகக் கடன் வாங்கிக் கடன்காரரிடம் நிலத்தை ஒப் டைத்து ஏழைகளாகிறர்கள். கொஞ்சம் பணம் உள்ளவர்கள் குடி, சூது, வம்பு, வழக்கு முதலிய கட்ட வழிகளில் தங்கள் பணத்தை வாரி இறைக்கி ர்கள். கிராம மக்களுள் ஒற்றுமை என்பது தற் ாலத்தில் அபூர்வமாகிவிட்டது.

இரவில் மழை பெய்து கிராம நிலங்களுக்கு நீர் ாயும் குளம் நிரம்பிவிடுகிறது ; இன்னும் ஒரு மழை பய்தால் குளம் உடையும் என்று இருக்கிறது என்று வத்துக்கொள்வோம். அப்பொழுது இரவிலேயே ிழித்திருந்து ஒற்றுமையாய் உழைத்து, மறுகால்கள் வட்டிவிட்டுக் கலிங்குகளில் ஒழுங்காக நீர் ஓடும்படிச் சய்தால், குளத்தில் உள்ள நீரைக் காப்பாற்றலாம் ல்லவா? ‘நமக்கென்ன, மணியக்காரர் பார்க்கட்டும்; ரிவாங்குவோர் கவனிக்கட்டும்’ என்று வாளாவிருந் ால் குளம் உடைந்து எல்லாத் தண்ணீரும் வீணுக டிப்போகும் அல்லவா? ஆகையால், ‘இந்த வேலை னக்கு ஏன்?’ என்ற எண்ணம் கிராமவாசியின் மனத் ில் எழலாகாது. ஊரார் பொதுவாகக் குளிப்பதற்கும் டிப்பதற்கும் உதவும் குளங்கள் தூர்ந்து போவதாக வத்துக் கொள்வோம். அப்போது வயலில் வேலை ல்லாமல் ஒழிந்திருக்கும்போது, அந்தக் குளங்களை ன்ருகக் கரைபோட்டுச் செப்பனிட்டு வைத்தால், ல்லோருக்கும் பயன்படும்; அதிகாரிகள் வந்து பார்க்க

வேண்டும் என்று காத்திருந்தால் குளம் தூர்ந்து குட்டையாகி அதுவும் வறண்டு பள்ளமாய்ப் போய் விடும்.

கிராமத்தில் விளையும் நெல்லை வெளியூர்களுக்கு வண்டியிலேற்றி அனுப்ப வேண்டும். கிராமத்துக்கும் பொதுச் சாலைக்கும் நடுவே சில மைல் தூரம் உண்டு. மனிதர் நடந்துபோகத் தக்க ஒற்றையடிப் பாதை இருக்கிறது ; வண்டி போகத்தக்க வழியில்லை. அ சாங்கத்தார் பாதை போட்டுக் கொடுக்க வேண்டு என்று காத்திருந்தால் நெல் விற்பனையாவது எப்படி ஒழிந்திருக்கும்போது ஆளுக்கு ஒரு கூடையும் மண் வெட்டியும் எடுத்துக்கொண்டு போனால், விரைவில் பாதை போட்டுவிடலா மல்லவா?

சில திருடர்கள் வருகிறார்கள் ; ஒரு பணக்காரன் வீட்டிற் புகுந்து திருடுகிறார்கள். கிராமத்திலுள்ள மற்றவர்கள் நமக்கென்ன என்றிருந்தால், அடுத்த நாள் கிராமத்தையே சூறையாடத் தொடங்கிவிடுவார் கள். கிராமத்தார் எல்லோரும் ஒற்றுமையாக இருந் தால் தீவட்டிக் கொள்ளைக்காரர்கூடக் கிராமங்களில் நுழையத் துணியமாட்டார்கள். ஒற்றுமையால் உ கத்தையே ஆளலாம்.

| | | | |
|---|---|---|---|
| கேடு | வெளியேறி | எழலாகாது | மங்கியுள்ள |
| வாளா | அபூர்வம் | செப்பனிட்டு | மாடமாளிகை |
| வறண்டு | சூறையாட | சீர்திருத்தம் | பண்ணையாட்கள் |
| கலிங்கு | டெலிபோன் | மண்வெட்டி | தருமகாரியங்கள் |
| தூர்ந்து | கிராமபோன் | குட்டிச்சுவர் | ஒற்றையடிப்பாதை |
| தீவட்டி | பாழ்வீடு | பொதுச்சாலை | ஒழிந்திருக்கும்போ |
| | [illegible] | மேற்பார்த்து | அடிமைப்படுகிறார்க |

அரும்பதவுரை: வாளா - சும்மா. தூர்ந்து - மூடுண்டு. ண்ணை - வயல். அபூர்வம் - அருமை. செப்பனிட்டு - திருத்தி. றை - கொள்ளை. சீர்திருத்தம் - ஒழுங்கு.

## பயிற்சி

I. (1) அப்பா வீட்டில் இருக்கிறார். காக்கை மரத்தின் கண் ருக்கிறது. அவனிடத்தில் பொய் இல்லை.—இவ்வாக்கியங்களி ள்ள வீட்டில், மரத்தின்கண், அவனிடத்தில்—என்ற பெயர்ச் சாற்கள் முறையே இல், கண், இடத்தில் என்ற உருபுகளை ஏற் ந்துள்ளன. இவ்வுருபுகள் ஏழாம் வேற்றுமை ஏற்றன ஆகும்.

(2) தம்பீ, இங்கே வா.—இவ்வாக்கியத்திலுள்ள தம்பீ ன்ற பெயர்ச்சொல்லில் கூப்பிடும் பொருள் விளங்குகிறது. இவ் று கூப்பிடும் பொருளுடைய பெயர்ச்சொற்கள் எட்டாம் வேற் மை ஏற்றன ஆகும்.

(3) பின்வரும் வாக்கியங்களிலுள்ள பெயர்ச்சொற்களுள் வையெவை ஏழாம் வேற்றுமை ஏற்றன? எவையெவை எட்டாம் வற்றுமை ஏற்றன?

அம்மா, சோறு போடு. ஆற்றில் வெள்ளம் பெருகு றது. பாலா, மணி அடி. அப்பா வீட்டில் இருக்கிறார். புற்றின் ண் பாம்பு வசிக்கும். பையா, உன் பெயர் என்ன? பிள்ளை ளே, நீங்கள் எங்கே படிக்கிறீர்கள்? குழந்தாய், உன் வீடு எங் ராணிகளிடத்தில் அன்பாய் இரு.

II. பின்வரும் சொற்றொடர்களை ஏற்றவாறு இணைத்து எசி:

| | |
|---|---|
| கரங்களில் | உலகத்தை ஆளலாம். |
| கரவாழ்க்கையில் | ஒற்றுமை அபூர்வமாகிவிட்டது. |
| ற்றையடிப்பாதைகளில் | முதலியன கெட்ட வழிகள். |
| ற்றுமையால் | ஆடம்பரச் செலவுகள் அதிகம். |
| ாம வாழ்க்கையில் | மாடமாளிகைகள் இருக்கும். |
| , சூது, வம்பு, வழக்கு | நடந்து போகலாம். |

## கேள்விகள்

1. கிராமங்கள் ஏன் வரவரப் பாழாகி வருகின்றன?
2. கிராமங்கள் அழியாதிருக்க என்ன செய்ய வேண்டும்?
3. கிராமப் பிரபுக்கள் எங்கே வாழ்வது நல்லது?
4. கிராமத்தார் ஒற்றுமையால் என்னென்ன பயன்களைப் லாம்?

# 17. புறாக்களும் வேடனும்

ஒரு நாள் வேடன் ஒருவன் பறவைகளைப் பிடிப் பதற்காகத் தன் வலையைக் ஃகயில் எடுத்துக்கொண்டு புறப்பட்டான். அவன் பல இடங்கள் சுற்றித் திரிந்தும் ஒன்றும் அவனுக்கு அகப்படவில்லை. அதனால் அவன் ஓர் ஆற்றங் கரையை அடைந்து, அங்குத் தன் வலையை விரித்துப் பலவகையான தானியங் களைத் தெளித்துவிட்டு அங்கிருந்த ஒரு செடி மறை வில் ஒளிந்து கொண்டிருந்தான்.

அப்போது **சித்திரக்கிரீவன்** என்னும் ஒரு புறாவரசு அங்கே தன் பரிவாரங்களுடன் வந்து ஒரு வன்னி மரத்தில் தங்கியது.

அது கீழே தானியங்கள் சிந்திக்கிடப்பதைக் கண்டு, மற்றைய புறாக்களைப் பார்த்து, "மனித சஞ்சாரமில்லாத இடத்தில் தானியம் எப்படி வரும்? நன்றாய் யோசனை செய்யாமல் இதைத் தின்னலா காது" என்றது. அதைக் கேட்ட புறாக்களில் ஒன்று "இப்படி யோசித்துக் கொண்டிருந்தால் ஒருபோதும் நமக்கு இரை அகப்படாது; சந்தேகப்படுகிறவர்கள் எப்போதும் துக்கத்தையே அனுபவிப்பார்கள். ஆகை யால், நாமனைவரும் தைரியமாய்ச் சென்று, இதைத் தின்பதே சரி; பிறகு வருவது வரட்டும்" என்றது. அப்படியே புறாக்கள் எல்லாம் கீழே இறங்கித் தானி யங்களைத் தின்னத் தலைப்பட்டன; உடனே வலையில் அகப்பட்டுக் கொண்டன. அதைக் கண்ட சித்திரக் கிரீவன், "ஐயையோ, நம்முடைய கூட்டத்தவர்கள் உடனே அகப்பட்டுக்கொண்டார்களே! நாம் இங்கு

னியாய் இருப்பதில் பயன் என்ன ?'' என்று சொல்லித் தானும் கீழே வந்து வலையில் அகப்பட்டுக் கொண்டது.



புருக்கள் வலையில் சிக்கிக்கொண்டதைக் கண்ட வேடுவன் சந்தோஷத்தோடு அவைகளைப் பிடிக்க ஓடிவந்தான். இதைக் கண்ட புருக்கள் சித்திரக் கிரீவனைப் பார்த்து, " நாங்கள் நீ சொன்னதைக் கேளாமல், இந்த மூடப் புருவின் பேச்சைக் கேட்டு வலையில் அகப்பட்டுக்கொண்டோம்'' என்று சொல்லி விசனப்பட்டன.

அப்பொழுது சித்திரக்கிரீவன், " நடந்த செய்தியைப் பற்றி இப்பொழுது ஆலோசிப்பதில் பயனில்லை. நான் ஓர் உபாயம் சொல்லுகிறேன்.

எல்லோரும் வலையுடன் ஒருசேரப் பறந்து வேறு இடத்துக்குப் போக வேண்டும். அப்படிச் செய்தால் நம்முடைய உயிரைக் காப்பாற்றலாம்'' என்றது. அதைக் கேட்டவுடன் எல்லாப் புருக்களும் வலையோடு பறந்து போயின.

அதைக் கண்ட வேடுவன் ஆச்சரியமடைந்து, ''ஓகோ, இவை ஒரே மனமாய் வலையோடு பறக்கின்றன; ஆயினும் இவைகளுக்குள் சண்டை நேரிடும்; அப்பொழுது இவைகளைப் பிடித்துக் கொள்ளலாம்'' என்று எண்ணிக்கொண்டு அவைகளின் பின்னே ஓடினன். புருக்கள் வேகமாய்ப் பறந்து அவன் கண்ணுக்குத் தோன்றுமல், மறைந்து போயின. ஆகையால் வேடன் மிக்க வருத்தத்தோடு திரும்பிவிட்டான்.

சித்திரக்கிரீவன் தன் கூட்டத்தோடு தன்னுடைய சிநேகிதனுகிய இரணியகன் என்னும் எலியரசன் வசிக்கும் வனத்தில்போய் இறங்கிற்று. புருக்கள் இறங்கின சப்தத்தைக் கேட்டு இரணியகன் வளையிலிருந்து வெளியேவந்து சித்திரக்கிரீவனைப் பார்த்துச் ''சிநேகிதா, என்ன விசேடம்?'' என்றது. சித்திரக்கிரீவன், ''நாங்கள் மூடத்தனமாய் இந்த வலையில் சிக்கிக்கொண்டோம்; உன் பற்களால் இந்த வலையைக் கடித்து அறுத்து எங்களை விடுவி'' என்றது. இரணியகன் அப்படியே வலையைத் தன் கூரிய பற்களால் கடித்து அறுத்துப் புருக்களை விடுவித்தது. புருக்கள் எலிக்கு நன்றி கூறிச் சுகமாய்ப் பறந்து போயின.

சிறுவர்களே! இக்கதையினுல், நாம் 'எந்தக் காரியத்தையும் நன்றுய் ஆராய்ந்து செய்ய வேண்

ும்; அவசரப்பட்டு ஒன்றும் செய்யலாகாது', சேர்ந்து வாழ்வதே சிறந்த வலிமை' என்னும் நீதி களைத் தெரிந்து கொள்ளுகின்றோமல்லவா ?

| | | |
|---|---|---|
| விடுவி | உபாயம் | பரிவாரம் |
| சப்தம் | விசனம் | ஒரே மனமாய் |
| ஒருசேர | சந்தேகம் | அநுபவிப்பார்கள் |
| மூடப்புரு | வன்னிமரம் | |

அரும்பதவுரை : உபாயம் - தந்திரம், சூழ்ச்சி. பரிவாரம் - கூட்டம். விடுவி - தப்பிக்கச் செய், விடுதலை செய். ஒருசேர - சேர்ந்தாற்போல்.

பயிற்சி

I. (1) பின்வரும் வாக்கியங்களிலுள்ள பெயர்ச்சொற்களுக்குத் திணை, பால், எண், இடம், வேற்றுமை ஆகியவற்றைக் கூறு :

வேடன், புருக்களுடன், சித்திரக்கிரீவன், மரத்தில், அவைகளை, அந்தணு, வண்டி, சிறுவர்களே.

(2) பின்வரும் பெயர்ச்சொற்களுக்கு எட்டு வேற்றுமைகளையும் கூறுக :

குழந்தை, பையன், பெண், பிள்ளைகள், அண்ணன், நண்பன், தோழி, தம்பி.

II. (1) இப்பாடத்திலுள்ள படத்தில் நீ கவனிக்கும் விஷயங்களைப்பற்றி மூன்று வாக்கியங்கள் கூறு.

(2) பின்வரும் வாக்கியங்களில் தடித்த எழுத்தில் உள்ள வார்த்தைகளுக்குப் பதிலாக வேறு வார்த்தைகளை அமைத்துப் படி :

நான் ஒரு உபாயம் சொல்லுகிறேன்.

இந்த வனம் மனித சஞ்சாரம் இல்லாதது.

சந்தேகப்படுகிறவர்கள் எப்போதும் துக்கத்தையே அநுபவிப்பார்கள்.

**கேள்விகள்**

1. தானியங்களைக் கண்டதும் சித்திரக்கிரீவன் மற்றப் புறாக்களிடம் என்ன சொல்லிற்று ?
2. புருக்கள் வலையில் அகப்படக் காரணம் என்ன ?
3. சித்திரக்கிரீவன் ஏன் வலையில் சிக்கிக்கொண்டது ?
4. கடைசியில் புருக்கள் எவ்வாறு தப்பித்துக் கொண்டன ?
5. இதனால் விளங்கும் நீதி யாது ?

## 18. செல்வமும் வறுமையும்

முயற்சியால் ஒருவர் மிக்க செல்வம் ஈட்டலாம். ஏழைக் குடியிலே பிறந்தோர் சிலர் இரவும் பகலும் உழைத்துப் பெருஞ்செல்வம் திரட்டியுள்ளனர். அமெரிக்கா ஐக்கிய நாடுகளில் உலகம் முழுவதும் பெருஞ் செல்வர் என்று புகழ் கொண்ட **ஜான் டேவிஸன் ராக் பெல்லர், ஆண்ட்ரூ கார்னீஜி, ஹென்றி போர்டு** என்ற மூவரும் இளம் பருவத்தில் மிகவும் வறியவர்களாய் இருந்தவர்களே.

கடலை, பருத்தி முதலிய பொருள்களை அயல் நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யும் வியாபாரத்தில் சில வருஷங்களில் பெரும் பணம் படைத்த பலர், நம் நாட்டில் இருக்கின்றனர். பிறர் செய்யாத சிறு கைத் தொழில்களைத் தொழிற்சாலைகளால் வளர்த்து, நல்ல வழியில் செல்வம் திரட்டியவர்களும் உண்டு. தம்மிடம் உள்ள சொற்பப் பணத்தை நம்பிக்கை மிக்க இடங்களில் வட்டிக்குக் கொடுத்துச் சில வருஷங்களில் சீமான்கள் ஆனவர்களும் உளர்.

பலவகைத் தருமங்கள் செய்து ஆடம்பரமாக வாழ்ந்த செல்வர் திடீரென்று தம் செல்வத்தை இழந்த கதைகள் பல நம் நாட்டில் உண்டு. முன்னோர் தேடி

வைத்த செல்வத்தின் அருமை அறியாமல், பல தீய வழிகளில் வாரி இறைத்து வறியவரானவரும் உளர். வெள்ளம் பெருகி வீட்டையும் நிலங்களையும் அழித்ததால், தெருத்தெருவாய்க் கஞ்சிக்கு அலைபவர்களும் உண்டு. தீக்கொடுமை, கொள்ளை, பூகம்பம் முதலிய காரணங்களால் தம் பரம்பரைச் செல்வத்தை இழந்தோரும் இருக்கின்றனர். எந்த வழியால் செல்வத்தை இழந்தாலும், செல்வ வாழ்விலிருந்து வறிய வாழ்வுக்கு வருவது மிக்கத் துன்பமே தருவதாகும்.

செல்வம் என்பது இன்னதென அறியாத பலர் எல்லா நாட்டிலும் இருப்பர். நமது நாட்டில் இப்படிப்பட்ட ஏழைக் குடிகளின் தொகை அதிகம். காற்றேட்டம் உள்ள மாளிகைகளில் வாழும் பிரபுக்கள் கதவு, பூட்டு ஒன்றும் இல்லாத குடிசைகளில் வாழும் ஏழைகளுக்கு இரங்கவேண்டும். "ஏழைகளாய் இருந்து வருந்துவது அவர்கள் வினைப்பயன்; செல்வத்தால் மயங்கி மதங்கொண்டு திரிவது நமது பாக்கியம்" என்று எண்ணுவோர் மனிதர் இனத்திற் பிறந்தும் மிருகங்களே ஆவர்.

பகலெல்லாம் பாடுபட்ட பலர், இரவிலே அரை வயிற்றுக் கஞ்சி குடித்துத் தெருவிலே தூங்கும்போது, தான் உண்ணும் உணவுக்காகத் தன் விரலைக்கூட அசைக்காத ஒருவன், வயிறார உண்டு குடித்துப் பஞ்சு மெத்தையில் தூங்குகிறான். ஒவ்வொரு மனிதனும் தன் செலவுக்கு வேண்டிய பணத்தை உழைத்தே தேட வேண்டும். ஏழைகள் இயற்கையாகவே உழைத்துத் தேடுகிறார்கள். பணக்காரர் செலவழிக்கவேண்டிய அளவுக்குமேல் பணம் உள்ளவர்களாய் இருக்கிறார்கள்; அவர்கள் உழைப்பதில்லை. "இவ்வளவு ஏழைகள்

உலகத்தில் இப்படி வருந்தும்போது, நாம் உழைக்கா மல் உண்ணலாமா?'' என்ற எண்ணம் அவர்களுக்கு உண்டாக வேண்டும்.

ஏழைகள் பலர் உழைத்துத் தேடிய பொருளால் ஒருவர் பணக்காரர் ஆகிறார். தமக்குப் பணம் தேடிக் கொடுத்த அந்த ஏழைகளுக்காக உழைப்பது அவர் கடமை அன்றோ? பணத்தைச் செலவிடும்போது, தம் முடைய ஆடம்பரங்களைச் சுருக்கிக் கொண்டு ஒவ் வொரு காசும் ஏழைகளுக்குப் பயன்படும்படி செல விடவேண்டும். ஏழைகளின் குடிசைகளில் நோய் பரவாமலும், அவர்கள் குழந்தைகள் செலவில்லாமற் கல்வி பெறவும் செல்வம் உள்ளவர்களே உதவி புரிய வேண்டும்.

இங்கிலாந்து தேசத்தில் மோட்டார் எந்திரம் முதலிய வியாபாரங்களால் பெரும் பணம் சேர்த்துள்ள **நபில்ட் பிரபு** என்ற சீமான் இருக்கிறார். அவர் தம் தொழிலாளிகளுக்கெல்லாம் பண உதவிகள் செய்கிறார்; சென்ற சில வருஷங்களில் லக்ஷக்கணக்கான பவுன் களை ஏழைகளுக்குப் பயன்படுமாறு பலவழிகளில் தருமம் செய்திருக்கிறார். செல்வம் பெற்றவர் புகழ் பெறுவதற்கு ஏழைகளுக்கு உதவுவதைக் காட்டிலும் வேறு வழி இல்லை.

"செல்வம் திரட்டுவதே நம் வாழ்வின் நோக்கம்" என்று யாரும் நினைக்கக்கூடாது. மலையையும், கடலை யும் சூரிய சந்திரர்களையும், மேகங்களையும், வான வில்லையும், சிறு குழந்தைகளையும், சிற்பங்களையும், கடவுள் செயலின் பிற அற்புதங்களையும் பார்த்தலால் வரும் ஆனந்தம், செல்வத்தால் வராது. உலகில்

உள்ளளவும் கவலையற்று நல்ல நெறியில் வாழ்வதற்கு வேண்டிய செல்வமே ஒருவருக்குப் போதுமானது.

செல்வம் தேடப்போய்த் தன்னை அதற்கு அடிமையாக்கிய மனிதன், வறுமையில் அமைதியாய் வாழும் மனிதன் அடையும் அவ்வளவு இன்பத்தை அடைய மாட்டான். செல்வம் ஏறஏறக் கவலைகளும் வளர்ந்து கொண்டே வரும். வேண்டிய செல்வத்தைச் சேமித்து வைக்கவும் வளர்க்கவும் இரவெல்லாம் விழித்திருந்து யோசனை செய்ய நேரிடும். அன்றாடம் கிடைக்கும் சொற்பப் பொருளைக் கொண்டு, மனம் மகிழும் வாழ்க்கையுள்ள நல்லோன், பத்து வருஷத்துக்கு முன்பு நடந்த ஒரு காரியத்துக்காக வருந்தியும், பத்து வருஷத்துக்குப் பின் வரப்போகும் கஷ்டத்துக்காகக் கலங்கியும், தூங்காமற் காலம் கழிக்கும் செல்வர்களைக் காட்டிலும் மிகவும் உயர்ந்தவனே யாவான். **'மனத்தின் நிறைவே உயர்ந்த செல்வம்; மேலும் மேலும் வேண்டும் என்ற ஆசையே கொடிய வறுமை.'**

| | | | |
|---|---|---|---|
| தீய | வயிறார | திடீரென்று | பஞ்சுமெத்தை |
| வட்டி | முயற்சி | பாக்கியம் | தேடுகிறார்கள் |
| பவுன் | ஆனந்தம் | வினைப்பயன் | மழலைச்சொற்கள் |
| தீவட்டி | பூகம்பம் | தொழிலாளி | அடிமையாக்கிய |
| திரட்டி | சேமித்து | புகழ்பூண்ட | சுருக்கிக்கொண்டு |
| அமைதி | ஈட்டலாம் | மதங்கொண்டு | மனத்தின் நிறைவு |

அரும்பதவுரை : அமைதி - அடக்கம். ஈட்ட - சம்பாதிக்க. பூகம்பம் - பூமியின் அசைவு. திரட்டி - சேர்த்து, சேமித்து. மழலைச் சொற்கள் - குழந்தைகள் கொஞ்சிப்பேசும் வார்த்தைகள். தீய - கெட்ட. புகழ் பூண்ட - கீர்த்தி பெற்ற.

### பயிற்சி

I. (1) பின்வரும் வாக்கியங்களில் உள்ள எழுவாய், பயனிலை செயப்படு பொருள்களை எடுத்துக் கூறு.

முயற்சியால் ஒருவர் மிக்க செல்வம் ஈட்டலாம்.

பணக்காரர்கள் ஏழைகளுக்கு இரங்கவேண்டும்.

ஒவ்வொரு மனிதனும் தன் செலவுக்கு வேண்டிய பணத்தை உழைத்துத் தேடவேண்டும்.

வறுமையும் செல்வமும் ஒரு வழி நில்லா.

(2) மேலே உள்ள வாக்கியங்களில் முறையே ஈட்டலாம், இரங்க வேண்டும், தேடவேண்டும், நில்லா—என்பன வினை முற்றுக்கள். அவற்றுள், ஈட்டலாம், தேடவேண்டும்—இவ்விரண்டும் செயப்படு பொருள் உடைய வினைகள் என்பதையும், இரங்கவேண்டும், நில்லா—இவையிரண்டும் செயப்படு பொருள் இல்லாத வினைகள் என்பதையும் கவனிக்கவும். செயப்படுபொருள் இல்லாத வினை செயப்படுபொருள் குன்றியவினை எனப்படும். செயப்படுபொருள் உள்ள வினை செயப்படுபொருள் குன்றுவினை எனப்படும்.

(3) பின்வரும் வினைமுற்றுக்களில் எவை யெவை செயப்படு பொருள் குன்றுவினைகள்? எவை யெவை செயப்படும் பொருள் குன்றிய வினைகள்?

நட, கொடு, பேசினான், குடிக்கும், ஓடிற்று, வசிக்கும், பா, போனோம், வருவார்கள்.

II. கோடுகள் உள்ள இடங்களில் ஏற்ற சொற்களை அமைத்துப் படி :—

(1) ——— பணத்தை வாரி இறைப்பவர் கடைசியில் கஞ்சிக்கு அலேவர்.

(2) செல்வத்துக்கு அடிமையானவன் ———.

(3) வறுமையில் ——— மனிதன் துன்பம் அடைவான்.

(4) மனத்தின் நிறைவே ———.

(5) ——— என்ற ஆசையே கொடிய வறுமை.

### கேள்விகள்.

1. செல்வம் தேடக்கூடிய வழிகள் சிலவற்றைக் கூறுக.
2. செல்வம் எப்படி யெல்லாம் அழிதல் கூடும்?
3. வறியவர்க்குச் செல்வர் என்ன செய்ய வேண்டும்?
4. அமெரிக்காவிலுள்ள பெருஞ் செல்வர் சிலரைக் கூறுக.

# 19. நூல் நிலையம்

செல்வத்தாற் சிறந்த பெரியோர் நமது நாட்டில் முன்னாளில் எத்தனை பேர் இருந்தார்கள்? இன்று நாம் அவர்களைப்பற்றி நினைக்கின்றோமா? கம்பர், திருவள்ளுவர், காளிதாஸர், வால்மீகர் முதலிய புலவர்களைப்பற்றி அடிக்கடி நினைக்கின்றோமே! அதற்கு என்ன காரணம்? செல்வம் தேடிய சீமான் உலகத்திற்குச் செய்யும் உதவியைக் காட்டிலும், கல்வியைக் கற்ற புலவர் செய்யும் உதவி பலமடங்கு அதிகமாகும் என்ற எண்ணமேயன்றோ ?

பன்னூறு வருஷங்களுக்குமுன்பு வாழ்ந்த கவிகள் எழுதிய கவிகளை இன்று நாம் படிக்கும்போது, அவர்களோடு பேசிப் பழகுவதுபோன்ற இன்பத்தை அடைகின்றோம். கம்பர் பாடலைப் படிக்கும்போது, கம்பரே நேரில் வந்து சொல்வதாக நமக்குத் தோன்றுகிறது. இப்படிப் பழைய புலவர்களோடு கலந்து அடையும் இன்பம் எவ்வளவு பணம் செலவிட்டாலும் எளிதிற் கிடைக்குமா?

புலவர்களோடு பழகுவதற்கு அவர்கள் இயற்றிய நூல்களே உற்ற துணையாம். புத்தகங்களை ஒன்றொன்றாக வாங்கி அவற்றின் அருமையை யறிந்து சேர்த்து வைத்திருப்பவன், தனக்கு எவ்வளவு பெரிய கவலை வந்தாலும் புத்தகங்களோடு பழகி எல்லாவற்றையும் மறந்து இன்புறலாம்.

சிலர் பெரிய மாளிகைகளைக் கட்டுவார்கள். யாராவது படித்தவர்கள் வந்தால் வேண்டியிருக்குமே என்று எண்ணி, ஒரு பெரிய அறையில் அநேக புத்தகங்களை அழகாய் அடுக்கி வைத்திருப்பார்கள். "என்ன புத்

தகம் வாங்கினேம், எங்கே வைத்தோம்'' என்று தெரி யாமல் அடுக்கி வைத்திருக்கும் அவர்கள், புத்தகக் கோயிலின் காவற்காரர்களே யாவர். புத்தகக் கோயிற் பூசாரியாக வேண்டு மென்றல், ஒவ்வொரு புத்தகத் தையும் படித்து இன்பமுறும் ஊக்கம் வேண்டும்.

நம் நாட்டில் முன்னுளில் அச்சுப் புத்தகங்கள் இல்லை. பனையோலை ஏடுகளில்தான் எல்லாப் புத்தகங் களும் இருந்தன. பழமையான புலவர் குலங்கள் வாழ்ந்த ஊர்களில் புகுந்து பார்த்தால், ஆயிரக்கணக் கான ஏடுகளைப் போற்றிய குடும்பங்கள் திருநெல்வேலி ஜில்லாவிலுள்ள ஆழ்வார் திருநகரியிலும், புதுக் கோட்டை சமஸ்தானத்திலுள்ள மிதிலைப் பட்டியிலும் இன்றும் உள்ளன.




இக்காலத்தில் இத்தகைய ஏடுகளின் பெருமையை நேரிற் காண வேண்டும் என்றல், தஞ்சாவூர் சரஸ்வதி மஹால் நூல் நிலையத்திலும், மதுரைத் தமிழ்ச் சங்

கத்திலும், சென்னை அரசாங்கத்துக் கையெழுத்துப் புத்தகசாலைகளிலும், சென்னை அடையாற்றுப் புத்தக சாலையிலும் காணலாம். காஷ்மீரம், பரோடா, மைசூர், திருவாங்கூர் முதலிய சுதேச சமஸ்தானங்களில் இப்படியே பழைய ஏடுகளைத் தேடிச் சேர்த்துப் போற்றி வருகிறார்கள்; அபூர்வமான சில புத்தகங்களை அச்சிட்டும் வெளியிடுகிறார்கள்.

இந்நாளில் பொதுமக்களின் அறிவு வளர்ச்சிக்கும் ஒவ்வொரு பாஷையிலும் நூல்கள் எழுதுவித்துப் புத்தக சாலைகளிற் சேர்க்கவேண்டும். பெரிய நகரங்களில் நூற்றுக்கணக்கான மக்கள் ஒரே காலத்தில் பல புத்தகங்களை எடுத்துப் படிக்கத்தக்க பெரிய நூல் நிலையங்கள் வேண்டும். சிறு நகரங்களில் பொதுவாக நூல் நிலையங்கள் ஒன்று இரண்டேனும் இருத்தல் வேண்டும்.

கலாசாலைகளில் ஆசிரியர்களுக்கும் மாணவர்களுக்கும் பொதுவாக உதவக்கூடிய பல புத்தகங்களைச் சேர்த்து வைக்கப்பட்ட நூல் நிலையங்கள் வேண்டும். சரித்திரம் ஆராய்வோர் கூடும் இடத்தில் அதற்கு ஏற்ற புத்தகங்கள் மிகுதியாய் வேண்டும். சாஸ்திர ஆராய்ச்சிக்காரர் உள்ள இடத்தில் அவர்களுக்கு ஏற்ற நூல்கள் மிகுதியாய் வேண்டும்.

கிராமங்கள் தோறும் சிலரேனும் படித்தவர் இருக்கலாம்; அவர்களைக் கொண்டு மற்றவர்களுக்கு அறிவு ஊட்ட ஒரே வழியுண்டு. சில புத்தகங்களைச் சிறு பெட்டிகளில் வைத்து ஒவ்வொரு கிராமத்துக்கும் கொண்டுபோய்க் கொடுத்து வாங்கிவரும் வண்டிகள் வேண்டும். இந்த வண்டிகளே கிராமப் புத்தகசாலைகள் ஆகும். எந்த வழியால் புத்தகங்கள் சேர்த்து வைத்

தாலும் பலர் படித்துப் பயன் பெறுவதே நோக்கமாய் இருக்கவேண்டும்.

| | | | |
|---|---|---|---|
| மஹால் | கையெழுத்து | நூல்நிலையம் | அறிவுவளர்ச்சி |
| பூசாரி | பலமடங்கு | புத்தகக்கோயில் | அடுக்கிவைத்து |
| புலவர் | கலாசாலை | தமிழ்ச்சங்கம் | புகுந்துபார்த்தால் |
| நோக்கம் | உற்றதுணை | புத்தகசாலை | அறிவு ஊட்ட |
| கவிகள் | பன்னூறு | காளிதாசர் | வால்மீகர் |

அரும்பதவுரை: புலவர் - அறிவுடையோர். வால்மீகர் - புற்றை இருப்பிடமாகக் கொண்டவர். கவிகள் - பாடல்கள் - பாடல்களை இயற்றுகிறவர்கள். உற்ற - பொருந்திய. பன்னூறு - பல நூறு.

## பயிற்சி

I. 1. (1) புலவர்கள் நூல்கள் இயற்றினார்கள். (2) நாம் அந்நூல்களைப் படிக்கிறோம். நூல்கள் என்ற சொல் எழுவாயாக வரும்படி இவ்விரு வாக்கியங்களையும் மாற்றினால் (3) நூல்கள் புலவர்களால் இயற்றப்பட்டன. (4) அந்நூல்கள் நம்மால் படிக்கப்படுகின்றன—என்று அமையும். இவ்விரு வகையிலும் கருத்து மாறுபடாதிருப்பதைக் கவனிக்கவும். 1, 2 வாக்கியங்களில் இயற்றினார்கள், படிக்கிறோம்—என்ற வினைமுற்றுக்கள் ஒன்றைச் செய்தார்கள் என்னும் முறையில் அமைந்திருக்கின்றன. ஆதலால் இவை போன்றவை செய்வினை எனப்படும். 3, 4 வாக்கியங்களில் இயற்றப்பட்டன, படிக்கப்படுகின்றன—என்ற வினைமுற்றுக்கள் தொழில்கள் செய்யப்படுகின்றன என்னும் முறையில் அமைந்திருக்கின்றன. ஆகையால் இவை போன்றவை செயப்பாட்டு வினை எனப்படும்.

2. பின் வரும் வாக்கியங்களிலுள்ள செய்வினைகளைச் செயப்பாட்டு வினைகளாகவும், செயப்பாட்டு வினைகளைச் செய்வினைகளாகவும், மாற்றி எழுதுக.

ஆசிரியர்கள் மாணவர்களுக்குக் கற்பிக்கிறார்கள்.

நான் இச் சித்திரத்தை வரைந்தேன்.

நாம் பல புத்தகங்களையும் படிக்கவேண்டும்.

ற்குக் கரணம் போடுகிருர். வாழ்ந்த கதையைப் பசிப் பயனில்லே; வாழும் கதையையே கவனிக்க வண்டும்!

**கந்தன் :** வாழும் கதை சாஸ்திரத்துக்குள்ளே ான் புகுந்து கொண்டிருக்கிறதோ?

**கண்ணன் :** ஆம், அதற்கு என்ன சந்தேகம்? ாயங்காலம் ஆறரை மணிக்குப் பேசும் படம் பார்க்க டுகிரேும். அப்படம் எப்படி வந்தது? மேடையில் ாடகம் நடப்பது போன்ற காட்சியை அங்கு எதனுல் ாண்கிரேும்? எந்தச் சரித்திரத்திலே இந்த விசித் ரத்தைக் காணமுடியும்? 'விர்' என்ற சப்தத்தோடு ந் தலேக்குமேல் ஆகாய விமானம் ஓடுகிறதே, அது ப்படி வந்தது? அரையணுக் கொடுத்து, இரண்டு மல் தூரம் மோட்டார் வண்டியில் போகிரேுமே! மாட்டார் வண்டி எவ்வாறு கண்டுபிடிக்கப்பட்டது? வை எல்லாம் சரித்திரத்தில் உண்டா? இவை இரவும் கலும் உழைத்து உண்மையை உணர்ந்து வெளி ட்ட சாஸ்திர அறிஞர்களின் உழைப்பின் பயனே ல்லவா?

**கந்தன் :** சாஸ்திரங்களின் உபகாரம் போதும் ாதும். இல்லாத நோய்களே யெல்லாம் அதனுல் காண்டு வரலாம். கவலேயற்று வயலில் உழும் க்களே ஆகாயத்திலிருந்து குண்டுவீசிக் கொல்லலாம். சுக்காற்றுகளால் ஆயிரக் கணக்கான ஜனங்களே ரே நிமிஷத்தில் அழிக்கலாம். பிரயாணம் செய்யும் ாது ஆயிரக்கணக்கில் மடியலாம். பீரங்கி இருந்தால் ண்ணிற் காணுத பகைவனேயும் கொல்லலாம். ஆ! சாஸ்திரங்கள் செய்துள்ள உபகாரத்தை ன்னவென்று சொல்லுவேன்!

**கண்ணன் :** பால் ஊட்டும்போது மூச்சு அடைத்து ஒரு குழந்தை செத்தால், குழந்தைகளுக் குப் பாலே கொடுக்கக் கூடாது என்று சொல்வதா அடுப்பு எரிக்கவும், சமைத்துச் சாப்பிடவும் உதவும் நெருப்பு ஒரு கூரை வீட்டில் பிடித்து அதை எரித்து விட்டால், நெருப்பே வேண்டாம் என்று கூறலாமா? புத்தகம் தைப்பதற்காக வைத்த ஊசியை எடுத்து ஒருவன் கையில் குத்திக்கொண்டால், ஊசி நாசமே செய்யும் என்று உரைப்பதா? சாஸ்திரிகள் பல உண் மைகளைக் கண்டு சொல்லுகிறார்கள். அவைகளை நல் வழியில் உபயோகித்தால், நாம் நல்ல பலனை அடை கிறோம்; கெட்ட வழியில் உபயோகித்தால் அழிகிறோம். இது சாஸ்திரத்தின் குற்றமா?

**கந்தன் :** சாஸ்திரம் என்ற பெயரைக் கேட் டாலே எனக்கு நடுக்கம் வருகிறது.

**கண்ணன் :** கிராமபோன் பாட்டுக் கேட்கும் போது நடுக்கம் வருகிறதா? ரேடியோ பாட்டுக் கேட்டு நேற்றுக் கூத்தாடினாயே! உன் கையில் ஊசியால் மருந்து ஏற்றினார்களே. உடனே நீ குணமடைய வில்லையா? சாஸ்திரங்களால் உண்டாகும் நன்மை அளவற்றது. பிற நாட்டினரைப்போல் நாமும் தலை நிமிர்ந்து நடக்க வேண்டுமென்றால் சாஸ்திரங்களில் நன்றாய்ப் பழகவேண்டும்.

**கந்தன் :** சரிதான், சாஸ்திரமும் வேண்டும் என்று நான் ஒப்புக்கொள்ளுகிறேன்.

**கண்ணன் :** சரி, நான் சரித்திரத்தை வெறுக்க வில்லை. சாஸ்திரத்தின் பெருமையைச் சொல்லவே இவ்வளவும் பேசினேன்.

| | | | |
|---|---|---|---|
| வேலி | ஊட்டு | பிரசங்கம் | குண்டு வீசி |
| கட்சி | நடிப்பது | முன்னேற்றம் | முப்பாட்டனர் |
| மேடை | முன்னேர் | உவப்பானது | பரம உபகாரம் |
| புத்தர் | சாஸ்திரம் | விசித்திரம் | மூச்சுஅடைத்து |
| பீரங்கி | சரித்திரம் | முடிசூட்டி | தரும உபதேசம் |
| நாசம் | பழங்கதை | வீரதிலகம் | பூர்வீக நிலைமை |

**அரும்பதவுரை :** உவப்பு - மகிழ்ச்சி. பூர்வீகம் - பழமை. பரம - மேலானது. நாசம் - அழிவு. பிரசங்கம் - சொற்பொழிவு, பிரிவுரை. விசித்திரம் - அதிசயம். திலகம் - பொட்டு. உபதேசம் - போதனை, புத்திமதி.

## பயிற்சி

I. (1) தம்பி, வா, ஐயா, வருக—இவ்விரு வாக்கியங்களிலுள்ள வினைமுற்றுக்களைக் கவனி. வா என்பது ஒருவரைப் பார்த்துக் கட்டளையிடும் பொருளை உணர்த்துகிறது. வருக என்பது ஒருவரைப் பார்த்து மரியாதையாகக் கூறுவதைக் குறிக்கிறது.

(2) கட்டளையிடுவதைக் குறிக்கும் வினைமுற்று ஏவல் வினைமுற்று எனப்படும். மரியாதையாகக் கூறுவதைக் குறிக்கும் வினைமுற்று வியங்கோள் வினைமுற்று எனப்படும்.

(3) பின்வரும் வாக்கியங்களிலுள்ள ஏவல் வியங்கோள் வினைமுற்றுக்களை முறையே கூறுக.

நல்வினைகளைச் செய். யாவருக்கும் நன்றே செய்க. ஐயா எனக்கு ஒரு பழம் தருக. ஆசிரியர் சொற்படி நட. சிறியேனை மன்னித்தருள்க. உன் பாடங்களைக் கவனமாகப் படி.

II. (1) கிராமபோன், ரேடியோ, சாஸ்திரம், சரித்திரம்—இவற்றைப் பற்றி ஒவ்வொரு வாக்கியம் எழுது.

(2) மகிழ்ச்சி, உபதேசம், ஒட்டகம், சுருக்கம், அடுக்கி, அறிவு—இவற்றை வினைச்சொற்களாக மாற்றி அமைத்து முறையே ஒவ்வொரு வாக்கியம் கூறு.

## கேள்விகள்

1. சரித்திரம் பயில்வதால் உண்டாகும் நன்மை என்ன ?
2. சாஸ்திரத்தால் தேசம், எவ்வாறு முன்னேற்றம் அடையும் ?

3. சாஸ்திர ஆராய்ச்சியால் நேர்ந்துள்ள தீங்குகள் எவை?

4. சரித்திரமும் சாஸ்திரமும் கலப்பதால் விளையக்கூடிய நன்மைகள் என்னென்ன?

## 21. பட்டு

பருத்தியால் நெய்த ஆடைகளைச் செல்வம் மிக்க சீமான்களும், வறுமையால் வாடும் ஏழைகளும் உடுத்துகிறார்கள். பட்டுக்கரை சேர்த்த பருத்தியாடைகளை நடுத்தர நிலைமையில் உள்ளவர்கள் அணிகிறார்கள். பட்டால் நெய்த ஆடைகளைச் செல்வர்கள் மாத்திரம் அணிகிறார்கள்.

நமது நாட்டின் ஆண் மக்கள் அதிகமாகப் பட்டாடை அணிவதில்லை. சாதாரண நிலைமையில் உள்ள குடும்பத்துப் பெண்களும் பருத்தி நூலாடையைக் காட்டிலும் பட்டாடையிலேயே அதிக விருப்பம் உள்ளவர்களாய் இருக்கிறார்கள். ஆதலால் பெண் மக்கள் விருப்பத்துக்காகவே பெரும்பாலும் பட்டு நூல் நெசவு நடப்பதாகச் சொல்லலாம்.

பட்டு நூல் ஒருவகைப் புழுவினால் நூற்கப்படுவது. பட்டுப்பூச்சி தான் இருப்பதற்காக அமைக்கும் பட்டு நூலாலாகிய கூட்டை மனிதர் அபகரிப்பதால், அப்புழு தன் உயிரை இழக்க நேரிடுகிறது. பட்டுப் பூச்சியின் வரலாற்றைச் சிறிது அறிந்துகொண்டால், இந்த உண்மை விளக்கமாகும்.

தாய்ப்பூச்சி கடுகுபோல் சிறிய உருவம் உள்ள பல முட்டைகள் இடும். இப்பூச்சிக்கு உணவு முசுக்கட்டை இலையாம். ஆகையால் அது முசுக்கட்டை

இலையின் மேல் முட்டை இடும். ஒரு தாய் இட்ட முட்டை நானூறுவரை இருக்கும். இம்முட்டைகள் எல்லாம் சூரிய வெப்பத்தால் பொரியும். முட்டை




பட்டுப்பூச்சியின் ஜீவியகால மாறுபாடுகள் :
1. ஆண் பட்டுப்பூச்சி. 2. பெண் பட்டுப்பூச்சி 3. முட்டைகளும் பட்டுப் புழுவும் 4. பட்டுப் புழு நூல் நூற்கும் விதம்
5. கூட்டுப்புழு

யிலிருந்து வெளிப்படும் புழு, சாம்பல் நிறமுள்ளதாய் அரைக்கால் அங்குல நீளம் இருக்கும்.

இப்புழு தான் பிறப்பதற்கு இடமாய் இருந்த முசுக்கட்டை இலையைத் தின்று ஒரு வாரத்தில் நன்றாய் வளர்ந்து விடும். பிறகு மேல் தோலை உரித்து வெண்மை நிறம் அடையும். இப்படி ஐந்தாறு நாட்களுக்கு ஒரு முறையாக நான்கு அல்லது ஐந்துதரம் தோல் உரித்து நிறம் மாறும். முதலில் சாம்பல் நிறமாய் இருந்த புழு, தோல் உரிய உரியப் பொன்னிறம்

அடையும். அந்த நிலைமையில் முசுக்கட்டை இலை களைத் தின்னும் வழக்கத்தை நிறுத்திவிடும்.

இப்படி வளர்ந்த புழு இரண்டங்குலம் நீளம் இருக்கும். முசுக்கட்டைச் செடியில், இந்தப் பருவத் தில் பட்டுப்புழு, வாயின் கீழிருந்து ஒருவகைப் பிசினை வெளியேற்றும். இப்பிசினிலிருந்தே நூல் நூற்றுத் தானும் உள்ளே இருந்துகொண்டு கூடு கட்டிக்கொள்ளும். இந்தக் கூடுகட்ட மூன்று நாட்கள் ஆகும். கூட்டில் உள்ள புழு மீண்டும் ஒருமுறை தோல் உரித்துப் பொன்னிறம் அடையும். பின் இருபது தினங்கள் அக் கூட்டுக்குள் உறங்கும். தூங்கும்போதே இந்தப் புழுவின் உடம்பு வளர்ந்து வேற்றுருவம் அடையும்.

கடைசியில் இறகு முளைத்த பட்டுப் பூச்சியாகி, தானே தனக்காக அமைத்தக் கூட்டைக் கிழித்துக் கொண்டு வெளியே வந்து ஆனந்தமாகப் பறக்கிறது. பட்டு நூல் வேண்டும்; பட்டாடை வேண்டும்' என்று ஆசைப்படும் நாம், இந்தப் பூச்சியை இறகு முளைத்து வெளியேற விடுவதில்லை. அவ்வாறு விட் டால் பட்டு நூல் ஒன்றும் மிஞ்சாது.

ஆகவே, பூச்சியோடு கூட்டை வெந்நீரில் போட்டு, பூச்சியைக் கருணையின்றிக் கொலை செய்து பட்டுநூலை எடுத்துக் கொள்கிறோம். நூலின் நுனி யைக் கண்டு பிடித்து ஒழுங்காகச் சுற்றுவது மிகவும் சிரமமான வேலை ஆகும். இரண்டாயிரம் பூச்சிகளைக் கொன்றால் ஒரு பவுண்டு பட்டு கிடைக்கும்.

இந்தப் பூச்சி ஆதியில் சீன நாட்டில் வளர்ந்தது. பிறகு ஜப்பான் நாட்டிலும் பரவிற்று. ஐரோப்பியர் களும் இதன் அருமையைக் கண்டு எடுத்து

பானர்கள். நம் நாட்டில் இரண்டாயிரம் ஆண்டு களுக்கு மேலாகப் பட்டுநூல் நெய்யும் வழக்கம் உண்டு என்று நம் புத்தகங்களால் நாம் அறிகிறோம். தமிழ் நாட்டில் இப்பொழுது பட்டுத்தொழில் பல இடங்களில் நடைபெறுகிறது. மேன்மேலும் இது வளர்ந்தால் ஜப்பானின் பட்டு வியாபாரம் குறையும்.

| | | | |
|---|---|---|---|
| சின் | கூடுகட்ட | அபகரிப்பதால் | வேற்றுருவம் |
| ஆதியில் | கடுகுபோல் | சாம்பல் நிறம் | வெளியேற்றம் |
| வுண்டு | தாய்ப்பூச்சி | கருணையின்றி | முசுக்கட்டையிலை |
| ரலாறு | விளக்கமாகும் | பொன்னிறம் | சாதாரண நிலைமை |

அரும்பதவுரை: ஆதியில் - முதலில், முன் காலத்தில். கருணையின்றி - இரக்கமில்லாமல். விளக்கம் - தெளிவு. அபகரிப் பதால் - கவர்ந்துகொள்வதால், கொள்ளையிடுவதால். சாதாரணம் - சாமானியம், பொது.

பயிற்சி

I. (1) பசு புல் தின்னும். புலி புல்லைத் தின்னாது—இவ்விரு வாக்கியங்களிலுள்ள, தின்னும், தின்னாது—என்பன வினைச் சொற்கள். தின்னும் என்ற சொல் தின்னுதலாகிய தொழில் நடைபெறுவதைக் குறிக்கிறது. தின்னாது என்ற சொல் மேற் கூறிய தொழில் நடைபெறாமையைக் குறிக்கிறது.

(2) தொழில் நடைபெறுவதைக் குறிப்பது உடன்பாடு என்றும், தொழில் நடைபெறாமையைக் குறிப்பது எதிர்மறை என்றும் சொல்லப்படும். இதனால் தொழில் நடைபெறுவதாகக் குறிக்கும் வினை உடன்பாட்டு வினையாம். தொழில் நடைபெறாத தாகக் குறிக்கும் வினை எதிர்மறை வினையாம்.

(3) பின்வரும் வாக்கியங்களிலுள்ள உடன்பாட்டு வினை முற்றுக்களை எதிர்மறை வினைமுற்றுக்களாக மாற்றி வாக்கியங்களை அமைக்க.

சுந்தரம் நன்றாகப் படிப்பான்.
நான் பள்ளிக்கூடம் போகிறேன்.

இந்தக் குதிரை நன்றாய் ஓடுகிறது.

திருடன் பிடிக்கப்பட்டான்.

(4) பின்வரும் வாக்கியங்களிலுள்ள எதிர்மறை வினை மு றுக்களை உடன்பாட்டு வினைமுற்றுக்களாக மாற்றி வாக்கியங்க அமைக்க :

என் தங்கை பள்ளிக்கூடம் போகிறதில்லை.

அப்பா வீட்டில் இல்லை.

பாலனுக்கு ஆங்கிலம் தெரியாது.

கண்ணாடி உன்னால் உடைக்கப்படவில்லை.

II. (1) பட்டு நூல் ஒருவகைப் புழுவினால் நூற்கப்படுகிறது நூற்கிறது என்று முடியும்படி இவ்வாக்கியத்தை மாற்று.

(2) பட்டுப்பூச்சிக்கு உணவு முசுக்கட்டை இலையாம். உண் ணும் என்று முடியும்படியாக இவ்வாக்கியத்தை மாற்று.

(3) பட்டாடைகளைச் செல்வர்கள் மாத்திரம் அணிகிறார்கள் பட்டாடைகள் என்பது எழுவாயாக வரும்படி இவ்வாக்கியத்தை அமைக்க.

(4) கிழித்து, முளைத்து, மிஞ்சும், உறங்கும், வளர்ந்து இவற்றைப் பெயர்ச்சொற்களாக மாற்று.

(5) பவுண்டு, பவுன், புழு, பூச்சி, கூடு, கூண்டு,—இ வார்த்தைகள் ஒவ்வொன்றையும் ஒவ்வொரு வாக்கியத்தி அமைக்க.

## கேள்விகள்

1. பட்டாடைகளை யார் அணிவார்கள் ?
2. பருத்தி ஆடைகளை யார் அணிவார்கள் ?
3. பட்டுப்புழு தன் கூட்டை அமைப்பது எவ்வாறு ?
4. பட்டுப்பூச்சியின் வரலாற்றைச் சுருக்கிக் கூறுக.
5. பட்டு நெசவு நம் நாட்டில் எங்கே நடைபெறுகிறது ?

## 22. பத்திரிகை படித்தல்

பத்திரிகைகள் பல வகைப்படும். மாதம் ஒரு முறை வெளிவரும் பத்திரிகைகள் சில, வாரம் ஒரு முறை வெளிவரும் பத்திரிகைகள் சில, தினந்தோறும் வெளிவரும் பத்திரிகைகள் சில. இப்படி வெளியாகும் பத்திரிகைகள் எல்லாம் எல்லார்க்கும் தக்கவை என்று எண்ணக் கூடாது.

வேளாண்மையில் நாட்டம் உள்ளவனுக்கு அந்தத் தொழிலைப்பற்றி விளக்கிப் பல புதுமைகளைக் கூறும் பத்திரிகைகள் வேண்டும்; கைத்தொழில்களில் கருத்துள்ளவனுக்குக் தொழிற்கல்வியைப்பற்றிக் கூறும் பத்திரிகைகள் வேண்டும்; சரித்திரம், சாஸ்திரம் முதலிய வழிகளில் ஊக்கம் உள்ளவர்களுக்கு அந்தந்தப் பொருள்களை விளக்கும் பத்திரிகைகள் வேண்டும்.

பொதுவாக எல்லார்க்கும் சிறுகதைகளைப் படிப்பதில் விருப்பம் இருக்கும்; அந்தக் கதைகள் நகைச்சுவையோடு கலந்திருந்தால் ஆசையோடு படிப்பார்கள். '**கலைமகள்**' என்ற மாதப் பத்திரிகையிலே மாதந்தோறும் பல கதைகள் வெளிவருகின்றன. '**ஆனந்த விகடன்**' போன்ற விகடப் பத்திரிகைகளில் சிரிப்பூட்டும் கதைகள் பல வருகின்றன. இவைகளெல்லாம் பொழுதுபோக்கத் தக்கவையாகும்.

பத்திரிகைகள் படிப்பது கதைகளுக்காக மட்டும் என்று எண்ணக்கூடாது. நாம் அறியாத பல புதுப் பொருள்களைப் புத்தகங்களின் மூலம் படிப்பது சிரமமாகும். பத்திரிகைகளில் அப்பொருள்கள் எளிய நடையில் இனிமையாக எழுதப்பட்டிருக்கும். அவற்றைப் படித்து நம் அறிவை வளர்த்துக் கொள்ளலாம்.

வாரப் பத்திரிகைகள் வாரந்தோறும் நிகழு செய்திகளைச் சுருக்கிச் சொல்லும். பல புதுமையான கட்டுரைகளும் அறிஞர்களால் அப்பத்திரிகைகளி எழுதப்படும். அவற்றை நாம் படித்து இனிமையு நன்மையும் உள்ள பல பொருள்களை அறிந்து மகிழ லாம்.

உலகத்தில் நடக்கும் செய்திகளை அன்றுட ளும் அறிந்துகொள்ளத் தக்க துணையாயிருப்பன தினசரிப் பத்திரிகைகளே. இன்று ருஷ்யாவில் மக்கள் நிலைமை என்ன? சீன நாட்டில் எங்கே யுத்தம் நடை பெறுகிறது? மழையால் அழிந்த ஊர்கள் எத்தனை இவை போன்ற வினாக்களுக்கு விடை தினசரி பத்திரிகைகளில் காணலாம்.

நம்முடைய தாய்மொழியில் தினந்தோறும் வெ வரும் பத்திரிகைகளைக் கொண்டு, உலகம் எங்கு உள்ள மக்களின் நிலைமையையும் நம் நாட் மக்களது வாழ்க்கை நிலைமையையும் நாம் அறிய ருந்தால், நம் வாழ்வு வீணாகும். " நான் உழை தேன், பிழைத்தேன், வாழ்ந்தேன், செத்தேன் என்று ஒவ்வொருவனும் தன் கதையைப் பார்த்து கொண்டு போகும் காலம் இது அன்று.

ஐரோப்பாவில் போர் தொடங்கினால், நம் நாட்டி பொருள்களின் விலை ஏறிவிடுகிறது. ஜப்பானி பூகம்பம் வந்தால் உடனே நாம் அதை அறிந்துவிடு கிறோம். நம் காரியத்தைப் பார்த்துக்கொண்டு, நா அமைதியாக வாழ்ந்து சாவோம் என்று எண்ண முடியாது.

உலகம் முழுவதிலும் உள்ள பல தேசங்களும் இக்காலத்தில் ஒன்றோடொன்று நெருக்கமாகச் சேர்

ருக்கின்றன. பர்மாவில் ரப்பர் விலை இறங்கினால், ம் ஊரில் நாற்பது பேர் ஏழைகள் ஆகிறார்கள். ஆகாய விமானமும், ரேடியோவும், கம்பியில்லாத் ந்தியும் வந்து தூரத்தை விழுங்கிவிட்டன. ஒவ் வொரு நிமிஷமும் பத்திரிகைகளைப் பார்த்து நாட்டு டப்பை அறிந்து நாம் நல்வாழ்வு வாழவேண்டும்.

| | | |
|---|---|---|
| தை | அறிஞர்கள் | வாழ்வு வீணாகும் |
| னசரி | வேளாண்மை | தொடங்கினால் |
| மானம் | புதுமைகள் | வாரந்தோறும் |
| ட்டம் | நகைச்சுவை | பிழைத்தேன் |
| லைமகள் | சிரிப்பூட்டும் | நடப்பை அறிந்து |
| த்திரிகை | கட்டுரைகள் | தூரத்தை விழுங்கி |
| ன்றாடம் | உழைத்தேன் | பொழுது போக்க |
| சய்திகள் | பத்திரிகைகள் | புதுப்பொருள்கள் |
| வளிவரும் | தொழிற்கல்வி | அமைதியாக வாழ்ந்து |
| ழைகள் | ஆனந்த விகடன் | கம்பியில்லாத் தந்தி |
| ளிய நடை | வாழ்க்கை நிலை | எல்லார்க்கும் தக்கவை |

அரும்பதவுரை : தினசரி - நாள்தோறும். கட்டுரை - வியா ம், பல விஷயங்களை ஒன்று கூட்டி எழுதுவது. அமைதி - அடக் ம். வேளாண்மை - பயிர்த்தொழில். பத்திரிகை - செய்தித் தாள். கடம் - வேடிக்கை. விகடன் - வேடிக்கையாகப் பேசுபவன். ாட்டம் - நோக்கம். நடப்பு - நடைபெறும் காரியங்கள். (சிரிப்பு + ட்டும்=சிரிப்பூட்டும். தொழில் + கல்வி=தொழிற் கல்வி.)

### பயிற்சி

I. (1) மரகதம் பத்திரிகை படிக்கிறாள் — இவ்வாக்கியத்தில் ரகதம் என்பது முதல் வேற்றுமை. ஆனால் பத்திரிகை என்பது முதல் வேற்றுமையைப்போல் இருந்தாலும், முதல் வேற்றுமை அல்ல. பத்திரிகை படிக்கிறாள் என்பது பத்திரிகையைப் படிக்கிறாள் ன்று பொருள்படும். பத்திரிகை என்பதில் ஐ உருபு மறைந்து ருக்கிறது. இம்மாதிரி வேற்றுமை உருபு மறைந்து வரும் சொற்

றொடர்களின் பொருளைக் கவனித்துப் பெயர்ச் சொற்களுக்கு வேற்றுமையைக் கூறவேண்டும்.

(2) பின்வரும் சொற்றொடர்களில் தடித்த எழுத்துக்களில் உள்ள சொற்களுக்கு வேற்றுமை கூறு :

**யுத்தம்** செய்கிறார்கள் ; **ரப்பர்** விலை அதிகமானால் ; **உலக** எங்கும் ; **மாமன்** மகள் ; **மணி** அடி ; **மரம்** ஏறு ; **பள்ளிக்கூட** போகிறான் ; **சூரிய** வெளிச்சம் ; **தடி** யடி.

II. (1) வெளிவரும், காணலாம், முடியாது, வேண்டும், சிறந் மாகும்—என்று முடியும்படியாக ஒவ்வொரு வாக்கியம் கூறு.

(2) நீ அறிந்த மூன்று பத்திரிகைகளின் பெயர்களை கூறு. ஒவ்வொரு பத்திரிகையைப் பற்றியும் ஒவ்வொரு வாக்கியம் கூறு.

**கேள்விகள்**

1. பத்திரிகைகள் எத்தனை வகைப்படும் ?

2. தினசரிப் பத்திரிகைகளில் என்னென்ன விஷயங்கள் வெளிவரும் ?

(3) பத்திரிகை படிப்பதால் உண்டாகும் நன்மை என்ன ?

# 23. கரிகாலன்—I

சோழ நாட்டைப் புகழுடன் ஆண்டுவந்த மன்னர்களுள் **கரிகாலன்** என்பான் ஒருவன். இவனது காலம் இற்றைக்கு இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் ஆகும். இவன் **உருவப்பஃறேர் இளஞ் சேட் சென்னி** என்ற சோழ மன்னரின் அருமைப் புதல்வன். இவனுடைய இயற்பெயர் **திருமாவளவன்** என்பது. இவனது பன்னிரண்டாவது பிராயத்தில் இளஞ்சேட் சென்னி போரில் இறந்தார். தந்தை இறந்தபின், இந்த இளவரசன் தன் தாய்மாமனும் பெரும் புலவரும் ஆகிய **இரும்பிடர்த் தலையார்** என்பவருடன் உறையூரில் தனது அரண்மனையிலேயே உறைந்துவந்தான். இவ்விளவரசன் தன் மாமன்பால்

அரசர்க்குரிய கலைகள் அனைத்தும் கற்று வளர்ந்து வந்தான்.

இவ்வாறிருக்கையில் ஒரு சமயம் இரும்பிடர்த் தலையார் மதுரைக்குச் சென்றிருந்தனர். அத்தரு ணத்தில், தாயாதி வர்க்கத்தைச் சேர்ந்த சில பகை வர்கள் திருமாவளவனை, அவனிருந்த அரண்மனையி லேயே சிறைசெய்து, அவ்வரண்மனையையும் கைப் பற்றிக் கொண்டார்கள். மதுரையிலிருந்து மீண்டு வருங்கால் அந் நிகழ்ச்சியைச் செவியுற்ற புலவர் கருவூரில் மறைந்திருந்து வசிக்கலாயினர். ஆங் கிருந்தவாறே, அவர் இளவரசனை விடுவிக்கக் கருதிப் பற்பல முயற்சிகள் செய்தார். மேலும், நாட்டின் குடிகள் இளவரசன்பால் மாருத அன்புகொண்டிருந்த படியால், அத்தாயாதிகள் இளவரசன் உயிரோ டிருந்தால் நாட்டில் குழப்பம் ஏற்படும் என ஐயமுற்று அவனை மாய்க்கவும் சூழ்ச்சி செய்தனர். அதனல் அத்தாயாதிகள் அவ்வரண்மனையில் தீ வைத்தனர். அப்போது திருமாவளவன் சமயோசித புத்தியுடைய வனய்ப் பிறர் அறியாவண்ணம் சிறைமதில் ஏறிக் குதித்து உயிர் தப்பினன். அப்போது அவன் கால்கள் தீயிற்பட்டுச் சிறிது கரிந்துபோயின. அது முதல் அவனுக்குக் **கரிகாலன்** என்னும் காரணப் பெயர் வழங்கலாயிற்று. இவ்வாறு பிழைத்தோடியவன் கருவூரையடைந்து, தன் மாமன்பால் உற்று நடந்தன உரைத்து, அவர் ஆதரவிலேயே அங்கிருந்து வந்தான்.

அரண்மனையில் தீயிடப்பட்டதையறிந்த குடிகள், இளவரசன் இறந்தேயிருப்பான் என நினைத்து, மிக வெருண்டு அக்கொடியோரை நாட்டினின்று ஓட்டி




கரிகாலனாகிய சிறுவனை யானை அரசனாகத் தேர்ந்தெடுத்துக் கொண்டுவருதல்

பிட்டனர். இந்நிலையில் சோழநாடு அரசன் இல்லாதிருந்தது. ஆதலின் குடிகள் ஒன்றுகூடி, "நமது பட்டத்து யானையின் கையில் ஒரு மாலையைக் கொடுத்து அனுப்புவோம்; அது யாருடைய கழுத்தில் அம் மாலையைச் சூட்டித் தன் பிடரியில் ஏற்றி அழைத்து வருகிறதோ, அவருக்கே முடிசூட்டுவோம்" என முடிவு செய்தனர். அதன்படியே அவர்கள் கழுமலம் என்ற ஊரிலிருந்து அவ்யானையின் கையில் மாலையைக் கொடுத்து அனுப்பினர்; அவ் வேழம் தன் துதிக்கையில் மாலையைக்கொண்டு, பல ஊர்களையும் சுற்றியபின், கருவூரினுட் புகுந்தது. அங்குத் தெரிவிலே விளையாடிக் கொண்டிருந்த கரிகாலனுக்கு அம்மாலையை யிட்டு, அவனைத் தன் பிடரியின் மீது தூக்கி வைத்துக் கொண்டு உறையூரை அடைந்தது.

இளஞ்சேட் சென்னியின் மகனே மன்னனாய் வந்துற்றதைக் கண்ட குடிமக்கள் அளவிலா மகிழ்ச்சி யெய்தினார்கள். இவையறிந்த இரும்பிடர்த் தலையாரும் கடவுளை வாழ்த்தி உறையூரை அடைந்தார். ஒரு நல்ல நாளில் கரிகாலன் முடி புனைந்து சிம்மாசனம் ஏறினான்; இரும்பிடர்த் தலையாரைத் தனக்கு நன்மதி புகட்டும் அமைச்சராயேற்று அவர் உரையின் வழியே செங்கோல் செலுத்திவந்தான்.

| | | | |
|---|---|---|---|
| முடி | தாயாதி | வர்க்கம் | நிகழ்ச்சி |
| பிடரி | புனைந்து | இளவரசன் | வெருண்டு |
| மலைகள் | கருவூர் | கொடியோன் | கரிகாலன் |
| வேழம் | அரண்மனை | இற்றைக்கு | சமயோசிதம் |
| கருணம் | கைப்பற்ற | மாய்க்க | சிறைசெய்து |
| பட்டம் | பெற்றில | செவியுற்ற | பட்டத்துயானை |
| உறைந்து | மாறுத | சிம்மாசனம் | காரணப்பெயர் |
| சூழ்ச்சி | அனைத்தும் | தாயாதிகள் | வழங்கலாயிற்று |

அரும்பதவுரை : சூழ்ச்சி - ஆலோசனை, உபாயம். புனைந்த அணிந்து. வேழம்-யானை. சமயோசிதம்-காலத்திற்குப் பொருந்திய (சமய + உசிதம் = சமயோசிதம்.)

பயிற்சி

I. (1) பின் வரும் வார்த்தைகளுக்குச் சொல்லிலக்கண கூறு : உறையூரில், புதல்வன், யானையின், சோழன்.

மாதிரி : சோழன்—பொருட்பெயர், உயர்திணை, ஆண்பால் ஒருமை, படர்க்கை, முதல் வேற்றுமை.

(2) புதல்வன், அரசன், பாட்டன், கிழவன்—இச் சொற்களுக்குப் பெண்பால் கூறுக.

(3) பின்வரும் வாக்கியங்களிலுள்ள எழுவாய், பயனிலை செயப்படுபொருள்களை எடுத்துக் கூறுக :

இளவரசனை விடுவிக்கக் கருதி அப்புலவர் பல சூழ்ச்சிகள் செய்தார்.

பட்டத்து யானையின் கையில் மாலையைக் கொடுத்தனுப் வோம்.

கரிகாலன் ஒரு நல்ல நாளில் அரியணை ஏறினான்.

II. (1) கலை, சிறை, ஐயம், முடி—இவ்வார்த்தைகள் ஒவ்வொன்றும் இரு பொருளில் வரும்படித் தனித்தனி வாக்கியங்கள் அமைக்க.

(2) பின்வரும் வாக்கியங்களைக் கேட்டவாறு மாற்று :

பகைவர்கள் அரண்மனைக்குத் தீ வைத்தார்கள்—அரண் மனை என்ற சொல் எழுவாயாக வரும்படி.

திருமாவளவன் இரும்பிடர்த் தலையாரிடம் பல கலைகளு கற்றான்—கற்பித்தார் என்று முடியும்படி.

நான் நேற்றுக் கருவூருக்குச் சென்றேன்—எதிர்மறை யாக.

கேள்விகள்

1. கரிகாலன் என்ற பெயர் எவ்வாறு ஏற்பட்டது? அவனு குப் பெற்றோர் இட்ட பெயர் என்ன ?

2. கரிகாலனே மறுபடியும் மன்னனாக வந்தது எவ்வாறு?

3. துன்ப காலத்திலும் திருமாவளவனுக்குத் துணையா உதவியவர் யார் ?

# 24. கரிகாலன்—II

கரிகாலனது ஆட்சிமுறை நேர்மையும் சிறப்பும் வாய்ந்தது. போர் வன்மையிலும், அரசியலிலும், டுநிலை பிறழாது நீதி வழங்குவதிலும் இவன் சிறப் ற்று விளங்கினான்.

வழக்குகளைக் கேட்டுத் தீர்ப்பளிக்கும் முறையில் ரிகாலனது ஆற்றலை விளக்கும் கதை ஒன்று ண்டு. அதாவது அரியணையேறிய சில நாளில், ரு முதுகிழவர்கள் ஒரு வழக்கின் பொருட்டு அரச ரிடம் நியாயம் பெற வந்தனர். அவர்கள் இவனைப் ார்த்ததும், "இவன் இளைஞனாக இருக்கிறானே! நம் ழக்கின் நுட்பத்தை அறிந்து நியாயம் வழங்கு ானோ?" எனப் பேசித் தம்முள் மனக்கலக்கம் அடைந்தார்கள். அவர்களுடைய உள்ளத்தைக் குறிப் ாலுணர்ந்து மன்னவன், சிறிதும் சினம் கொண் லன்; அவர்களை நோக்கி, "பெரியோர்களே, நீவிர் காண்டு வந்துள்ள வழக்கில் இருவர் சொல்லையும் ஆதியோடந்தமாகக் கேட்டு, நியாயம் கூறுவதற்கு, யது முதிர்ச்சியும், அநுபவமும் பெற்றுள்ள தகுதி ாய்ந்த ஒரு நீதிபதியை அனுப்புகிறேன்" எனக் றித் தான் அந்தப்புரம் சென்றான்.

பிறகு கொஞ்ச நேரத்திற்குள், தானே நரை யிரால் தாடியும் மீசையும் வைத்துக்கொண்டு, வயது திர்ந்த நீதிபதிபோல் மாறுவேடம் புனைந்து நீதி ன்றம் உற்று அமர்ந்தான். அவ்வாறு அமர்ந்தவன் அக் கிழவர்களை நோக்கி "பெரியோர்களே, அரசர் றிய வழக்காளிகள் நீங்கள் தாமோ? உங்களுடைய ழக்கு என்ன?" என்று வினவினான். அவர்கள் அவனைப் புதியவோர் நீதிபதியே என மதித்துத் தம்

முள் ஏற்பட்ட வழக்குகளைப் பணிவுடன் தெரிவி[illegible] தார்கள். மாறுவேடம் பூண்ட கரிகாலன் தன் நுட்ப[illegible] புத்தியால், அவ்வழக்கின் உண்மையைச் செவ்வனே ஆராய்ந்து, இருவழக்காளிகளும் மனம் பொருந்த[illegible] தீர்ப்பளித்து அவர்களை மகிழ்வித்தான்.

அது கண்ட அக்கிழவர்கள் ஆச்சரியமடைந்து, "இவ்வளவு நுண்ணறிவுடைய இவர் யாரோ?" என்று வாய்விட்டுச் சொன்னார்கள். அப்போது கரிகாலன், தனது வேஷத்தைக் கலைத்து முன்போ[illegible] ஆனான். அதைக் கண்டு எல்லோரும் ஆச்சரியமு[illegible] சந்தோஷமும் கொண்டனர். முதியவர்களும் "ஆ[illegible] மதியீனத்தால் அறிவாளியாகிய நமது அரசனை நா[illegible] இகழ்ந்து கூறினோம். இனி உடலின் சிறுமை கண்[illegible] எவரையும் அவமதிக்கலாகாது" என்று தங்களு[illegible] குள்ளே பேசிக்கொண்டு அரசனைப் புகழ்ந்து சென்றனர்.

கரிகாலனுடைய போர்வன்மையைக் கேள்வி யுற்று அழுக்காறடைந்த பாண்டியனும் சேரனும் தா[illegible] ஒன்றுசேர்ந்து வந்து, இவனுடன் போர்தொடங்[illegible] னார்கள். வேளிர் குலத்தைச் சேர்ந்த பதினொருவ[illegible] குறு நில மன்னர்களும் சேர பாண்டியர்களுடன் துணையாகச் சேர்ந்தார்கள். **கோயில் வெண்ணி** என்னுமிடத்தில் இருதிறத்தாருக்கும் பெரும்போர் நிகழ்ந்தது. வயதிற் சிறியவனாகிய கரிகாலன் ஆண் மையிற் குன்றாது அவர்களைப் புறங்கண்டு வென் றான். பின்னர் சிங்களத் தீவின்மீது கரிகாலன் படை யெடுத்துச் சென்று, அம்மன்னவனைப் போரி[illegible] வென்று, தனக்குக் கப்பம் கட்டுமாறு செய்தா[illegible] வட நாடுகளின் மீது பெரும் படையுடன் படையெடு[illegible]

துச் சென்று திக்கு விஜயம் செய்தான். இடைவழியில் இருந்த பல சிறு நாடுகள் போர் செய்யாமலே வணங்கித் திறைகொடுத்தன. **வாகைப் பறந்தலை** என்ற இடத்தில் ஒன்பது குடை மன்னர்கள் போர்க் கோலத்துடன் இவனை எதிர்த்து இரண்டு நாட்களில் தோல்வியுற்றனர். வடநாட்டு மன்னர்கள் ஒன்று கூடிக் கங்கைவரையில் கரிகாலனை எதிர்த்தார்கள்; அப்போரிலும் கரிகாலனே வெற்றி பெற்றான். வடநாட்டு மன்னர்கள் யாவரும் கரிகாலனை வணங்கி, அவனை மேன்மைப் படுத்தினார்கள். கரிகாலன் இமய மலை வரையில் சென்று, அம்மலையில் தன் புலிக்கொடியைப் பொறித்துத் திரும்பிக் கங்கையில் நீராடித் தன் நாடு வந்தான்.

கரிகாலன் தன் நாட்டின் வளப்பங்களைப் பல துறைகளிலும் பெருக்கி வந்தான். முதலில் இவன், மண்மாரியால் அழிந்துபோயிருந்த உறையூரில் கோட்டைச் சுவர் முதலியவற்றை எழுப்பினான். பிறகு நாட்டின் தொழில்களும் வர்த்தகமும் வளர்ச்சிபெற வேண்டிக் காவிரி கடலோடு கலக்கும் இடத்தில் **காவிரிப்பூம் பட்டினம்** என்ற பட்டினத்தை அமைத்து, அதைத் தலைநகரமாகவும் செய்தான். காவிரியாற்றின் கரைகளை உயர்த்தியும், அணைக்கட்டுகள் கால்வாய்கள் முதலிய நீர்ப்பாசன வசதிகளைச் செய்தும் நாட்டின் நிலவளத்தைப் பெருக்கினான். மேலும் இவன் பெரிய கொடையாளியும் ஆவன். இவனைப் புகழ்ந்து பல தமிழ்ப்புலவர்கள் பாடியிருக்கிறார்கள். அவர்களுக்கெல்லாம் இவன் நிரம்பப் பொருள் அளித்தான். **கடியலூர் உருத்திரங் கண்ணனார்** என்ற பெரும் புலவர் காவிரிப்பூம் பட்டினத்தின் பெருமையை விளக்கிப் **பட்டினப்பாலை**

என்ற பாட்டுப்பாடிக் கரிகாலனைப் புகழ்ந்து, பொ பரிசு பெற்றனர்.

கரிகாலன் **நாங்கூர்வேள்** என்ற வேளி தலைவனது மகளை மணம் செய்து கொண்டு அவளுடன் இல்லறம் ஆற்றி வந்தான். கரிகால எழுபதாண்டுகள் செங்கோல் ஓச்சி முதுமைப்பருவ எய்தியபின், அரசியல் உரிமையைக் **கோக்கிள்ள** ஒன்னும் தன் மைந்தன்பால் ஒப்படைத்துவிட்டு தனது இறுதிக் காலத்தை ஓய்வில் கழித்தான் இவனது ஆட்சியில் சோறுடு அமைதியு முன்னேற்றமும் அடைந்து விளங்கிற்று

| | | | |
|---|---|---|---|
| ஆற்றி | தலைநகரம் | அணைக்கட்டு | மாறுவேடம் |
| ஓச்சி | வளப்பம் | முடிவணங்கி | திடங்குன்றி |
| கப்பம் | நீர்வளம் | திக்குவிஜயம் | மனம்பொருந்த |
| சோறுடு | சிங்களம் | போர்வன்மை | சால அநுபவம் |
| அரியணை | செவ்வனே | பட்டினப்பாலை | இறுதிக்காலம் |
| செறிந்து | முன்னேற்றம் | குறுநிலமன்னர் | நீர்ப்பாசனம் |
| பொறித்து | அழுக்காறு | வேளிர்குலம் | ஆதியோடந்தமாக |

அரும்பதவுரை: ஆற்றி - நடத்தி. ஓச்சி - செலுத் ஆதியோடந்தமாக - முதலிலிருந்து கடைசிவரையில். விஜயம் வெற்றி. அழுக்காறு - பொறாமை. சால - மிக. அரியணை சிம்மாசனம். அரி - சிங்கம்.

பயிற்சி

I. (1) பின்வரும் வாக்கியங்களிலுள்ள ஒவ்வொரு வார்த்தை யும் என்ன சொல்?

கரிகாலன் இமயமலையில் தனது புலிக்கொடியைப் பொறித்து வைத்தான். இவன் பெரிய கொடையாளியும் ஆவான். திரு வனுடைய கால் தீயிற்பட்டுக் கரிந்து போயிற்று.

(2) பின்வரும் வினைமுற்றுக்களுக்குச் சொல்லிலக்கண கூறு: அளித்தான், பெற்றனர். கொடுத்தேன், கொடுக்கிறது விளங்கிற்று, ஆக்கினான்.

மாதிரி : அளித்தான்—படர்க்கை, ஆண்பால், இறந்தகால ...னமுற்று.

(3) பின்வரும் சொற்றொடர்களில் உள்ள தடித்த எழுத்துக் ...ரில் அமைந்த சொற்கள் எந்த வேற்றுமையைச் சேர்ந்தவை ? ...றை கொடுத்தான், கங்கையில் நீராடி, போர்வன்மை, வேளிர் ...லம், வய்திற் சிறியவன், உறையூர் சென்றான், அரியணையேறி, ...யது முதிர்ந்த. வழக்கு என்ன.

II. (1) மகிழ்வேன், மகிழ்விப்பார், சேர்ந்தான், சேர்த்தான், ..., வருவி—என்று முடியும்படி ஒவ்வொரு வாக்கியம் எழுது.

(2) நீதிபதி, வழக்காளி, இரும்பிடர்த்தலையார், உருத்திரங் ...கண்ணனார், கோக்கிள்ளி—இவர்களைப்பற்றி ஒவ்வொரு வாக்கியம் ...ழுது.

**கேள்விகள்**

1. வழக்காளிகளாக வந்த கிழவர்களைக் கரிகாலன் எவ்வாறு ...ருப்தியடையச் செய்தான் ?
2. கரிகாலன் எந்தெந்த மன்னர்களுடன் போர் செய்து ...வன்றான் ?
3. கரிகாலன் நாட்டிற்குச் செய்த நன்மைகள் என்னென்ன ?
4. பட்டினப்பாலையில் கூறப்படும் பொருள் என்ன? அது ...ரால் எப்போது யார்மீது பாடப்பட்டது ?

# 25. கடிதம் எழுதும் வழிகள்

நேரிலே பேச இயலாதபோது ஒருவர் தம் ...னக்கருத்தை மற்றவருக்கு வெளியிடுவதற்குக் கடி...ம் எழுதுதல் சாதகமாகும். இவ்வாறு எழுதப்படும் ...டிதங்களிற் பலவகை உண்டு. அவை குடும்பச் ...சய்திகளைப் பற்றி எழுதும் கடிதங்கள், வியாபார ...ம்பந்தமாக எழுதும் கடிதங்கள், விண்ணப்பங்கள் ...தலியன. கடிதம் எழுதுதலிற் பெரியவர்களுக்குச் ...றியவர்கள் எழுதுவது, சிறியவர்களுக்குப் பெரிய...ர்கள் எழுதுவது, ஒரு நிலையிலுள்ள நண்பர் ...ளுக்கு எழுதுவது முதலிய சந்தர்ப்பங்களுக்கு

ஏற்றவாறு கவனிக்கவேண்டிய முறைகள் சில உள கடிதத்தின் விஷயங்கள் **தலையங்கம், உட்பொருள் முடிவு** என மூன்று பிரிவுகளாகப் பிரிக்கப்படும்.

**கடிதம் எழுதத் தொடங்குமுன்** வலதுபுறத் மேற்பக்கத்தில் ஊரின் பெயரும் தேதியும் எழு வேண்டும். இது 'தலையங்கம்' எனப்படும். எந் விஷயத்தைப் பற்றி எழுதுகிறேமோ அது 'உ பொருள்' எனப்படும். இறுதியில் எழுதப்படுவன வாகிய எழுதியவரின் விவரமும் கையொப்பமு 'முடிவு' எனப்படும்.

**விஷயம் எழுதத் தொடங்குமுன்** யாருக்கு கடிதம் எழுதப்படுகிறதோ அதைக் குறிப்பி வேண்டும். உதாரணமாகச் சிறியவர்கள் பெரியவ களுக்கு எழுதும்போது ஸ்ரீ இன்னருக்கு என்றும் பெரியவர்கள் சிறியவர்களுக்கு எழுதும்போது **சிரஞ்சீவி** அல்லது **நிறைசெல்வன்** என்று ஆண் பாலுக்கும், **சௌபாக்கியவதி** அல்லது **நிறை செல்வி** என்று பெண்பாலுக்கும் தொடங் வேண்டும். சிறியவர்கள் பெரியவர்களுக்கு **நமஸ் காரம்** அல்லது **வணக்கம்** என்றும், பெரியவர்கள் சிறியவர்களுக்கு **ஆசீர்வாதம்** அல்லது **வாழ்த் துக்கள்** என்றும் விஷயம் எழுதும்போது தொடங் வேண்டும். நண்பர்களுக்கும், ஒத்த நிலையிலுள்ள மற்றவர்களுக்கும் எழுதும்போது **திருவாளர், அன் பார்ந்த** அல்லது **திருமிகு** இன்னர் என்றும், விஷய ஆரம்பத்தில் **நலம்** அல்லது **க்ஷேமம்** என்றும் தொடங்கவேண்டும்.

**கடிதத்தை முடிக்கும்போது** எழுதுகிறவர்கள் சிறியவர்களாய் இருந்தால், தங்கள் **வணக்கமுள்ள**

ழ்ப்படிதலுள்ள அல்லது **அன்புள்ள** இன்னர் ன்றும் எழுதுகிறவர் பெரியவர்களாய் இருந்தால் ன் **அன்பார்ந்த** அல்லது **பிரியமுள்ள** இன்னர் ன்றும் குறிப்பிட்டுக் கையெழுத்து இடவேண்டும்.

## மாதிரிக் கடிதங்கள்

(1) உபாத்தியாயருக்கு மாணுக்கன் எழுதும் விடுமுறை அனுமதி விண்ணப்பம்.

18, கீழ் ஆண்டார் வீதி,
திரிசிரபுரம்,
25-10-39.

திருச்சிராப்பள்ளி, தேசியப்பாடசாலையின் ஐந் ாவது வகுப்பு ஸ்ரீ ஆசிரியர் அவர்களுக்கு :

ஐயா,

நான் என் தமக்கையின் கலியாணத்திற்காக, என் பெற்ருேருடன் கும்பகோணம் போய்வர வேண்டும். ஆதலால் நாளை முதல் நான்கு தினங்கள் எனக்கு விடுமுறை கொடுக்க வேணுமாய்ப் பணி புடன் வேண்டுகிறேன்.

இங்ஙனம்,
தங்கள் கீழ்ப்படிதலுள்ள மாணுக்கன்,
**குணசீலன்.**

(2) வெளியூரிலுள்ள ஓர் உறவின் முறையாருக்கு எழுதும் கடிதம் :

35, மேலராஜ வீதி,
புதுக்கோட்டை,
13-3-39.

க்ஷேமம்,

ஸ்ரீ மாமா அவர்களுக்கு, மருமகள் மங்கையர்க் ரசி அநேக நமஸ்காரம். இவ்விடத்தில் அப்பா,

அம்மா, குழந்தைகள் எல்லோரும் நலம். அவ்விட
தில் தாத்தா, பாட்டி, அத்தை முதலிய எல்லே
ருடைய க்ஷேமங்களைப் பற்றியும் அறிய விரும்
கிறேன்.

நாளது வருஷம் அடுத்த மாதத்தில் இவ்வூரி
நவராத்திரி உற்சவம் ஆரம்பமாகிறது. அப்போ
இவ்வூர் அம்மன் கோவிலில் நடைபெறும் திருவிழ
வெகு சிறப்பானது. வெளியூரிலிருந்து ஆயிரக்கண
கான மக்கள் இவ்வூருக்கு வருவார்கள். எங்க
மகாராஜா அவர்களின் தர்பார் ஊர்வலம் காணுத
குரிய காட்சியாகும். திருவிழா நாட்களில் வே
பலவித வேடிக்கைகளும் நடைபெறும்.

அவ்வமயம் தங்கள் எல்லோருடைய கூட்டுற
இன்பத்தையும் நாங்கள் விரும்புகிறோம். ஆகையா
அத்தையையும் அழைத்துக்கொண்டு, தாங்கள் அ
சமயம் இவ்வூருக்கு வந்து இரண்டு வாரங்கள் எங்க
இல்லத்தில் தங்கி, எங்களைக் களிப்புறச் செய்யுமா
வேண்டுகிறேன். அம்மாவும் தங்கள் வருகைை
ஆவலுடன் எதிர்பார்க்கிருள்.

இங்ஙனம்,
தங்கள் பிரியமுள்ள மருமக
மங்கையர்க்கரசி.

(3) தம்பிக்கு அண்ணன் எழுதும் கடிதம் :

65, புதுத் தெரு, மதுரை,
26-10-39.

க்ஷேமம்,

சிரஞ்சீவி இரத்தினசாமிக்கு அநேக ஆசீர்வாத
இங்கு உன் அண்ணியும் குழந்தைகளும் நலம். அ
விடத்தில் நம் பெற்ருேரின் நலங்களைப்பற்றி அறி

ரும்புகிறேன். நீ அவர்கள் சொற்படி கேட்டுக் காண்டும் உன் பாடங்களைச் செவ்வையாகப் படித் துக்கொண்டும் இருப்பாய் என்று நம்புகிறேன்.

இப்பவும் உன் அண்ணி கிராமத்தில் சில நாட்கள் ருக்கவேண்டும் என்று விரும்புகிறார்கள். எனக்கு வலை மிகுதியாய் இருப்பதால், நான் வருவதற்கு ழிவு இல்லை. சனிக்கிழமையும் ஞாயிற்றுக்கிழமையும் னக்கு விடுமுறை நாட்கள் அல்லவா? ஆகையால் பெற்றோரிடம் விடை பெற்றுக்கொண்டு, மேற்கூறிய டுமுறை நாட்களில் இங்கு ஒரு நடை வந்து, உன் ண்ணியையும் குழந்தைகளையும் அழைத்துப் பாவாயாக.

இங்ஙனம்,
உன் அன்பார்ந்த,
**மாணிக்கம்.**

(4) வியாபாரக் கடிதம் :

சந்நதித் தெரு,
கடம்பர் கோவில்,
குளித்தலை,
1-11-39.

ரு A. R. **அண்ணுமலை நிலையத்தார் அவர்களுக்கு,**
இராமச்சந்திரபுரம் (திருச்சி ஜில்லா).

**யா,**

தங்கள் நிலையத்தின் வெளியீடுகளாகிய கீழ்க் றிக்கப்பட்ட நூல்களில் ஒவ்வொரு பிரதி வி. பி. பால் மூலம், மேற்கண்ட என் விலாசத்திற்கு அனுப்புமாறு வேண்டுகிறேன்.

இங்ஙனம்,
**கண்ணப்பன்.**

நூல்களின் விவரம் :

ஸ்ரீ சுவாமி சுத்தானந்த பாரதியார் இயற்றி குழந்தையின்பம், பாரதி விளக்கம், வரகவி தாகூர்.

## மேல் விலாசம்

கடிதம் எழுதிய பிறகு, அதை மடித்து உறை யிட்டு அவ்வுறையில் இன்னருக்கு என்ற விபரத்தை குறிப்பிடவேண்டும். அதற்கு **மேல் விலாசம்** என் பெயர். உறையின் ஒரு புறத்தில் அனுப்புவோரி விலாசம் குறிப்பிடலாம்.

**மாதிரி :**

**அனுப்புதல்**
மங்கையர்க்கரசி,
35, மேலராஜ வீதி,
புதுக்கோட்டை,
(சமஸ்தானம்).

ஸ்ரீ முத்துசாமி அவர்கள்,
17, கிழக்கு உள் வீதி,
ஸ்ரீரங்க
ஸ்ரீரங்கம் போஸ்ட், (திருச்சி ஜில்லா

| | | | |
|---|---|---|---|
| விடுமுறை | போஸ்டு | ஊர்வலம் | மகாராஜா |
| தேதி | வாழ்த்து | உற்சவம் | வி. பி. தபால் |
| தேசீய | தர்பார் | நிறைசெல்வன் | கூட்டுறவு |
| ஒழிவு | வணக்கம் | கையொப்பம் | உறவின் முறை |
| வருகை | மருமகன் | மனக்கருத்து | விடுமுறை நாள் |
| திருமிகு | சிரஞ்சீவி | விண்ணப்பம் | மேல் விலாசம் |
| அண்ணி | திருவாளர் | உட்பொருள் | சௌபாக்கியவதி |
| ஒருநிலே | வெளியீடு | தலேயங்கம் | குடும்பச் செய்தி |
| நேரிலே | மருமகள் | நிறைசெல்வி | வியாபார சம்பந் |
| [illegible]மம் | வெளியூர் | அன்பார்ந்த | கீழ்ப்படிதலுள்ள |

அரும்பதவுரை : ஊர்வலம் - ஊரைச் சுற்றி வருதல். வி ணப்பம் - வேண்டுகோள், மனு. சௌபாக்கியவதி - செல்வி. சிர சீவி - நீடுவாழ்வோன். அன்பார்ந்த - அன்பு நிறைந்த.

## 26. கண்ணகி வழக்குரை
### (நாடகம்)

இடம் : மதுரை அரண்மனை வாயிலும், நியாய சபையும், மதுரை வீதியும்.

பாத்திரங்கள்: கண்ணகி, ஊரார், பாண்டியன், அரசி, சேவகன்.

### முதற் களம்
(கண்ணகி வீதியில் வருதல்)

**கண்ணகி :** தெய்வம் உண்டோ? இவ்வூரில் நல்லவர் உண்டோ? கற்புடைப் பெண்கள் உண்டோ? என் துயரம் கண்டு உருகும் பெரியோர் உண்டோ? நன்ருக ஆராயாமல், என் கணவனைக் கொன்ற மன்னன் கொடுங்கோலன்! அவனுக்கு அறிவு சொல்லும் அமைச்சர் இல்லையா? நான் செய்த பாவம் என்ன? என் கணவர் செய்த பாவம் என்ன? ஒன்றும் அறியேனே! எந்த ஊரில் இந்த வழக்கழிவு நடக்கும்?

**சில பெண்கள் :** ஐயோ! இந்தப் பெண்ணுக்குப் பெருந் துயரம் விளைவித்த அரசனை நாம் என்ன சொல்லுவது? செங்கோல் கொடுங்கோல் ஆயிற்றே. இனி இந்நகரில் நல்லவர் இருக்க இடம் இல்லையே!

**கண்ணகி :** கணவனை இழந்த நான் கண்ணீர் விட்டுக் கதறுவேனே? என் கணவர் பிணத்தைக் காண்பேன். அவர் வாயால் ஒரு சொல் கேட்பேன். இறந்த அவர் விழித்து என்னோடு பேசாவிட்டால், நான் இகழப்படுவேனாக!

(நடக்கிறாள்)

**ஒருவர் :** பெண்ணே, இதோ கிடக்கின்றது உன் கணவர் பிணம். ஐயோ, இது என்ன கொடுமை!

**கண்ணகி:** என் உயிரே! உடலைவிட்டுப் பிரி லாமோ? நானும் உடன் வருவேன். (பிணத்ன எடுத்து மடிமேல் வைக்கிருள்.)

**கோவலன்:** (விழித்து எழுவதுபோல எழுந்த பெண்ணே! உன் உடம்பு வாடியதே. நீ இங் இரு. நான் போகிறேன். (பிணமாக விழுகிருன்

**கண்ணகி:** மதுரைப் பெண்களே, உங்கள் மு என் கற்பு விளங்கியது! இனி என் சினத்தை காட்டுவேன். கொடுங்கோல் மன்னன் வாழு நாட்டில் உள்ள பெரியோர்களே, அம்மன்ன அறிய வழக்காடுவேன். பிறகே, நான் என் கல வர் சென்ற உலகுக்குப் போவேன்.

(விரைவாகப் போகிருள்)

**நகரத்தார்:** ஆ! நகரத்துக்கு என்ன விளையுமே ஐயோ, கோவில் அடைத்துக்கொண்டதே. தெ வம் ஓடிப்போயிற்று! கற்புடைப்பெண் கண்ண விடுவது எளிதோ? இந்தக் கண்ணீர் இ ஊரைமட்டுமா, உலகத்தையும் அழித்துவிடுே கொடுமை! கொடுமை!

(போகிருர்கள்)

## இரண்டாம் களம்

**இடம்:** அரண்மனை வாயில்.

**காலம்:** முற்பகல்.

**பாத்திரங்கள்:** கண்ணகி ஒரு சிலம்போடு கோபம்மிக வரு ருள். அரண்மனை வாயிலில் காவலன் உருவிய வாளே நிற்கிருன்.

**கண்ணகி:** வாயிலோயே! அரச பதவியில் இரு தும், அதன் தகுதியை அறியாது, அ இயற்றிய கொடுங்கோல் மன்னன் வாயிலோயே

"ஒற்றைச் சிலம்போடு கணவனை இழந்த ஒரு பெண் வாயிலில் நிற்கிறாள்," என்று உன் அரசனிடம் சொல்.

**ாயில் காவலன் :** தாயே, நீ யார்? காளியோ, துர்க்கையோ? இந்த அரசன் அரண்மனை வாயிலில் நான் ஐம்பது ஆண்டுகளாக நிற்கிறேன். இன்றளவும் இதுபோன்ற காட்சியைக் கண்டதில்லை.

**ண்ணகி :** வாயில் காவலனே! அறிவிழந்த உன் அரசன் நெறி தவறி இழைத்த கொடுமையால், நான் என் கணவனை இழந்தேன். என் வழக்கை எடுத்துரைக்க இங்கு யாரும் இல்லை. நானே அக் கண்கெட்ட காவலன்முன் கழறவேண்டும். விரைவிலே போய்ச் சொல்.

**ாவலன் :** தாயே சொல்லி வருகிறேன்.

**மூன்றும் களம்**

டம் : அரச சபை.

ாத்திரங்கள் : அரசன், அரசி, கண்ணகி, அமைச்சர், சேவகர்.

**ரசன் :** அம்மா, உள்ளே வரலாம்.

**ண்ணகி :** கொடுங்கோல் மன்னா! கொடுமை! கொடுமை!! வழக்குவந்தால் வாதி, பிரதிவாதி என்ற இருவரையும் விசாரியாமல் தண்டிப்பது உங்கள் நாட்டு வழக்கமோ!

**ரசன் :** பெண்ணே, நீ யார்? உன் வழக்கு என்ன? உன் துயரத்திற்கு என்ன காரணம்?

**ண்ணகி :** அறிவிலா அரசே, கன்றை இழந்து கதறிய பசுவின் துயரத்தைப் போக்குதற்காகத் தன் அருமந்த மகனைத் தேர்க்காலில் இட்டு அரைத்து, நீதிசெலுத்திய மனுவேந்தன் ஆண்ட

சோழநாட்டில் புகார் நகரத்திலே பிறந்தவ நான். அந்நகரத்துப் பெருஞ்செல்வர் மாசாத் வான் என்ற வணிகரது மகனாகிய கோவல மனைவி ஆவேன். என் பெயர் கண்ணகி. என நாயகன் இந்நகரத்திலே என் சிலம்பை விற் வந்தார். என் சிலம்பைக் கவர்ந்து என் கண ரையும் கொன்று எனக்கு இத்துயரம் விளைவித் மன்னா, என் வழக்கை நான் கூறவும் வேண் டுமோ?

**அரசன்:** பெண்ணே! அரசியின் சிலம்பு க வாடிய குற்றத்துக்காக உன் கணவன் கொ யுண்டான். கள்வனைக் கொல்வது குற் ஆகுமா?

**கண்ணகி:** என் கணவனைக் கள்வன் என்று அற் தது எப்படி? ஒருவனைக் குற்றவாளி என் முடிவு செய்யு முன்பு நன்கு விசாரிக் வேண்டாமா?

**அரசன்:** களவுபோன சிலம்பு உன் கணவன் கையி இருந்ததே. இன்னும் என்ன சான்று வேண்டு

**கண்ணகி:** அரசே, இதோ, இன்னொரு சிலம்பு எ கையில் உள்ளது. இது எனது. இதில் மாண கப்பரல் உண்டு. அரசியின் சிலம்பில் உள் பரல் என்ன?

**அரசன்:** முத்து......சேவகா, நேற்றுக் கொண் வந்த சிலம்பை வாங்கி வா.

**சேவகன்:** அரசே, அப்படியே செய்கிறேன்

(போய் வருகிறான். சிலம்பு தருகிறா

**அரசன்:** இதோ இருக்கிறது, உன் கணவனி வாங்கிய சிலம்பு.

**ண்ணகி:** இதோ, இச்சிலம்பை உடைக்கிறேன். உண்மை தானாகவே விளங்கும்.

(உடைக்கிறாள் ; மாணிக்கப்பரல் தெறித்து விழுகிறது.)

**ரசன்:** ஆ! என்ன இது! கொடுமை கொடுமை!! பொற்கொல்லன் சொல்லைக் கேட்டு ஒரு நிரபராதியைக் கொன்றேனே! நானே அரசன்! நானே கள்வன். பாண்டியன் மரபு என்னும் பெரும்பழி பூண்டதே! இன்றோடு என் வாழ்வு ஒழிக!

(விழுந்து இறக்கிறான்)

[கணவன் இறந்தது அறியாமல் கண்ணகியைப் பார்த்து]

**ரசி:** பெண்ணே, கற்பின் தெய்வமே, பொறுக்க வேண்டும். அறியாமல் நேர்ந்த குற்றம் இது.

(வணங்குகிறாள்)

**ண்ணகி:** அரசியே, நீ ஏன் என்னை வணங்குகிறாய்? உன் கணவன் இறந்தான். பாவிகளை ஒழித்த பின்பே என் கோபம் மாறும். நான் போகிறேன்.

(போகிறாள்)

**ரசி:** என் உயிரே!

(விழுந்து இறக்கிறாள்.)

| | | |
|---|---|---|
| எளிது | கணவர் | குற்றவாளி |
| பாவம் | வேந்தன் | விசாரிக்க |
| உருகும் | கவர்ந்து | அறியாமை |
| வாயில் | துர்க்கை | பிரதிவாதி |
| சிலம்பு | அரண்மனை | உருவிய வாள் |
| விரைவு | வழக்கழிவு | ஆராயாமல் |
| விளைத்த | அமைச்சர் | நியாயசபை |
| சான்று | வழக்குரை | மாசாத்துவான் |
| வணிகர் | வழக்காடு | மாணிக்கப்பரல் |
| அருமந்த | கிடக்கிறது | பொற்கொல்லன் |
| நாயகன் | களவாடிய | கொடுங்கோலன் |

அரும்பதவுரை : பதவி - நிலை. கழற - சொல்ல. சான்[று] சாக்ஷி, உதாரணம். அருமந்த - அரிய மருந்து. போன்[று] கவர்ந்து - பறித்து, கொள்ளையிட்டு. அமைச்சர் - மந்தி[ரி] மாணிக்கம் - சிவப்புக்கல், செம்மணி. பரல் - சிலம்பிற்[கு] ஒலிப்பதற்காகப் போடப்படும் மணிகள். (வழக்கு + அழிவு [=] வழக்கழிவு. பொன் + கொல்லன் = பொற்கொல்லன். மாணிக்க[ம் +] பரல் = மாணிக்கப்பரல்.)

# 27. குழந்தையின் தோத்திரம்

உள்ளத்தில் உள்ள பரமா—எனக்
    குன்னருள் வெள்ளத்தை யீவாய்!
கள்ள மில்லாத மனத்தால்—உன்னைக்
    காலையு மாலையு நினைப்பேன்!

கல்வி யறிவொளி யீவாய்—நற்
    கலையிற் புலமை யளிப்பாய்!
நல்ல வொழுக்கம் அருள்வாய்—தாய்
    நாட்டின் மணிப்பிள்ளை யாவேன்!

துச்ச நினைவை யொழிப்பாய்—என்றுந்
    தூய நினைப்பை வளர்ப்பாய்
அச்சப் பிசாசைத் துரத்தி—வீரர்
    ஆண்மையும் ஆற்றலுந் தாராய்!

தாயும் தகப்பனும் நீயே—கல்வி
    தந்துத வுங்குரு நீயே!
நோய்தவிர் வைத்தியன் நீயே—சுற்றி
    நோக்கும் உலகெல்லாம் நீயே!

உடலு மனமும் உயிரும்—மண்ணில்
    உன்னுயிர்த் தொண்டுகள் செய்தே!
திடமுற் றிருக்கப் பலந்தா—என்
    சிந்தையிற் கோயில்கொள் சாமீ!

த்திய மேயுன் வடிவம்—சர்வ
சமரச மேயுன் விழிகள்
த்திசையும் உன தாடல் போற்றி
எங்கும் நிறைந்த பரமா ! 6

—சுவாமி சுத்தானந்த பாரதியார்

| | | | |
|---|---|---|---|
| மி | பரமா | கள்ளம் | அருள்வெள்ளம் |
| டல் | ஈவாய் | சத்தியம் | மணிப்பிள்ளை |
| தை | துச்சம் | சமரசம் | அச்சப்பிசாசு |
| ளம் | போற்றி | புலமை | அறிவொளி |

அரும்பதவுரை : பரமா - கடவுளே. ஈவாய் - கொடுப் யாக. சத்தியம் - உண்மை. துச்சம் - அற்பம், கீழ்மை. ரசம் வேறுபாடு இன்மை, பொது. (அறிவு + ஒளி = அறி ாளி. உனது+ஆடல்=உனதாடல்.)

## 28. மூதுரை

(ஔவையார் அருளிச் செய்தது)

ன்றி யொருவருக்குச் செய்தக்கா லந்நன்றி
ன்று தருங்கோல் எனவேண்டா—நின்று
ளரா வளர்தெங்கு தாளுண்ட நீரைத்
லையாலே தான் றருதலால். (1)

லா ரொருவருக்குச் செய்த வுபகாரம்
மே லெழுத்துப்போற் காணுமே—அல்லாத
மிலா நெஞ்சத்தார்க் கீந்த வுபகாரம்
மே லெழுத்திற்கு நேர். (2)

ட்டாலும் பால்சுவையிற் குன்று தளவல்ல
ட்டாலும் நண்பல்லார் நண்பல்லர்
ட்டாலும் மேன்மக்கள் மேன்மக்க ளேசங்கு
ட்டாலும் வெண்மை தரும். (3)

அடுத்து முயன்றாலு மாகுநா ளன்றி
எடுத்த கருமங்க ளாகா—தொடுத்த
உருவத்தால் நீண்ட உயர்மரங்க ளெல்லாம்
பருவத்தா லன்றிப் பழா. (

உற்ற விடத்தி லுயிர்வழங்கும் தன்மையோர்
பற்றலரைக் கண்டால் பணிவரோ—கற்றூண்
பிளந்திறுவ தல்லால் பெரும்பாரந் தாங்கின்
தளர்ந்து வளையுமோ தான். (

நீரளவே யாகுமாம் நீராம்பல் தான் கற்ற
நூலளவே யாகுமாம் நுண்ணறிவு—மேலைத்
தவத்தளவே யாகுமாம் தான்பெற்ற செல்வம்
குலத்தளவே யாகுங் குணம். (

நல்லாரைக் காண்பதுவும் நன்றே நலமிக்க
நல்லார்சொற் கேட்பதுவும் நன்றே—நல்லார்
குணங்க ளுரைப்பதுவும் நன்றே யவரோ
டிணங்கி யிருப்பதுவும் நன்று. (

தீயாரைக் காண்பதுவும் தீதே திருவற்ற
தீயார் சொற் கேட்பதுவும் தீதே—தீயார்
குணங்க ளுரைப்பதுவும் தீதே யவரோ
டிணங்கி யிருப்பதுவுந் தீது. (

நெல்லுக் கிறைத்தநீர் வாய்க்கால் வழியோடிப்
புல்லுக்கு மாங்கே பொசியுமாம்—தொல்லுலகில்
நல்லா ரொருவருளரே லவர் பொருட்
டெல்லார்க்கும் பெய்யும் மழை. (

பண்டு முளைப்ப தரிசியே யானாலும்
விண்டுமி போனால் முளையாதாம்—கொண்டபேர்
ஆற்ற லுடையார்க்கும் ஆகா தளவின்றி
ஏற்ற கருமஞ் செயல். (1

டல்பெரிது தாழை மகிழினிது கந்தம்
டல் சிறிய ரென்றிருக்க வேண்டா—கடல்பெரிது
ண்ணீரு மாகா ததனருகே சிற்றூறல்
ண்ணீரு மாகி விடும். (11)

வையாகிக் கொம்பாகிக் காட்டகத்தே நிற்கும்
வையல்ல நல்ல மரங்கள்—சபைநடுவே
ட்டோலை வாசியா நின்றான் குறிப்பறிய
ாட்டா தவனன் மரம். (12)

ானமயிலாடக் கண்டிருந்த வான்கோழி
ானு மதுவாகப் பாவித்துத்—தானுந்தன்
பால்லாச் சிறகைவிரித் தாடினாற் போலுமே
ல்லாதான் கற்ற கவி. (13)

வங்கை வரிப்புலிநோய் தீர்த்த விடதாரி
ங்கதனுக் காகார மானாற்போல்—பாங்கறியாப்
ல்லறிவாளர்க்குச் செய்த வுபகாரம்
லின்மே லிட்ட கலம். (14)

ற்ற குளத்தி னறுநீர்ப் பறவைபோல்
ற்றுழித் தீர்வா ருறவல்லர்—அக்குளத்தில்
காட்டியும் ஆம்பலும் நெய்தலும் போலவே
ட்டி யுறுவா ருறவு. (15)

டன் பிறந்தார் சுற்றத்தா ரென்றிருக்க வேண்டா
டன் பிறந்தே கொல்லும் வியாதி—உடன் பிறவா
ாமலையிலுள்ள மருந்தே பிணிதீர்க்கும்
ம்மருந்து போல்வாரு முண்டு. (16)

ழுதியவா ருமென் றிராமட நெஞ்சே !
ருதியவா ருமோ கருமம்—கருதிப்போய்க்
ற்பகத்தைச் சேர்ந்தோர்க்குக் காஞ்சிரங்காயீந்ததேல்
ற்பவத்திற் செய்த வினை. (17)

கற்பிளவோ டொப்பர் கயவர் கடுஞ்சினத்துப்
பொற்பிளவோ டொப்பாரும் போல்வாரே—விற்பிடித்
நீர்கிழிய வெய்த வடுப்போல மாறுமே
சீரொழுகு சான்றோர் சினம். (1

நற்றா மரைக்கயத்தில் நல்லன்னஞ் சேர்ந்தாற்போல்
கற்றாரைக் கற்றாரே காமுறுவர்—கற்பிலா
மூர்க்கரை மூர்க்கர் முகப்பர் முதுகாட்டில்
காக்கை யுகக்கும் பிணம். (1

நஞ்சுடைமை தானறிந்து நாகங் கரந்துறையும்
அஞ்சாப் புறங்கிடக்கும் நீர்ப்பாம்பு—நெஞ்சில்
கரவுடையார் தம்மைக் கரப்பர் கரவார்
கரவிலா நெஞ்சத் தவர். (2

மன்னனும் மாசறக் கற்றோனும் சீர்தூக்கின்
மன்னனிற் கற்றோன் சிறப்புடையான்—மன்னற்கு
தன்தேச மல்லாற் சிறப்பில்லை கற்றோர்க்குச்
சென்றவிட மெல்லாஞ் சிறப்பு. (2

சந்தன மென் குறடு தான்தேய்ந்த காலத்தும்
கந்தங் குறைபடா தாதலால்—தந்தம்
தனஞ்சிறிய ராயினும் தார்வேந்தர் கெட்டால்
மனஞ்சிறிய ராவரோ மற்று. (22

சார்ந்தனையும் தீயனவே செய்திடினும் தாமவரை
ஆர்ந்தனையுங் காப்பார் அறிவுடையோர்—மாந்தர்
குறைக்குந் தனையுங் குளிர் நிழலைத் தந்து
மறைக்குமாம் கண்டீர் மரம். (23

| | | | |
|---|---|---|---|
| வரி | கானம் | பற்றலர் | நீட்டோலை |
| ஆம் | ஆங்கே | நலமிக்க | காட்டகம் |
| வினை | தெங்கு | திருவற்ற | சிற்றாறல் |

| | | | |
|---|---|---|---|
| ) | தளரா | மண்ணீர் | நட்டாலும் |
| ) | தாழை | உண்ணீர் | ஆந்தனையும் |
| ர் | பருவம் | கற்பகம் | அட்டாலும் |
| ர் | அடுத்து | முகப்பர் | சீர்தூக்கின் |
| ா | கந்தம் | கற்பிளவு | ஏற்ற கருமம் |
| லை | உற்றுழி | உகக்கும் | பாங்கறியா |
| று | கற்றூர் | கற்பிலா | நீர்ப்பறவை |
| று | இறுவது | கரந்து | மேன்மக்கள் |
| ந் | அன்னம் | சந்தனம் | தருங்கொல் |
| த | தீயார் | மாந்தர் | எழுதியவாறு |
| டபு | வேங்கை | பொல்லா | மடநெஞ்சே |
| டு | கற்றாண் | நீர்கிழிய | முற்பவத்தில் |
| ல் | அடுத்து | நீரளவே | பொற்பிளவு |
| ழ் | குன்றுது | பாவித்து | வான்கோழி |
| ரிது | தலையால் | விடதாரி | மனஞ்சிறியர் |
| ம் | கொட்டி | பொசியும் | ஏற்றகருமம் |
| ற்ற | நல்லார் | நுண்ணறிவு | பெரும்பாரம் |
| லும் | உளரேல் | ஒப்பாரும் | தார்வேந்தர் |
| ட்டி | தாங்கின் | பணிவரோ | தொல்லுலகில் |
| த | தீர்வார் | தொடுத்த | உயிர்வழங்கும் |
| றம் | உறுவார் | கவையாகி | உற்றவிடத்தில் |
| வு | நெய்தல் | நீராம்பல் | அவர்பொருட்டு |
| டு | அளவல்ல | நற்றாமரை | எடுத்தகருமங்கள் |
| ச்ற | ஆகுநாள் | கார்முறுவர் | குறைக்குந்தனையும் |
| யாதி | வழங்கும் | குறிப்பறிய | சென்றவிடமெல்லாம் |

அரும்பதவுரை : தாள் - அடி, வேர். ஈரம் - இரக்கம். நீர் - ஒப்பு, சமம். அட்டாலும் - காய்ச்சினாலும். அடுத்து - மன் மேலும். உற்ற இடத்தில் - மானக்கேடு வந்தவிடத்தில். ற்றலர் - பகைவர். இறுவது - ஒடிவது. பொசியும் - கசியும். லகம் - பழமையான உலகம். பண்டு - முதலில். மகிழ் - மகிழம்பூ. ண்ணீர் - அழுக்கைப் போக்குவதற்கு உரிய நீர். பொல்லா -

அழகில்லாத. உண்ணீர் - உண்ணுவதற்குரியநீர், குடி தண்ண
விடதாரி - விஷ வைத்தியன். புல் அறிவாளர் - அற்ப ப
உடையவர். உற்றுழி - துன்பம் நேர்ந்தபோது. முற்பவ
முன்பிறவி, போன ஜன்மம். முகப்பர்—விரும்புவர். காமுறு
விரும்புவர். கரந்து - ஒளிந்து. குறடு - கட்டை. சாந்தனை
சாகும் வரையிலும். ஆந்தனையும் - முடிந்த வரையில். கு
குந் தனையும் - வெட்டுமளவும்.

கல் + தூண் = கற்றூண். சிறுமை + ஊறல் = சிற்றூறல்.
மை + சினம் = கடுஞ்சினம். கல் + பிளவு = கற்பிளவு. வில்
பிடித்து = விற்பிடித்து. நன்மை + தாமரை = நற்றாமரை. தி
அற்ற = திருவற்ற. நுண்மை + அறிவு — நுண்ணறிவு.

### பயிற்சி

1. ஆறு, வயிறு, செல்வம்—இவற்றைப்பற்றி ஒவ்வொ
வாக்கியம் எழுது.

2. சாலவுறும், ஈசன் செயல், மாந்தர் தொழில் என்று முடி
படியாக ஒவ்வொரு வாக்கியம் எழுது.

3. படி, குடி, பெருக்கு, ஏற்றம், பாடு, வாரும்—இச்சொ
களுக்கு இருபொருள் கூறு.

4. வாழ்வு, ஒழி, உளர், வித்து, கூர், ஒரு, இல்லை, நினை
வழுவா—இவை ஒவ்வொன்றும் என்ன சொல் ?

5. பழுது உண்டு வேறோர் பணிக்கு—இல்லை எ
சொல்லைப் பயனிலையாக வைத்துக் கூறு.

6. சாதி இரண்டொழிய வேறில்லை—இல்லை என்ற சொ
நீக்கிவிட்டு இவ்வாக்கியத்தைக் கருத்து மாறுபடாமல் கூறு.

### கேள்விகள்

1. தெங்கின் தன்மை என்ன ? தெங்கிற்கு உவமை
யாரைக் கூறப்பட்டுள்ளது ?

2. நல்லாருக்குச் செய்த உபகாரத்தின் தன்மை என்ன ?
மேல் எழுத்திற்கு நேர்' எது ?

3. பால், சங்கு, மேன்மக்கள்—இவர்களின் தன்மை என்
4. எடுத்த கருமங்கள் எப்போது ஆகா ? எப்போது ஆ
எதைப்போல் ?

5. 'பற்றலரைக் கண்டாற் பணியமாட்டார்' யார்? எதைப்
ல?

6. குணம், நுண்ணறிவு, செல்வம்—இவைகள் எவற்றிற்குத்
படி அமையும்?

7. எவையெவை நல்லவை? எவையெவை தீயவை?

8. 'நன்மரம்' என்பது யாவை? 'கல்லாதான் கற்றகவி'
லின்மேல் இட்ட கலம்' என்று கூறப்படுவன எவை?

9. சரியான உறவு யார்? யார் சரியான உறவினர் அல்லர்?

10. சான்றோர், கயவர் இவர்களின் சினம் எப்படிப் பட்டவை?

11. 'மன்னனிற் கற்றோன் சிறப்புடையன்'—எவ்வாறு?

12. 'மனஞ்சிறியர் ஆகமாட்டார்' யார்? எதைப்போல?

13. அறிவுடையோரின் தன்மை என்ன? மரத்தின் குணம்
ன?

14. மாமருந்து என்ன செய்யும்? அதைப் போல்வார் யார்?
ியைப் போல்வார் யார்?

15. நல்லன்னம், காக்கை, நாகம், நீர்ப்பாம்பு, மகிழ்—இவ்வு
மகளால் விளக்கப்படும் உண்மைகளைக் கூறு.

# 29. நல்வழி

(ஔவையார் அருளிச் செய்தது)

சாதி யிரண்டொழிய வேறில்லை சாற்றுங்கால்
நீதி வழுவா நெறிமுறையின்—மேதினியில்
இட்டார் பெரியோர் இடாதார் இழிகுலத்தோர்
பட்டாங்கி லுள்ள படி. (1)

வருந்தி யழைத்தாலும் வாராத வாரா
பொருந்துவன போமினென்றாற் போகா-இருந்தேங்கி
நெஞ்சம் புண்ணாக நெடுந்தூரம் தாம் நினைந்து
துஞ்சுவதே மாந்தர் தொழில். (2)

ஆற்றுப் பெருக்கற் றடி சுடுமந் நாளுமவ்வா (று)
ஊற்றுப் பெருக்கா லுலகூட்டும்—ஏற்றவர்க்கு
நல்ல குடிப்பிறந்தார் நல்கூர்ந்தா ரானாலும்
இல்லையென மாட்டா ரிசைந்து. (3)

ஒருநா ளுணவை ஒழியென்றா லொழியாய்
இருநாளுக் கேலென்றா லேலாய்—ஒருநாளும்
என்னோ வறியாய் இடும்பைக்கூ ரென்வயிறே
உன்னோடு வாழ்த லரிது. (4)

ஆற்றங் கரையின் மரமும் அரசறிய
வீற்றிருந்த வாழ்வும் விழுமன்றே—ஏற்றம்
உழுதுண்டு வாழ்வதற் கொப்பில்லை கண்டீர்
பழுதுண்டு வேறோர் பணிக்கு. (5)

பிச்சைக்கு மூத்த குடிவாழ்க்கை பேசுங்கால்
இச்சை பலசொல்லி இடித்துண்கை—சிச்சீ
வயிறு வளர்க்கைக்கு மானம் அழியா
துயிர்விடுகை சால வுறும். (6)

ாடுபட்டுத் தேடிப் பணத்தைப் புதைத்துவைத்துக்
கடுகெட்ட மானிடரே கேளுங்கள்—கூடுவிட்டிங்
ாவிதான் போயினபின் யாரே யனுபவிப்பார்
ாவிகா ளந்தப் பணம்.

ன்றை நினைக்கி னதுவொழிந்திட் டொன்றுகும்
அன்றி யதுவரினும் வந்தெய்தும்—ஒன்றை
ினையாத முன்வந்து நிற்பினும் நிற்கும்
ானையாளு மீசன் செயல்.

ஆறிடு மேடும் மடுவும்போ லாஞ்செல்வம்
மாறிடும் ஏறிடும் மாநிலத்தீர்—சோறிடும்
தண்ணீரும் வாரும் தருமமே சார்பாக
உண்ணீர்மை வீறும் உயர்ந்து.

பூவாதே காய்க்கும் மரமுமுள மக்களுளும்
ஏவாதே நின்றுணர்வார் தாமுளரே—தூவா
விரைத்தாலும் நன்றாகா வித்தெனவே பேதைக்
குறைத்தாலுந் தோன்று துணர்வு.

| | | | |
|---|---|---|---|
| ஏல் | இடும் | பூவாதே | பாடுபட்டு |
| கூர் | வீறும் | ஏவாதே | இடாதார் |
| பணி | உணவு | இடும்பை | பட்டாங்கு |
| ஆவி | தூவா | இசைந்து | நெறிமுறை |
| மடு | பேதை | ஏற்றவர் | உலகூட்டும் |
| மேடு | வாரும் | மாந்தர் | ஒழிந்திட்டு |
| காலை | உண்கை | போமின் | விரைத்தால் |
| யார் | வாரா | வாராத | ஈசன்செயல் |
| நேர் | இடித்து | இட்டார் | மாநிலத்தீர் |
| சாதி | ஏற்றம் | அரசறிய | கேடுகெட்ட |
| ழுது | வருந்தி | கூடுவிட்டு | உண்ணீர்மை |
| ழிய | மேதினி | மாறிடும் | குடிவாழ்க்கை |

| | | | |
|---|---|---|---|
| ஏங்கி | வழுவா | சோறிடும் | பொருந்துவன |
| உறும் | வரினும் | சார்பாக | இழிகுலத்தோர் |
| சிச்சீ | எய்தும் | துஞ்சுவது | நல்கூர்ந்தார் |
| ஈசன் | ஏறிடும் | பெருக்கு | பிச்சைக்கு மூத்த |

**அரும்பதவுரை :** வழுவா - தவருத. மேதினி - உலகம். பட்டாங்கு - உண்மையான நூல். துஞ்சுவது - சாவது. நல்கூர்ந்தார் - ஏழைகளாகப் போயினர். ஏல் - ஏற்றுக்கொள். இடும்பை - துன்பம். பிச்சைக்குமூத்த - பிச்சை யெடுப்பதையே தொழிலாகக்கொண்ட. உண்ணீர்மை - மனத்தின் தன்மை, அகத்தின் தூய்மை. தூவா - தூவி. பேதை - அறிவில்லாதவர். கூ மிகுந்த. வீற்றிருந்த - பெருமையாக வாழ்ந்த, அமர்ந்திருந்த (என் + நோ = என்னே. சோறு + இடும் = சோறிடும். உள் நீர்மை = உண்ணீர்மை.)

## பயிற்சி

(1) பின்வரும் வாக்கியங்களில் கோடுகள் உள்ள இடங்களி ஏற்ற சொற்களை அமைக்க :

தெங்கு —— நீரை உட்கொள்ளும் —— தரும்.
நல்லவருக்குச் செய்த உபகாரம் ——.
எடுத்த கருமங்கள் —— ஆகும்.
ஆற்றல் உடையாருக்கு —— அவசியம்.
—— வேந்தர்கள் மனஞ்சிரியர் ஆகார்.
அறிவுடையோர் தமக்கு —— யே செய்வர்.

(2) 'கற்பிளவோடு' என்று தொடங்கும் செய்யுளை வாக்கியங்களாகப் பிரித்து எழுது.

(3) பின்வரும் சொற்றொடர்களில் தடித்த எழுத்துக்கள் உள்ள வார்த்தைகளுக்குச் சொல்லிலக்கணம் கூறு.

புறம் கிடக்கும், கந்தம் குறைபடாது, மடநெஞ்சே, மருந்து பிணி தீர்க்கும், கற்றுரே காமுறுவர்.

(4) பின்வரும் சொற்றொடர்களில் தடித்த எழுத்துக்கள் உள்ள வார்த்தைகள் என்ன சொற்கள் ?

எடுத்த கருமங்கள், தான் கற்ற, விண்டுமிபோனல், தன்னோரும் வாரும், புல் அறிவு, சிச்சீ வயிறு வளர்க்கைக்கு.

(5) எல்லார்க்கும் பெய்யும் மழை. ஆகாதளவின்றி ஏற்ற நமஞ் செயல். சங்கு சுட்டாலும் வெண்மை தரும்—இவ்வாக்கியங்களிலுள்ள எழுவாய், பயனிலை, செயப்படு பொருள் இவற்றைக் கூறு.

(6) தூவா விரைத்தாலும் நன்ருகா வித்தெனவே பேதைக்குரைத்தாலும் தோன்ரு துணர்வு—இதை இரண்டு வாக்கியங்களாகப் பிரித்து எழுது.

### கேள்விகள்

1. பட்டாங்கில் கூறப்படுவது என்ன?
2. மாந்தரின் தொழில் என்ன?
3. 'இல்லையென மாட்டார்' யார்? யாருக்கு? எதைப் போல?
4. 'வயிற்ருேடு வாழ்தல் அரிது' ஏன்?
5. எதற்குப் பழுதுண்டு? எப்படி வாழ்வது சிறந்தது? விழுந்ரே!—எவை?
6. பிச்சையினும் இழிவு எது?
7. நாம் எண்ணும் காரியங்கள் எப்படி யெப்படி ன்றன?
8. செல்வம் எத்தன்மைத்து? ஆகையால் செல்வம் உள்ளவர்கள் என்ன செய்யவேண்டும்?